# கருணையம்மன் அந்தாதி

பதிப்பாசிரியர்

நா. பாக்கிய சுந்தரி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

- சென்னை - 113

# கருணையம்மன் அந்தாதி

நா. பாக்கிய சுந்தரி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# BIBLIOGRAPHICAL DATA



| | |
|---|---|
| Title | : KARUṆAI AMMAṈ ANTĀTI |
| Editior | : N. BAGHIYA SUNDARI |
| Publication & Copyright | : International Institute of Tamil Studies, C.I.T. Campus, Tharamani, Madras-600 113. |
| Publication Number | : 229 |
| Language | : Tamil |
| Edition | : First |
| Date of Publication | : December, 1995 |
| Paper used | : 16 kg Creamwove |
| Size of the book | : ⅛ Demmy |
| Printing types used | : 10 Point |
| Number of copies printed | : 1000 |
| Number of Pages | : 4 + 104 |
| Price | : Rs. 22/- |
| Binding | : Paper Pack |
| Artist | : Jegan |
| Subject | : Folk ballad |
| Printer | : Pavai Printers Pvt. Ltd., 142, Jani Jan Khan Road, Royapettah Madras-600 014. Phone : 832441 |



வெள்ளி விழா வெளியீடு



டாக்டர் ச. சு. இளங்கோ
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை-600 113.

# அணிந்துரை

தமிழுக்குத் தொண்டு செய்யும் பல்வேறு அமைப்புகளில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் பங்கு கணிசமானது; உயர்வானதும் கூட. நிறுவனம் பல்வேறு துறைகளில் நுண்மாண் நுழைபுலத்தோடு ஆய்வுகளில் ஈடுபட்டுப் பல் வேறு நூல்களை வெளியிட்டுத் தமிழுக்குப் பெருமை சேர்த்து வருகிறது.

குறிப்பாக இந்நிறுவனத்தின் தொன்மைவாய்ந்த ஆயிரக் கணக்கான ஓலைச் சுவடிகளைப் பாதுகாத்து வரும் இலக்கி யத்துறையின் ஓர் அங்கமாகத் திகழும் சுவடியியல் துறை யின் செயல்பாடு பாராட்டத்தக்க ஒன்று. இத்துறையின் வழி அச்சில் வெளிவராத அழியும் நிலையிலுள்ள பல சுவடிகள் வெளியிடப்பட்டு வருகின்றன.

இவ்வாறாகத் தமிழுக்குத் தொண்டு ஆற்றிவரும் இவ் வேளையில் சுவடிகளில் புதைந்துள்ள மாணிக்கங்களைத் தமிழன்னையின் முடியில் பதித்து அழகு பார்க்கும் முக மாகவும், 'எளிய நடையில், தமிழ் நூல் எழுதிடவும் வேண் டும்' என்ற பாரதிதாசன் கோட்பாட்டிற்கு இணங்கவும் தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறப்புறு இடத்தினைப் பெற் றுள்ள சிற்றிலக்கிய வரிசையில் 'கருணையம்மன் அந்தாதி' என்னும் பிரபந்தம் அச்சேறுகிறது.

தொல்காப்பியர் செய்யுளியலில் இவ்வகை இலக்கியங் களை விருந்து, இயைபு என்னும் இருவகை வனப்புகளுள் அடக்கிக் கூறுவர். சங்க நூல்களில் பதிற்றுப்பத்தின் நான் காம் பத்து, ஐங்குறுநூற்றின் பதினெட்டாம் பத்தான தொண்டிப்பத்து ஆகியன முழுநிலை அந்தாதி இணைவைப்

பெற்றுள்ளதை அறிய முடிகிறது. பக்தி இலக்கியக் காலத்தில்தான் அந்தாதி சிற்றிலக்கிய வகையில் கிளர்ந்து எழுந்தது. இறைவனைப்பாடுபொருளாகக் கொண்டு எழுத்து, திரிவு, யமகம், வெண்பா எனப் பலவடிவங்களில் முகிழ்த்தது.

அவ்வகையில் இந்நூல் தேவாரத் திருத்தலங்களில் ஒன்றாக விளங்கும் அவிநாசி தலத்தின் சிறப்பையும் அங்கு எழுந்தருளியுள்ள அன்னை கருணாம்பிகையின் அருளிச் செயல்களையும் சுந்தரர் இத்தலத்தைக் கண்ட வரலாறு பற்றியும் இன்றைய அவிநாசி திருப்புக்கொளி என அழைக்கப்பட்டவாற்றையும் பக்திச் சுவையோடு விளக்கிக் காட்டுவது படித்து அறியத்தக்க ஒன்றாகும்.

இச்சுவடியைச் சிறப்பாகப் பதிப்பித்து அளித்த நா. பாக்கியசுந்தரி அவர்கள் பாராட்டுக்குரியவர்.

தமிழ் வளர்ச்சித் துறையின் நிதி உதவி பெற்று வெளிவரும் நூல்களில் இதுவும் ஒன்று.

நிறுவனத்தின் வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் தருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி அமைச்சர் அவர்கள் என்றும் எங்கள் நன்றிக்குரியவர்.

எங்கள் நிறுவனத்தின்பால் பேரன்பு கொண்டு, தாய்மையோடு அரவணைக்கும் தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத்துறைச் செயலாளர் திரு. இரா. கிருத்துதாசு காந்தி இ.ஆ.ப. அவர்களையும், இச்சுவடி வெளியீட்டுக்கு நிதி உதவி நல்கிய தமிழ் வளர்ச்சி இயக்கக இயக்குநர் பொறுப்பு க. பன்னீர்செல்வம் அவர்களையும் இவ்வேளையில் நெஞ்சார்ந்த நன்றியுடன் நினைவு கூருகிறேன்.

மெய்ப்புத் திருத்தம் செய்த பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை அவர்களுக்கு நன்றி.

இந்நூலைக் குறித்த காலத்தில் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த பாவை பிரிண்டர்ஸ்-க்கும் நன்றி.

**இயக்குநர்**

# பதிப்புரை

## சுவடி பற்றிய செய்திகள்

கருணையம்மன் அந்தாதி என்னும் இந்நூல் 30.3.1953இல் திரு.சி.எம் இராமச்சந்திரன் செட்டியார் என்பவரால் சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகத்திற்கு அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டு உள்ளது. இவர் கோயமுத்தூரைச் சேர்ந்தவர் என்றும் கூறப்பட்டு உள்ளது. இவர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்திற்கு மொத்தம் 100 சுவடிகள் கொடுத்துள்ளார். அதில் இந்நூலும் ஒன்றாகக் கூறப்பட்டுள்ளது.

## சுவடியின் அமைப்பு

சுவடியின் தன்மை நன்றாக உள்ளது. இடையில் ஒன்று இரண்டு ஏடுகள் காணப்படவில்லை. அதனால் 19,20,57,58ஆவது பாடல்கள் இல்லை. ஏடுகள் எல்லாம் நன்றாக உள்ளன. தொடக்கம், முடிவு சரியாக உள்ளன. ஒரு பக்கத்தில் நான்கு வரிகளால் ஆன ஒரே பாடல் காணப்படுகிறது. வரி 14 செ.மீ. நீளமும், 2.5.செ.மீ. அகலமும் உள்ள சுவடி. மொத்த ஏடுகள் 50. பழமையான சுவடி மேல்புறமும் கீழ்புறமும் சட்டம் போடப்பட்டுள்ளது

## எண்கள்

இச்சுவடிக்கென்று தனி எண்கள் எதுவும் கொடுக்கப்படவில்லை. தவிர ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் தமிழ் எண்களே தொடர்ச்சியாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

## எழுதப்பட்டுள்ள முறை

குறில் நெடில் வேறுபாடு அறிய ஒற்றை இரட்டைக் கொம்புகள் பயன்படுத்தப்படவில்லை. ஒற்றெழுத்துக்கள் புள்ளி அமைந்து உள்ளன. இவ்வேடு பிற்காலத்தில் எழுதப்பெற்றது என்பதைப் புலப்படுத்துகின்றது. இதில் உள்ள பாடல்களைத் தற்பொழுது பயன்படுத்தி வரும் எழுத்துச் சீர்திருத்தத்திற்கு ஏற்பத் திருத்தி எழுதியுள்ளேன். சில இடங்களில் 'ழ'கரத்திற்கு பதில் 'ள' கரம் எழுதப்பட்டுள்ளது. அம்முறையையும் மாற்றி எழுதி உள்ளேன். அடிக்குறிப்பில் குறித்தும் உள்ளேன்.

**சான்று:-** *திகள் - திகழ் (பா.எண்.1);*
*கார்க்க - காக்க (1); குளையும் - குழையும் (1);*
*சறுகை - சருகை (8); சிரந்தருள் - சிறந்தருள்,(8);*
*வாள்த்து - வாழ்த்து (8); மெய்யன்பறை - மெய்யன்பரை*
*சொறக்கம் - சொர்க்கம் (11)*

## யாப்பமைதி

சுவடி செய்யுள் நடையில் அமைந்துள்ளது. ஆனால் பாடல்கள் அடி சீர் என்று பிரித்து இல்லாமல் தொடர்ச்சியாக எழுதப்பட்டிருப்பதால் அவற்றைச்

சீர், அடி என்று பிரித்து எழுதி உள்ளேன். நூல் முழுமையும் ஒரேவகையான யாப்பில் அமைந்துள்ளது. பாடல்களை நினைவில் கொள்வதற்கு மிகவும் பயனுள்ளதாக இது அந்தாதி யாப்பில் அமைந்துள்ளது.

## பாடப்பட்டுள்ள முறை

பெரும்பாலான பாடல்கள் தேவியைப் புகழ்வதாகவும் சில பாடல்கள் ஆசிரியரே கூறுவது போலவும் அமைந்துள்ளன. பாடல்கள் பலவும் எளிய நடை; தெளிவாகவே அமைந்துள்ளன.

## பிழைகள் ஏற்படக் காரணம்

சுவடிகளில் பெரும்பாலும் பிழைகள் மலிந்தே காணப்படுகின்றன. இப்பிழைகள் ஒருவர் சொல்ல மற்றொருவர் எழுதும்போது ஏற்பட்ட கவனக் குறை, விரைவாக எழுதுதல், கூலிக்கு எழுதுதல், எழுதும் முறை பற்றிய போதிய அறிவின்மை, வட்டார வழக்குச் சொற்கள், கண்ணயர்வு இக்காரணங்களால் பல பிழைகள் ஏற்பட ஏதுவாகின்றன.

## எழுத்து வேறுபாடு

### *ற, ர, வேறுபாடு*

***சுவடியில் பதிப்பில்***
*சிரந்தருள் - சிறந்தருள் (8)*
*மெய்யன்பறை - மெய்யன்பரை (9)*
*உலகத்தரிவிலரே - உலகத்தறிவிலரே (30)*

### *ள, ழ, வேறுபாடு*

***பளம் - பழம் (33)***
***திருப்புகளிற் - திருப்புகழிற் (2)***
***வாள்த்துதற்கே - வாழ்த்துதற்கே (8)***
***தண்டமிள்க்கவி - தண்டமிழ்க்கவி (காப்பு)***

### *ன, ந, வேறுபாடு*

***சந்நிதி - சன்னிதி (9)***
***சுகாநந்தம் - சுகானந்தம் (2)***

## வடமொழிச் சொற்கள்

வடமொழிச் சொற்கள் பல இடம் பெற்றுள்ளன. வடமொழியிலும் எழுதப்பட்டிருப்பதாலும் ஆசிரியரே தமிழ்ப்படுத்தியிருப்பதைத் தவிர பாடல்களில் உள்ள வடமொழிச் சொற்களை உள்ளவாறே அமைத்துள்ளேன்.

***வேதம் - 34; பகிரண்டம் - 69; மயிடாசுரன் - 29;***
***அபயம் - 7***

## புராணச் செய்திகள்

1. புராணச் செய்திகள், 2. புராணக் கதைகள் என இரண்டாகப் பகுத்துக் காணலாம்

## 1. புராணச் செய்திகள்

புராண வரலாறு கூறும் சில விளக்கங்களை, சில நம்பிக்கைகளை, உருவக அமைப்புகளைப் புராணச் செய்திகளுள் அடக்கலாம்.

தேவியின் திருமணம், சிவபெருமானின் சிறப்புகள், முருகப்பெருமான், விநாயகப் பெருமான், பிரம்மன், திருமால் முதலியோர்களைப் பற்றிய புராண செய்திகள்.

## 2. புராணக் கதைகள்

புராணங்களில் பேசப்படுகின்ற பல கதைகள் இந்நூலுள் கூறப் பட்டுள்ளன. சிவபெருமான் நஞ்சுண்ட கதை, காக சருக்கம், சுந்தரர் சருக்கம் முதலியன இடம்பெற்றுள்ளன.

### மூல ஏடா

மூலபாடம் என்பது ஆசிரியர் எழுதிய மூல ஏட்டின் பாடம் ஆகும். மூல ஏடு கிடைக்கவில்லை எனில், ஆய்ந்து தேர்ந்தெடுக்கப்பட்ட சுவடியை மூல ஏடாகக் கருதிப் பதிப்பித்தல் மரபாக உள்ளது. கருணையம்மன் அந்தாதி என்ற சுவடி மூல ஏடா, அண்மை ஏடா, வழி ஏடா என ஆராய்ந்ததில் இது மூல ஏடு அன்று என அறிய முடிகிறது.

1. *இதில் காப்புப் பாடல் எனத் தனியாக ஒரு பாடல் முதற்கண் விநாயப் பெருமானைப் போற்றிக் காப்புப் பாடலாக ஆசிரியர் பாடி உள்ளார்.*
2. *இதில் 103 பாடல்கள் உள்ளன. காப்புப் பாடல் 1, நூல் 100, தனிப்பாடல் 2 = 103 பாடல்.*

நூலின் முதற்பாடல் 'திருவும் பிறையும்' எனத் தொடங்குகிறது. நூறாவது பாடல், 'கருணைப்பெருந்திருவே' என முடிந்து அந்தாதி இலக்கிய மரபுப்படி முதற் பாடலுடன் மண்டலித்து வருகிறது. எனவே, இதன் பின் வரும் இரு பாடல்களும் நூலுக்குப் புறம்பாகக் கொள்ளத்தக்கன. இவை கருணை யம்மனைப் பற்றிய தனிப்பாடல்களாகும்.

### சமயம்

**இந்நூலில் சிவபெருமான், பார்வதி தேவி, மூர்க்க நாயனார், சுந்தரர், திருஞானசம்பந்தர் முதலிய சிவத் தொண்டர்களைப் பற்றிப் பாடப்பட்டுள்ளதால் இந்நூல் சைவ சமயத்தைச் சேர்ந்ததாகவும் பக்தி இலக்கியமாகவும் கொள்ளத்தக்கது.**

# கருணையம்மன் அந்தாதி

## நூலின் பெயர்

இந்நூல் கருணாம்பிகையந்தாதி என்னும் பெயர்த்து. கருணாம்பிகை யம்மன்மீது பாடப்பெற்றதொரு அந்தாதிப் பிரபந்தமாக 100 பாடல்கள் கொண்டது. பாக்களின் நடை சிறந்துள்ளது. தேவியின் பெருமையும், அத்தேவியை வழிபடும் முறைகளும், வாழ்க்கை நிலையா மையை எடுத்து உணர்த்தி, நிலைத்த பேரா வியற்கைத்ததாகிய வாழ்க்கையை விரும்புமாறு அறிவுறுத்துகிறது.

## நூல் அமைப்பு

நூலுள் அமைந்த கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் சீர்முறைப்படி அமைத்துத் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலிலும் அமைந்த சிறப்புடைக் கருத்து அமைந்த சொல்லோ–தொடரோ பாடல்களுக்குத் தலைப்பாக தரப்பட்டுள்ளது. பாடல் பொருள் விளங்க பொழிப்புரை தரப்பட்டுள்ளது. அருஞ்சொற்களுக்குப் பொருள், இலக்கணக்குறிப்பு முதலியனவும் கொடுக்கப்பட்டுள்ளன. கற்பவர்க்கு இவை பெருந்துணையாம்.

## நூலாசிரியர்

நூலாசிரியர் ஊர், காலம், பெயர் முதலான விவரங்கள் எவையும் அறிய முடியவில்லை. நூலின் முகப்பிலோ இறுதியிலோ ஒற்றையேடுகளிலோ இவற்றைப் பற்றிய குறிப்புகள் எவையும் கிடைக்கவில்லை. நூலாசிரியர் தம்மைப்பற்றிய விவரங்களைத் தாமே தெரிவிப்பது முறையன்று என அக்கால நூலாசிரியர்கள் கருதி வந்த மரபே இதற்குக் காரணமாக இருக்கலாம். 'கருணாம்பிகை மாலை' எனற நூலை இயற்றியவரே இதனையும் இயற்றியிருக்கலாம் என ஊகிக்க வேண்டி உள்ளது. கருணாம்பிகை மாலை என்ற நூலை அளித்த ஆசிரியரே 'கருணாம்பிகை சதகம்' என்ற நூலையும் அதே வருடத்தில் கீழ்த்திசைச் சுவடி நூலகத்திற்கு அன்பளிப்பாகக் கொடுத்துள்ளார். அந்த நூலில் ஆசிரியர் பெயர் விவரமாக தரப்பட்டுள்ளது. வேளாளர் குலத்துதித்த கவிராசர் எனப்போற்றும் குன்றைநகர் வாசுதேவதீரன் என்ற சுப்பிரமணியக் கவிராயர் பாடியதாகும் என்னும் செய்தி அந்நூலில் கிடைக்கிறது. இவரும் அவிநாசித் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள கருணாம்பிகை அம்மையைப் பற்றியே பாடுவதாலும் ஒரே சமயத்தில் ஒருவரால் இந்த இரு நூல்களும் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டு இருப்பதாலும் இரு நூலையும் ஒருவரே எழுதி இருக்கலாம் என்று ஊகிக்கத் தோன்றுகிறது.

## நூல் எழுந்த காலம்

இந்நூல் எழுந்த காலத்தைக் கணிக்க நூலின் முதற்பகுதி, இறுதிப்பகுதி, எந்த இடத்திலும் எந்தவிதமான குறிப்பும் இல்லை. இந்நூலின்

சமகாலத்தவர் என்றோ சமகால நூல் என்றோ வேறு எதுவும் அறியமுடியவில்லை. கருணாம்பிகை சதகம்என்னும் ஒரு நூலும் இந்நூலை அன்பளிப்பாக அளித்த சி.எம். இராமச்சந்திரன் செட்டியார் என்பவரிடம் இருந்தே பெறப்பட்டுள்ளது. கருணாம்பிகை சதகம் எழுந்த காலமும் அறிய இயலவில்லை.

## நூல் அமைப்பு முறை

பாடல்கள் முழுவதும் அந்தாதி அமைப்பில் அமையக் காண்கிறோம். ஒவ்வொரு பாடலின் முடிவும் அடுத்த பாடலின் தொடக்கமாக அமையக் காண்கிறோம். இந்நூல் கட்டளைக் கவித்துறை யாப்பில் அமைந்துள்ளது.

நூல் முழுவதும் தேவியின் பெருமை, தேவியின் வீரம், தேவியின் புகழ், தேவியின் கடமை, தேவியின் அருள், அத்தேவியை அடைந்தவர் பெறும் பலன்கள், வணங்காதவர் அடையும் பலன்கள், வீடுபேறு, தேவியை வழிபடும் முறைகள் போன்றவை கூறப்பட்டு இருக்கின்றன.

## நூலின் பிறப்பிடம்

நூலில் பாடப்பெறும் கருணாம்பிகை அம்மை எழுந்தருளியுள்ள இடம் அவிநாசி என்றும், புக்கொளி என்றும், வாரணவாசி என்றும்,தென்காசி என்றும் நூலின் பல இடங்களில் குறிப்பிடப்பெறுகிறது.

கொங்கு நாட்டுப் பாடல் பெற்ற திருத்தலங்கள் ஏழனுள் ஒன்று 'திருப்புக்கொளி' ஆகும். அதுவே, இந்நாளில் 'அவிநாசி' என்று வழங்கப் பெறுகிறது. கோவை மாவட்டத்தில் ஒரு வட்டத்தின் தலைநகராக இது விளங்குகிறது.

அவிநாசி கோவையிலிருந்து சென்னை செல்லும் நெடுஞ்சாலையில் கோவையிலிருந்து 35 கிலோமீட்டர் தூரத்திலும், திருப்பூரிலிருந்து சுமார் 10 கிலோமீட்டருக்குள்ளும் இருக்கிறது. திருமுருகன் பூண்டிக்கும் இதற்கும் இடையே உள்ள தூரம் 5 கிலோமீட்டர்.

## *அந்தாதி*

தமிழ்ப் பிரபந்தங்களில் சமணம், பௌத்தம், வைணவம், கிருத்துவம், இஸ்ஸாமியம் ஆகிய சமயச் சார்பு உடைய நூல்கள் பல இருக்கின்றன.

இவற்றுள் சிறந்தவையாகக் கோவை, உலா, அந்தாதி, பிள்ளைத்தமிழ், பரணி, தூது, கலம்பகம் என்பவை கருதப்படுகின்றன.

96 பிரபந்தங்களுள் அந்தாதி இலக்கியம் ஒலியலந்தாதி,பதிற்றந்தாதி, நூற்றந்தாதி, பதிற்றுப்பத்தந்தாதி என நால் வகை நிலையினை பெற்று உள்ளது. அந்தாதி என்பது இலக்கியக் கூறாகவும் இலக்கிய வகையாகவும் அமைகின்றன. கலம்பகம், நான்மணிமாலை,மும்மணிக்கோவை போன்ற இலக்கியங்களில் செய்யுட்கள் தம்முள் அந்தாதித் தொடர்புற்று அமைகிறது.

சிற்றிலக்கியங்களுள் எண்ணிக்கையாலும் பொருட்சிறப்பாலும் முதலிடம் பெற்றுத் திகழும் பெருமை அந்தாதி இலக்கியத்திற்குண்டு. இவ்வந்தாதி இலக்கியம் ஒன்றே சிற்றிலக்கியங்களுள் மிகுதியான எண்ணிக்கையினவாக

வளர்ந்துள்ளது. இன்று நமக்குக் கிடைக்கும் பல்வேறு யாப்பு வகையினவாகிய 40க்கு மேற்பட்டன கிடைப்பினும் இலக்கியச் சான்றுடன் சுமார் 200 வரை கிடைக்கின்றன.[1] (திராவிடமொழி இலக்கியங்கள், டாக்டர் ச.வே.சுப்பிர மணியன் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113).

அச்சுக்கலை வளராத காலத்தில் நினைவில் பல பாடல்கள் நிற்பதற்கு அந்தாதிப் பண்பு பெரிதும் உதவியதால் பல்லிலக்கியங்களிலும் ஒரு தேவையான தன்மையாயிற்று எனலாம்.[2]

சங்க காலத்துச் சான்றோர் நூல்களிலும், இடைக்காலத்து தேவாரம் ,திருவாசகம், திருவாய்மொழி, இரட்டை மணிமாலை, மும்மணிக் கோவை, நான்மணிமாலை, கலம்பகம் போன்ற சின்னூல்களிலும் மறைமுகமாக அந்தாதி அமைப்பு காணப்படுகிறது.

கி.பி.5ஆம் நூற்றாண்டில் காரைக்காலம்மையார் பாடிய அற்புதத் திருவந்தாதி என்னும் நூலே அந்தாதி நூல்களுள் காலத்தால் முந்தியது. இதுவே முதல் அந்தாதிச் சிற்றிலக்கியமாகும்.

## பிரபந்தம்

பிரபந்தம் தொண்ணூற்றாறு என்ற எண் வரையறை பிரபந்த மரபியலாகிய நூலில் முதன்முதல் அமைந்து வீரமாமுனிவரால் சதுரகராதியில் பட்டியல் செய்தும் வழங்கப்பட்டுள்ளது.[3] இலக்கண நிலையில் இவ்வரையறை அமையினும் இலக்கியப் பெருக்கில் இன்னும் மிகப்பல இலக்கியங்கள் அமைகின்றன. ஐங்குறுநூற்றின் தொண்டிப் பத்தும் பதிற்றுப்பத்தின் நான்காம் பத்தும், பத்துப்பாடலில் அந்தாதித் தொடை தொடர்ந்து அமைவதைக் காட்ட, நூறு பாடலளவுக்கு அந்நிலை பயின்று தன் இலக்கிய வகையாக்குவதை பக்திக் காலம் அமைகின்றது (திராவிடமொழி இலக்கியங்கள், ச.வே். சுப்பிர மணியன்).

'பிரபந்தம்' என்ற சோல் வடமொழிச்சொல். செம்மையாக்கப்பட்ட என்பது பொருள். இக்காலத்தில் இதைச் 'சிற்றிலக்கியம்' என்று கூறுகிறோம். காப்பியங்களைப் பேரிலக்கியம் என்று கருதி இதனால் பிரபந்தத்தைச் சிற்றிலக்கியம் என்று சொல்லுகின்ற மரபு.[4] (பிரபந்தமரபியல்,மு. அருணாசலம்) அடியார்க்குநல்லார் காலத்தில் பிரபந்தம் என்ற சொல்லுக்குச் சிற்றிலக்கியம் என்ற பொருள் இல்லை.

'கந்த முதலாகப் பிரபந்தம் ஈறாக 28 உரு' என்பர் அடியார்க்கு நல்லார். தொல்காப்பியச் செய்யுளியலில் விருந்து என்பதற்கு விளக்கமாகப் பேராசிரியர் கூறுவது.

9ஆம் நூற்றாண்டின் இறுதியில் நாதமுனிகள் நம்மாழ்வாருடைய அருளால் ஆழ்வார் அனைவருடைய பாடல்கள் திவ்வியப் பிரபந்தம் என்றும் நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் என்றும் தொகுப்பாகப் பெயர் பெற்றன.

சதுரகராதி மற்றும் அபிதான சிந்தாமணி, பிரபந்தங்கள் 96 வகைகள் என்று கூறுகின்றன. 15ஆம் நூற்றாண்டுக்குரியது எனக் கருதத்தக்க பிரபந்த மரபியல் என்ற சிறுநூல் 96 பிரபந்தங்களைக் கூறியிருப்பது இலக்கிய வரலாற்றுச் சிறப்புடையது.

## பிரபந்த இலக்கணம் கூறும் நூல்கள்

பாட்டியல் நூல்கள் பல தோன்றியுள்ளன. அவற்றுள்:

1. *பன்னிரு பாட்டியல் - 10அம் நூற்றாண்டு, இது ஒரு தொகுப்பு நூல். இதில் 91 பிரபந்தங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.*
2. *வெண்பாப் பாட்டியல் - 62 பிரபந்தங்கள் குறிப்பிடப் பட்டுள்ளன.*
3. *நவநீதப் பாட்டியல் - கி.பி. 14ஆம் நூற்றாண்டு - 57 பிரபந்தங்கள் குறிக்கப்பட்டுள்ளன*
4. *வரையறுத்த பாட்டியல் - 14ஆம் நூற்றாண்டு.*
5. *பிரபந்த மரபியல் - 15ஆம் நூற்றாண்டு - 96 பிரபந்தங்கள்.*
6. *சிதம்பரப் பாட்டியல் - 16-ஆம் நூற்றாண்டு - 88 பிரபந்தங்கள்.*
7. *இலக்கண விளக்கப் பாட்டியல் - 17ஆம் நூற்றாண்டு - 77 பிரபந்தங்கள்.*
8. *பிரபந்தத் திரட்டு - 96 பிரபந்தங்கள்.*
9. *பிரபந்த தீபம் -*
10. *பிரபந்த தீபிகை - 82 பிரபந்தங்கள்.*
11. *சதுரகராதி -18ஆம் நூற்றாண்டு -96 பிரபந்தங்கள்*

## அந்தாதி இலக்கணம்

அந்தாதி என்னும் சொல் அந்தம், ஆதி என்னும் இரு சொற்களின் கூட்டு உருவம் ஆகும்.

> *'அவன்அவள் அதுவெனும் அவைமூ வினைமயின்*
> *தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்*
> *அந்தம் ஆதி என்மனார் புலவர்'*[5]

சிவஞானபோதம் முதல் நூற்பாவின் இறுதியடியில் அந்தம் ஆதி என்ற சொல் பயின்று வந்துள்ளது.

எனவே, அந்தாதி என்றால் நூலின் ஒவ்வொரு பாடலிலும் உள்ள இறுதி எழுத்து, அசை, சொல், சீர்,அடி இவற்றுள் ஒன்று அடுத்த பாடலின் முதலில் ஒன்றாக இணையும்படி மண்டலித்து மாலை போலத் தொடுத்து முடிப்பது அந்தாதி எனப்படும்.

ஒரு செய்யுள் முழுவதும் எளிதில் மனத்தில் கொள்ள அதன் உறுப்பாகிய எதுகை,மோனை, முரண் முதலிய தொடைகளும் அவற்றின் வகைகளும் உதவின.

## பெயர் பெறும் முறை

இவ்விலக்கியங்கள் இறைவன், இறைவி, ஞானக்குரவர், அடியவர்கள் ஆகியோர்களைப் பாட்டுடைத் தலைவர்களாக வைத்துப் பாடப்பெற்று உள்ளன.அழகர் அந்தாதி, சிவபெருமான் அந்தாதி - இறைவன். அபிராமி அந்தாதி,உலகுமையம்மை அந்தாதி - இறைவி, குணங்குடி நாதர்

பதிற்றுப்பத்தந்தாதி, ஞானக்குரவர்,திருஞானசம்பந்தர் அந்தாதி - அடியார். இவையன்றி ஊரின் பெயரொடும் பல அந்தாதிகள் உள்ளன. திருச்சிராப்பள்ளி அந்தாதி, கழுகுமலை ஓரெழுத்தந்தாதி, சென்னைக் கந்தர் இதழகலந்தாதி, திருத்தில்லை நிரோட்டக யமக அந்தாதி, மதுரை பதிற்றுப்பத்தந்தாதி, நூல் பெயரின் இறுதியில் அந்தாதி இலக்கியப் பிரிவின் பெயர் பெரும்பாலும் சேர்ந்து வருதல் உண்டு - ஆதி வயலூர் அந்தாதி.

## அந்தாதி-பொருளமைதி

அந்தாதியில் பெரும்பாலும் ஒரே பொருளமைப்பே இடம்பெற்றுள்ளது எனலாம். இறைவனையோ, இறைவியையோ, பாட்டுடைத் தலைவர் யாராயினும் அவரைத் துதித்துப் போற்றுதலே இவ்விலக்கியத்தின் பொதுவான பொருளமைதி எனலாம். உலா, தூது, பள்ளு, பரணி போன்ற பிற சிற்றிலக்கியங்களில் நாம் காணும் பொருட்சிறப்பு இங்கு இல்லை.

## அந்தாதி-பாட்டு எல்லை

இவ்வந்தாதிச் செய்யுட்கள் ஏழு முதல் ஆயிரம் பாட்டு இறுதியாகத் தொடர்ந்து வருவன. சடகோபர் திருவாசிரியம் - ஏழு பாட்டு அந்தாதி. சடகோபர் திருவாய்மொழி ஆயிரம் பாடல் கொண்ட அந்தாதி.

## பிற இலக்கியங்களில் அந்தாதி

தேவாரம், திருவாசகம், திருவாய்மொழிகளில் அந்தாதி அமைப்புகள் காணப்பெறுகின்றன எனினும் அந்தாதி என்ற சிறப்பு பெயர் பெறவில்லை. அந்தாதி யாப்பு அமைதி பொருந்திய நூல்கள் பிற்காலத்தில் பல உளவெனினும் ஏனைய பல நூல்களில் அந்தாதி மணம், அந்தாதி யாப்பு பல இடங்களில் அமைந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. சங்கப் புலவர்கள் பலர் சொல் அந்தாதி அடியந்தாதி ஆகியவற்றைத் தம் பாக்களில் பாடியுள்ளனர்.

*'நீர் உயர நெல் உயரும்*
*நெல் உயரக் கோன் உயரும்*
*கோன் உயரக் குடி உயரும்*
*குடி உயரக் கொற்றம் உயரும்'* *(ஔவை, நீதி வெண்பா)*

*சிலப்பதிகாரம் கானல் வரி: 2,3,4,9:*

*'மன்னுமாலை வெண்குடையான்*
*வளையாச் செங்கோலது வோச்சி*
*கன்னி தன்னைப் புணர்ந்தாலும்*
*புலவாய் வாழி காவேரி*
*கன்னி தன்னைப் புணர்ந்தாலும்*
*புலவா தொழில் கயற் கண்ணாய்*
*மன்னு மாதற் பெருங் கற் பென்*
*றறிந்தேன் வாழி காவிரி.'*[6]

இவ்வாறு சிலப்பதிகாரத்தில் சொல் அந்தாதியும் அடியந்தாதியும் விரவி வந்து உள்ளது.

அந்தாதி என்னும் இலக்கிய மரபு பற்றி கி.பி. 9ஆம் நூற்றாண்டில் தோன்றிய இலக்கண ஆசிரியர்கள் பின்வருமாறு அளிக்கின்றனர்.

*'அந்த முதலாத் தொடுப்ப தந்தாதி*
*அசையினும் சீரினும் அடிதொறும் இறுதியை*
*முதலா இசைப்பின் அஃதந்தாதித் தொடையே'*[7] *(காரிகை,)*

*'பத்தாதி நூறந்தம் பல்சந்த மாலையாம்*
*ஒத்தாய வெண்பா ஒருநூறு - ஒத்தசீர்*
*அந்தாதி யாகும். கலித்துறையும் அவ்வகையே*
*வந்தால் அதன் பேர் அவை'.*

## அந்தாதியின் வகைகள்

அந்தாதி என்பது அந்தாதி என்னும் பெயரில் பிரபந்த இலக்கண நூல்களில் இடம்பெறவில்லை என்பது. இதனை, 1. பல்சந்தமாலை 2. ஒலியலந்தாதி, 3. பதிற்றந்தாதி, 4. நூற்றந்தாதி, 5.பதிற்றுப்பத்தாந்தி என்ற தலைப்பின் கீழ் கூறப்படுகின்றன.

## வெண்பா அந்தாதி

நூறு வெண்பாக்களால் அந்தாதி அமைப்பு பாடப்பெற்றது. நேரிசை வெண்பாவே இதனுள் அதிகமாகப் பயின்று வரும் இனமாகும். இதற்குரிய இலக்கணத்தை வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல் கூறுகின்றது

## கலித்துறை அந்தாதி

நூறு கட்டளைக் கலித்துறைப் பாடல்களால் அந்தாதி யாப்பு அமையப்பாடப்பெற்றது. இதன் இலக்கணத்தை வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல் முதலியன கூறுகின்றன.

## பதிற்றந்தாதி

வெணபாவினாலோ, கலித்துறையினாலோ, பத்துப்பாடல் அந்தாதி யாப்பில் அமையுமாறு பாடப்படுவது. ஒரு பாட்டினுள்ளே அந்தாதி தொடை அமைந்த அந்தாதிப் பாடல்களும் உள.

அந்தாதி, அந்தத்தை ஆதியாக உடையது. வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. அந்த ஆதி என்று பிரிக்க வடமொழித் தொடராதலின் அந்தாதி எனத் தீர்க்க சந்தியாகப் புணர்ந்தது என விளக்கம் கூறுவர்.

## அந்தாதிப் பகுப்பு

இச்சிற்றிலக்கியம் பல்வேறு சந்தங்களையும் கொண்டு பல்வேறு பாக்களையும் அடிப்படையாகக் கொண்டு வருகின்றது எனலாம். அறுசீர் ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கொச்சகக் கலிப்பா, எழுசீர் ஆசிரிய விருத்தம், எண்சீர் ஆசிரிய விருத்தம் முதலான இன்னும் பிற செய்யுள் நிலைகளைக் கொண்டும் அந்தாதி இலக்கியங்கள் படைக்கப்படுகின்றன.

வெண்பா அந்தாதி, கலித்துறை அந்தாதி ஒருவகை. ஓசைக்குப் பத்தாகப் பத்து வகை. ஓசையில் பலவகை விருத்தங்களாலும் பாடப்படும் பதிற்றுப் பத்தந்தாதி மற்றொரு வகை. வண்ணமும் கலை வைப்பும் தவறாமல் பதினாறு

கலை வைப்பும் ஒரே பாடலில் அமைத்து அப்படி முப்பது பாடல் அந்தாதி யாக இயற்றுவது ஒலியலந்தாதி அவ்வாறு முப்பத்திரண்டு கலை வைப்பும் ஒரே பாடலில் அமைத்து முப்பது பாடல் அந்தாதியாக வருவது கலியந்தாதி.

*'வெண்பா நூற்றினா லேனும் கலித்துறை*
*நூற்றினா லேனும் அந்தாதித்து உரைப்பது*
*நூற்றந் தாதியாம் நுவலுங் காலே'* (மு.வீ.யா.ஒ.)

*'வெற்றி வெண்பா நூறினாலும் கலித்துறையின்*
*விண்டு வந்து நூற தேனும்*
*வினவி அந்தாதித்து உரைத்தல் நூற்றந்தாதி*
*நூறு, சார்ந்து பத்துஓர் இசையாம் பதின்பத்து அந்தாதி*

(சுவாமி)

## பதிற்றுப் பத்தந்தாதி

ஒவ்வொரு பத்துப் பாடலும் ஒவ்வொரு சந்தமாகப் பல்வேறு சந்தங்களால் அந்தாதி யாப்பில் அமையுமாறு நூறு பாடல்கள் பாடப்பெறுவது. இதனைப் பல்சந்தமாலை என்ற பெயராலும் குறிப்பிடுவர். இதன் இலக்கணம் வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல் கூறுகின்றன. இதுவும் 96 வகை பிரபந்தங்களில் ஒன்று.

*'அகவல் விருத்தம் வகுப்பிவை யொன்றிற்*
*பத்து முதலா நூறு வரையில்*
*சந்த மேவா அந்தாதித்துச்*
*சாற்றுவது பல்சந்த மாலை என்ப'* (பி.ம.)

## ஒலியலந்தாதி

பதினாறு கலை ஓரடியாக வைத்து நாலடி க்கு அறுபத்து நான்கு கலையாக வகுத்துப் பல சந்தமும் வண்ணமும் கலை வைப்பும் தவறாமல் வரும் நூல். இதன் இலக்கணத்தை இலக்கண விளக்கப் பாட்டியல் கூறுகிறது. இது 96 வகை பிரபந்தங்களில் ஒன்றாகும்.

*'வெண்பாப் பத்துக் கலித்துறை பத்துப்*
*பண்புற மொழிதல் பதிற்றந்தாதி'* (இ.வி.)

*'ஈரைந்து வெண்பாக் கலித்துறை ஈரைந்து*
*அரும்பொருள் புலப்பட அந்தாதித்துப்*
*பாடுவன பதிற்றந்தாதி யாகும்'* (மு.வீ.யா.)

*'பத்து வெண்பாக் கலித்துறை பத்துடன் பொருள்*
*பற்றிடுந் தன்மை தோன்றப்*
*பலசிறப்புற்ற அந்தாதியாய்ப் பாடுவது*
*பண் பதிற்றந் தாதியாம்'* (பி.தீ.)

## நூற்றந்தாதி

நூறு வெண்பாக்களாலோ நூறு கலித்துறையாலோ அந்தாதி யாப்பில் பாடப்பெறும் நூல் வெண்பா அந்தாதி, கலித்துறை அந்தாதி. பொதுவாக நூற்றந்தாதி. இதன் இலக்கணம் இலக்கண விளக்கப் பட்டியலில் கூறப்பட்டு இருக்கிறது. இதுவும் 96வகைப் பிரபந்தங்களில் ஒன்று.[8]

*'நூறு வெண்பா நூறு கலித்துறை*
*கூறுதல் நூற்றந்தாதிக் கோளே'* *(இ.வி.)*

*'வெள்ளை அருங்கலித்துறை என்று*
*அலை செறிநூறுஅந்தாதியாய் வருவதே* *(தொ.வி.)*

*'வெண்பா நூற்றிலாலேனும் கலித்துறை*
*நூற்றிவாலேனும் அந்தாதித்து உரைப்பது*
*நூற்றந் தாதியாம் நுவலுங் காலே'* *(மு.வீ.யா.ஒ.)*

*'வெற்றி வெண்பா நூறினாலும் கலித்துறையின்*
*விண்டுவந்து நூறதேனும்*
*வினவி அந்தாதித்து உரத்தல் நூற்றந்தாதி*
*நூறு சார்ந்து பப்பத்து ஓர் இசையாம் பதின்பத் தந்தாதி*
*(சுவாமி.)*

தொடை யதிகாரத்தில்,

*'அந்தாதித் தொடை அந்தம் முதலஃ*
*தசைசீ ரடிபா முதலிய வற்றாம்' ( )*

அந்தாதி யாப்பில் முப்பது செய்யுள் பாடுவது ஒலியலந்தாதி.

இனி வெண்பா, அகவல், கலித்துறை என்ற மூன்று பாவினத்தில் பத்து வீதம் அந்தாதி யாப்பில் பாடிய நூலையும் இப்பெயரால் கூறுவர். இலக்கணம் பன்னிரு பாட்டியல் கூறுகிறது. இதுவும் 96 பிரபந்தங்களில் ஒன்று.

*'தத்தம் இனத்தின் ஒப்புமுறை பிறழாது*
*நாலடி ஈரெண் கலை ஒரு முப்பது*
*கோலியது ஒலியந்தாதியாம்'* *(ப.பா.இ.)*

*'ஈரொலிஆகிய எண்ணான்கு கலை எனச்*
*சீரியற் புலவர் செப்பினர் கொளலே'* *(ப.பா.இ.)*

*'ஈண்டிய முப்பதாய் ஈரெண் கலை வண்ணம்*
*மூண்டது ஒலியந்தாதி முப்பதாம்'* *(வெ.பா.செ.)*

*ஈட்டிய ஈரெண்கலை வண்ணச் செய்யுள்*
*இயைந்த முப்பான்*
*கூட்டிய நீடு ஒலியந்தாதி....'* *(ந.பா.செ.)*

*'வகுப்பின் ஈரெண் வண்ணச் செய்யுளுள்*
*ஓங்கிய முப்பான் ஒலியந்தாதி'* *(பிர.)*

*'ஈண்டிய வண்ணம் ஈரெண்கலை முப்பான்*
*ஆண்டது ஒலியந்தாதி ஆகும்'* *(இ.வி.)*

*பதினாறுகலை ஓரடியாக வைத்து*
*நாலடிக்கு அறுபானாலு கலை வகுத்துப்*
*பலசந்தமாக வணம் கலைவைப்பும்*
*வழுவாது அந்தாதித்து முப்பது செய்யுள்*
*பாடுவது,எட்டுக் கலையானும் வரப்பெறும்,*

*அன்றியும் வெண்பா அகவல் கலித்துறை*
*பப்பத்தாக அந்தாதித்துப்*
*பாடுவதுமாம் ஒலியந்தாதி'* *(மு.வீ.யா.ஒ.)*

### கலியந்தாதி

பாடல்தோறும் முப்பத்திரண்டு கலை வைப்பு அமையுமாறு அந்தாதி யாப்பில் 30 பாடல்கள் பாடுவது. இதன் இலக்கணத்தைப் பன்னிரு பாட்டியல் கூறுகிறது, கட்டளைச் செய்யுளேயன்றி வெண்கலியும் வரலாம் என்பது பன்னிரு பாட்டியல் தரும் குறிப்பு. குறில்,நெடில், வலி, மெலி, இடை எழுத்துகள் ஒன்றினையொன்று அடுத்து, தொடர்ந்து வரும் நிலையில் கலைகளுள்ளும், அடிகள் தம்முள்ளும் ஓர் அமைப்பு ஒப்புமை அமைவதாலேயே இச்செய்யுட் கட்டளை எனப் பெயர் பெற்றது.

*'வல்லின மெல்லின இடையின எழுத்துப்*
*புல்லி மருங்கு போகாது ஒன்றிக்*
*குறில் எனில் குறிலே நெடில் எனில் நெடிலே*
*பொருந்தி நூற்கலை கொண்டுஓர் அடியாய்த்*
*திருந்தும் இவ்வகை நான்கு அடி ஆகியும்*
*ஓரொலி ஆகியும் எண்ணான்கு ஆகிய*
*கலையொடு பொருந்தியும் குறிலும் நெடிலும்*
*முறைமுதல் வரினும் அவ்வெழுத்து ஆகியும்*
*இப்பரிசு இயன்ற முப்பது கட்டளை*
*மிக்கது கலிஅந்தாதி ஆகும்'.* *(ப. பா. இ.)*

### சிலேடையந்தாதி

இருபொருள் பயக்கும் சிலேடைப் பொருள் அமைப்போடு நூறு பாடல்கள்.

### திரிபந்தாதி

ஒரு செய்யுளின் நான்கடியிலும் முதல் எழுத்து மட்டும் திரிந்து மாறுபட்ட ஏனைய பல எழுத்துகளும் ஒத்து நின்று பொருள் வேறுபட்டு அந்தாதி யாப்பில் பாடுவது.

### யமக அந்தாதி

யமகம் என்பது வந்த சொல்லும் தொடரும் மீண்டும் வந்து பொருள் அடிதோறும் வேறுபட்டு அந்தாதி யாப்பில் பாடுவது.

### நிரோட்டக யமக அந்தாதி

ஒவ்வொரு செய்யுளையும் படிக்குங்கால் இதழ்கள் ஒட்டாதிருக்குமாறு இதழ் ஒலிகளாகிய ப,ம முதலியவை வராமல் அமைத்து அந்தாதித் தொடையமைய 100 பாடல்கள் பாடப்பெறுவது. இதனை இதழ் அகலந்தாதி என்றும் கூறுவர்

### அசையந்தாதி

செய்யுளில் ஓரடியின் ஈற்றசை மற்றையடிக்கு முதல் அசையாக வரும் தொடை.

### இயலிசை அந்தாதி

பொருளாலன்றி ஓசையால் வரும் அந்தாதி.

**எழுத்தந்தாதி**

ஒரு செய்யுளடியி னீற்றெழுத்து அடுத்த அடியின் முதலெழுத்தாக வரல்.

**சீரந்தாதி**

பாட்டில், ஓரடியின் இறுதிச்சீர் அடுத்த அடியின் முதற்சீரோடு தொடுத்துவருவது.

**செந்நடையந்தாதி**

மண்டலம் பெறாது, அடிதோறும் எழுத்து, அசை, சீர் முதலியன அந்தாதி யாதல்.

**பொருளந்தாதி**

பொருளிசை யந்தாதி.

**பொருளிசையந்தாதி**

ஓசையாலன்றிப் பொருளால் வரும் அந்தாதித் தொடை.

**மண்டலச் சீரந்தாதி**

ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதிச் சீரும் முதலடியின் முதற்சீரும் ஒன்றாய் வரப் பாடும் அந்தாதி வகை.

**மண்டல மயக்கந்தாதி**

ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதி எழுத்து அசை அல்லது சீர் முதலடியின் முதல் எழுத்து அசை அல்லது சீரோடு ஒத்து வருமாறு பாடப்படும் மயக்கந்தாதி வகை.

**மண்டல வசையந்தாதி**

ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதி அசையும் முதலடியின் முதலசையும் ஒன்றாக வரும்படி பாடப்படும் அசையந்தாதி வகை.

**மண்டலவடியந்தாதி**

இறுதிப் பாட்டின் இறுதியடியும் முதற்பாட்டின் முதலடியும் ஒன்றாய் வரும்படி அமையும் அடி அந்தாதி வகை.

**மண்டலவந்தாதி**

ஒரு செய்யுளிறுதியின் இறுதி அசை அல்லது சீர், முதலடியின் முதலெழுத்து அசை அல்லது சீருடன் ஒத்து வருமாறு பாடப்படும் அந்தாதி வகை.

**மண்டலவெழுத்தந்தாதி**

ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதி எழுத்தும் முதலடியின் முதலெழுத்தும் ஒன்றாய் வரப் பாடப்படும் எழுத்தந்தாதி வகை.

**மயக்கந்தாதி**

எழுத்து, அசை, சீர் இவற்றின் அந்தாதிகள் விரவிவரப் பாடும் அந்தாதி வகை.

## அந்தாதி இலக்கணமும் கருணாம்பிகை அந்தாதியும்

அந்தாதி என்பது ஒவ்வொரு பாடலிலும் உள்ள இறுதி எழுத்து, அசை,சொல், சீர், அடி இவற்றுள் ஒன்று. அதற்கு அடுத்த பாடலில் முதலாக வரும்படி அமைத்துப் பாடப்பெறும்; இறுதிப் பாடலின் இறுதியும் முதற்பாடலின் முதலும் ஒன்றாக இணையும்படி மண்டலித்து மாலை போலத் தொடுத்து முடிக்க பெறும். இதுவே அந்தாதி எனப்படும்.

கருணாம்பிகை அந்தாதி எனப்பெறும் இந்நூலில் ஒவ்வொரு பாடலிலும் உள்ள இறுதி எழுத்து அடுத்த பாடலில் முதலாக வரும்படி அமைத்துப் பாடப்பட்டுள்ளது. இதிலிருந்து இந்நூல் ஒரு அந்தாதி என அறிய முடிகிறது. பாடல் முழுவதும் கட்டளைக் கலித்துறை யாப்பில் அமைந்து உள்ளது. வெண்பா அல்லது கலித்துறைச் செய்யுட்கள் நூறு அந்தாதித் தொடையில் பாடப்பெறுவது பொது இலக்கணம். இவ்விலக்கணத்தின்படி கருணையம்மன் அந்தாதி அமைந்துள்ளது. இறுதிச் செய்யுளின் முடிவு முதற்செய்யுளின் தொடக்கத்தோடு மண்டலித்து மாலை போலவும் அமைந்துள்ளது.

## தலத்தின் சிறப்பு

சுந்தரமூர்த்தி சுவாமிகள் முதலைவாய்ப் பிள்ளையை அழைத்ததும், 'காசியிற் பாதி அவிநாசி என்ற முதுமொழி பெற்றதும் ஆன பல சிறப்புகள் உடையது இத்தலம். இத்திருக்கோவிலுக்குத் தென்மேற்கில் உள்ள பெரிய ஏரிதான் முதலை வாய்ப் பிள்ளையை அழைத்த இடமாக இன்றும் சுட்டப்படுகிறது. இதன் கரையில் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு ஒரு தனிக் கோயிலும் இருக்கிறது.

இறைவன் பெயர் அவிநாசியப்பர், ஊரின் பெயர் புக்கொளியூர். இப்பொழுது இறைவனின் பெயரே ஊரின் பெயராக அவிநாசி என்று வழங்குகிறது.

சமயக் குரவர்கள் நால்வரும் அருட்செயல்களைச் செய்தவர்கள். அவர்களுள் திருஞானசம்பந்தர் ஞானப்பால் உண்ட பெருந்தகை; மயிலாப்பூரில் எலும்பு, பெண்ணாகத் திருவுருக்கொள்ள அருளியவர். திருநாவுக்கரசராகிய அப்பரடிகள், தம் அருள் வாக்கினால், இடையறாப் பேரன்பால் நற்றுணையாக நமச்சிவாய மந்திரத்தைக் காதலாகிக் கசிந்து ஓதிக் கடலில் கல் தெப்பமாக மிதக்கச் செய்தார். ஆனால் அவிநாசியில் சுந்தரர் நீரில்லாத குளத்தில் நீரை வரச்செய்து அதில் முதலையை வருமாறு அருளி, எப்பொழுதோ உண்ட குழந்தை உரிய வயதுடன் வரச்செய்தது மிகவும் அரியதாகும். இதைச் சிவப்பிரகாச அடிகளார்,

*'போதமுண்ட பிள்ளையென்பு பொருகண்மாது செய்ததோ*
*காதல் கொண்டு சொல்லின் மன்னர் கன்மிதப்ப வுய்த்ததோ*
*வாய்திறந்து முதலை கக்க மகனை நீயழைத்ததோ*
*யாது நம்பி யரிதுநன் றெ னக்கியம்ப வேண்டுமே'*

என, நால்வர் நான்மணிமாலையில் கூறியுள்ளார். அத்தகைய பெருமைக் குரியது அவிநாசி. 'உரைப்பார் உரை உகந்து உள்கவல்லார்[10] தம் உச்சியில் விளங்கு அருட்சுடர் என்று அவிநாசியப்பனைப் பாடி, வழிபட்ட சான்றோர் பலர்.

அகத்தூய்மைக்கு வாய்மை நிறைந்த ஐந்தெழுத்துத் தேவை. அதனைக் கொண்டு மனவழுக்குகளாகிய அழுக்காறு, அவா, வெகுளி, வஞ்ச மாகியவற்றை மாற்ற வேண்டும். மனமும் வாக்கும் தூயதாக இறைவன் இணையடியைப் போற்றி வழிபட வேண்டும். இறைவன் திருவருளும் அவன் அருளால்தான் கிடைக்கும். ஆதலின் 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என அருளினார் மணிவாசகர். இவற்றைச் சாந்தலிங்க அடிகளார், அவிநாசியப்பனாகிய உன்னையே நம்பியுள்ளேன், அவிநாசியப்பா நீ என்னைக் கைவிட்டு விடாதே, ஆண்டருள்' என்று வேண்டுகிறார்.

*'கொள்ளே னெனினும் எழுத்தைந்தும் உள் காது யாதும்*
*தள்ளே னெனினு முனைச் சார்தவம் சார்ந்திலாரை*
*விள்ளே னெனினும் எனை நீ கை விடேல் விடேல் காண்*
*நள்ளா றுடையாய் அவிநாசி நயந்துளானே'*

*(வைராக்கிய சதகம் - தோத்திரம்)*

பரவை, தன் கேள்வராம் சுந்தரும், வழிபாட்டாளர்களாகிய ஆதி சைவரும் மகிழ்ச்சிகொள்ள, வேதம் பயிலும் பாலனாகிய அந்தணச் சிறுவனைத் தமிழ் அழைத்தது என்பதைப்,

*'பரவைதன் கேள்வனும் வந்தணக் காரரும் மகிழ்ந்திடுமாறு*
*மறைபயிலும் அந்தணச் சேயை அவிநாசியூரில் அழைத்தது*
*எண்ணில் சந்தனக் குன்றின் தலைமேல் பிறந்த தமிழ்த் தெய்வமே'*

*(தமிழலங்காரம்)*

என்று அருளியுள்ளார். தமிழ்த் தெய்வம் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள். தமிழைத் தெய்வநிலைக்கு உயர்த்திய திருத்தலம் அவிநாசி.

*தவத்திரு தி.செ.முருகதாச சுவாமிகள் என்பவர்,*

***'ஈசன் அனல்வடிவம் ஏற்று நடம்புரியும்***
***தேசதனைத் தாங்கும் திறமின்றி – வாச***
***மலரோன் முதலோர்கள் வந்துபுக் கொளித்த***
***தலமவிநா சிப்பதியே தான்'***

என்று இத்தலத்தின் சிறப்பை எடுத்துக் கூறுகிறார்:

***'நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்துப்***
***பெரிய தென்னன் மதுரையெல்லாம் பிச்சதேற்றும் பெருந்***
***[துறையாம்***
***அரிய பொருளே! அவிநாசி அப்பா! பாண்டி வெள்ளமே!***
***தெரிய வரிய பரஞ்சோதீ: செய்வ தொன்றும் அறியேனே'***

***(திருவாசகம்)***

என்பது மாணிக்கவாசகரின் புகழுரை.

## முதலையும் அதன் வாய்ப்பிள்ளையும்

*'ஒருமுதலை அவிநாசி ஒண்பொருளை*
*இசைபாடு மூரல் காணப்*
*பொருமுதலை உறுகிளைஞர் புந்தியலர்ந்(து)*
*உடலமெங்கும் புளகம் மொய்ப்பப்*

*பெருமுதலை யுறுகுளநீர் பிறழ்கரையிற்
புதல்வனையும் பேழ்வாய் ஏந்தி
வருமுதலை உகிர்அடியும் மறைமதலை
துகிரடியும் வணக்கஞ் செய்வாம்'*

*(அவிநாசிப்புராணம்)*

இப்பாடல் இத்தலத்தின் சிறப்புப் பற்றிக் கூறுகிறது.

நாவுக்கரசரும் திருத்தாண்டகத்தில், 'அணவரியன் கண்டாய், அமலன் கண்டாய், அவிநாசி கண்டாய்' எனக் காண்கிறார், நமக்கும் காட்டுகிறார்.

அருணகிரிநாதரும் 'அவிநாசிப் பெருமாளே' என்றும், 'புக்கொளி யூருடையார் புகழ்த் தம்பிரானே', 'கொங்கிற்றாக்கா ரவிநாசியில்' என்றும் திருப்புகழில் ஆறிடங்ளில் அவிநாசியைப் புகழ்ந்து பாடிப் பரவுவதைக் கண்ணுறுகிறோம்.

## கோயிலின் அமைப்பு

கோயிலின் கீழ் மேல் அளவு 218 அடி, தென் வடல் அளவு 240 அடி. மதிற்சுவர் உயரம் 12 அடி, கரடி கம்பம் உயரம் 65 அடி, நூதன இராஜகோபுர உயரம் 95 அடி என்ற அளவில் அமைக்கப்பட்டுள்ளது.

கோயிலின் முன் உயர்ந்த தீபத்தம்பம் உள்ளது. அதனடியில் மீன் வாயிற் சிவலிங்கத்தையும், முதலை வாயிற் பிள்ளையையும், தாளம் கைகொண்ட சுந்தரரையும் பார்க்கிறோம். ஐந்து இலட்சம் செலவில் 100 அடி உயரத்தில் ஏழு மாடங்கள் கொண்ட இராஜ கோபுரம் கட்டப்பெற்றுள்ளது. இது கொங்கு நாட்டிலேயே மிக உயர்ந்த கோபுரங்களில் ஒன்றாகும்.

கோயிலின் நுழைவாயிலின் முன்பு செல்வ விநாயகர் வீற்றிருக்கிறார். நுழைவாயிலின் இருமருங்கும் இரு நடன விநாயகரையும் கண்டு உயரமான கோபுர வாசற்படியை அடைகிறோம். உயரத்தை அறியத் தலை நிமிர்ந்து பார்த்தால் நடை விட்டத்தின் நடுவில் உச்சிப் பிள்ளையார் ஓரடி உயரத்தில் காட்சியளிப்பதை பார்க்கலாம். 'கணபதி பூசை கைமேல் பலன்' எனும் முதுமொழிக்கேற்ப அமைந்து உள்ளது. உட்புறம் இறைவனை நோக்கியவாறு இடப்பக்கம் சுந்தரரும் வலப்பக்கம் வாதவூரரும், முன்மண்டபத்தில் ஊர்த்துவ தாண்டவ நடராசர், ஆலங்காட்டுக் காளியம்மை முதலிய ஆறு பெரிய திருவுருவங்கள் உள்ளன.

உட்பிராகாரத்துள் செய்குன்று போன்றுள்ள மேடைமேல் குமரன் அமர்ந்துள்ளார். கருவறையில் உள்ளவர் சுயம்பு மூர்த்தி. வெளிப்பிர காரத்தில் பெருங்கருணாம்பிகையின் கோவில் உள்ளது. இறைவன் திருவுருவம் சுமார் 3½ அடி உயரம்; நின்ற திருவுருவம்; எழிலான திருவுருவம். இறைவி கோயிலின் வெளி மண்டபத்தில் உள்ள சிறிய, அழ்கிய, சிறந்த வேலைப்பாடுடைய குறவன் குறத்தி, வேடுவன், வேடுவச்சி போன்ற ஆறு சிற்பங்கள் குறிப்பிடத்தக்கன.

இறைவன் பக்கத்திலேயே உட்பிரகாரத்தில் கங்கை தீர்த்தத்தினருகே கால பைரவர் காட்சியளிக்கிறார். மேலும், பிராகாரத்தில் துர்க்கையம்மன் திருவுருவம் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ்நாட்டிலுள்ள மிகப்பெரிய

தேர்களில் 'அவிநாசித் தேரும்' ஒன்று. திருவாரூர்த் தேருக்கு நிகரானது இந்தத் தேர். இந்தத் தேர் இன்றும் என்றும் ஓடுகிறது.

## பெயர்க் காரணம்

சங்க இலக்கியங்களில் ஒன்றான ஐங்குறுநூற்றில் குறிக்கப்பெறும் ஆதன் அவினி என்னும் சேரமன்னன் தொடர்பால் இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். திருமுறைகளில் திருப்புக்கொளியூர் ஊரின் பெயர். அவிநாசி அவ்வூர்க் கோயிலின் பெயர் ஆகும்.

நாசம்+இ = நாசி (நாசத்தையுடையது என்பது பொருள்). வி+நாசி என்பதில் வி - சிறப்பை உணர்த்தும் (வி+பூதி = விபூதி, வி+நாயகர் = விநாயகர் என்றாற்போல).

பின், அ+வி+நாசி = அவிநாசி எனவாயிற்று.[14] அ என்பது வடமொழி முறைப்படி எதிர்மறையை உணர்த்தும் அழிவில்லாதது என்பது பொருள். சில சமயங்களில் அவிநாசி என்பது இறைவன் பெயராகவும் அழிவில்லாதவன் என்ற பொருளில் வழங்கும். கல்வெட்டுகளில் அவினாசி, தட்சணவாரணாசி, பூலோக கைலாசமான புக்கொளியூராகிய திரு. அவினாசி ஆகிய பெயர்களால் அவிநாசி குறிக்கப்படுகின்றது.

அவிநாசி என்ற பெயர் விநாசம் இல்லாதது என்ற பொருள் பெற்றது. பிரளய காலத்தில் விநாசம் இல்லாது இருந்து, அக்கினிக்கு அஞ்சிய தேவர்களுக்குப் புக்கு ஒளிந்து கொள்ள இடம் தந்ததினால் புக்கொளியூர் என்ற பெயரும் பெற்றது, என்று இவ்வூர்த் தலபுராணம் பேசுகிறது.

*'பொழிலாருஞ் சோலைப் புக்கொளியூரிற் குளத்திடை'*
*'புள்ளேறு சோலைப் புக்கொளியூரிற் குளத்திடை'*
*'புக்கொளி யூரவி நாசியே'*[15]

என்பன நூல் சான்றுகளாகின்றன.

'அரிய பொருளே அவிநாசியப்பா' என்ற மாணிக்கவாசகப் பெருமான் திருவாக்கியம், அவிநாசி என்னும் பெயர் போற்றப் பெறுவதைக் காணலாம்.

***'அவிநாசியன்னை லடியிணையைப் போற்றி***
***அவிநாசி மான்மியஞ்சொல் வாம்'***[16]

**இது அவிநாசி என்றும், புக்கொளியூரென்றும், தென்கயிலை என்றும், தென்காசி என்றும் பல காரணப் பெயர்களுடையது என்பது சிவத்தல மான்மியம். இது காந்த மகாபுராணத்திலே சிவமான்மிய காண்டத்திலே அறுபதுக்கு மேற்பட்ட அத்தியாயங்களில் உள்ளது.**

**அநாதி மலமுத்த சித்துருவாய் விளங்கி நின்ற சிவபெருமான் சர்வான்மாக்களும் உய்யும் பொருட்டுத் திருக்கோயில் கொண்டருளிய தலங்கள் பலவற்றுள் காசியே மிகச் சிறந்ததாம். அக்காசியினின்றும் கிளைத்தோங்கிய அக்கிர ஸ்தலம் அவிநாசியாம். முன்னொரு காலத்தில் சிவபெருமான் பிரளய தாண்டவஞ் செய்யத் திருவுள்ளங்கொண்டு வருணனைக் கடைக்கணித்தார். அக்குறிப்புணர்ந்த வருணன் சத்த மேகங்களையும் பொழியுமாறு ஏவினான். அம்மேகங்கள் இடைவிடாது மழையைப் பொழிய உலக சராசரங்களெல்லாம் அழிந்தன. அக்காலை பிரளய தாண்டவஞ் செய்து அருளினார் சிவபெருமான்.**

பின்பு, பார்வதி தேவியாரை நோக்கி, இனி 'அக்கினி தாண்டவம்' செய்கின்றோம் என்றார். அக்கினி தாண்டவம் செய்த காலையில் அரி, அயன், முதலிய தேவர்கள் அஞ்சிப் புகுந்து ஒளிந்தமையால் 'புக்கொளியூரென்று' பெயர் பெற்றது. 'புக்கொளியூர்' என்று ஊரையும் புக்கொளி நாதன் ஈஸ்வரன் என்று சுவாமியையும் அழைத்தனர்.

சான்று:- *புக்கொளி யூர்ச்சிவ சங்கரியே - 27*
*புக்கொளி பார்பதி - 33*
*புக்கொளியண்ணல் - 36*
*புக்கொளி யெம்பெருமாட்டி - 60*
*புக்கொளி ஊர்க்கருணை - 66*
*புக்கொளியார் வலப்பால் - 70*
*புக்கொளிப் பெருமான் - 80*
*புக்கொளிவல்லி - 95*

இவை புக்கொளி பற்றி இந்நூல் தரும் செய்திகள்.

ஊழிக்காலத்தும் விநாசமின்றி இருப்பதால் அவிநாசியென்றுஞ் சொல்லப்படுகிறது. இவ்வூரில் கோயில் கொண்டுள்ள சிவனின் பெயர் அவினாசியப்பர் என்பது. கோவை மாவட்டத்தில் ஓர் வட்டத்தின் தலைநகராக விளங்குவது அவிநாசி. எனவே, சுவாமியின் பெயராலேயே அவிநாசி என்று ஊர்ப்பெயர் வழங்கப்பட்டது.

சான்று:- *நீயவிநாசிக்கிறையவளே - 83*
*இறைப்பொழுதேனுமவிநாசி லிங்கரிடத்தகலா - 84*
*அவிநாசி நிருமலையே - 89*

இவை, அவிநாசி பற்றிய நூல் தரும் செய்திகள்.

'காசியில் பாதி அவிநாசி' என்று சொல்லப்படுவதால் தென்காசி என்ற பெயரும் பொருந்துகிறது.

*தென்காசி வடகயிலை வல்லி - 3*
*தென்காசிக் கருணாலய மடக்கொற்றவையே - 52*
*தெட்சணகாசியம்பதி - 81*
*தென்காசியைப் போய் மதியர் செடிபடும் வாழ்வுகந்தார் - தனிப் 1*

இவ்வாறு தென்காசி தெக்கணகாசி என்னும் பெயர்களாக நூல் சுட்டுகிறது.

'காசியில் வாசி அவிநாசி'யல்லவா. எனவே வாரணவாசி என்றும் அழைக்கப்படுகிறது.

*வாரணவாசிப் பரம்பரர் - 8*
*வாரணவாசிப் பிரானுடனாடும் - 10*
*வாரணவாசிப் பெருங்கருணாலயமே - 62*
*வாரணவாசிப் பிரான் புயத்தை மருவும் மயிலே - 68*
*வாரணவாசியிலெண்ணான்கறமும் - 79*

என்பன வாரணவாசி என்னும் பெயரமைந்த அடிகள்.

ஊழிக்காலத்தும் அழியாது முந்நீர்ப் பெரும்பரப்பில் தோணியாய் மிதந்து விளங்குகின்றமையால் 'தோணிபுரம்' என்று பெயர் வழங்கப்பெறுகின்றது.

பெயரிலங்கு 'பிரமாபுரம் என்று புகழ்ந்து கூறப்படும் சீகாழிப்பதி போல் இத்தலமும் என்றும் அழியாது நிற்பதாகையால் அவிநாசி என்றும் பெயர் பெற்றது.

## பாட்டுடைத் தலைவியின் பல பெயர்கள்

இந்நூலின் பாட்டுடைத் தலைவி கருணாம்பிகையம்மை. நூலாசிரியர் தேவியைப் பல பெயர்களில் அழைக்கிறார். பெருங்கருணை நாயகி என்றும் சொல்வதுண்டு. கொங்குத் தமிழில் 'கருணாத்தா' என்று கூப்பிடுவார்கள். 'கருணை', 'கருணை' என்றே கருணைப் பிரகாசர் இவளைக் கொஞ்சு தமிழில் குறிப்பிடுகிறார்.

இந்நூலாசிரியர், 'கருணை' என்றே குறிப்பிடுகிறார். கருணாலய வல்லி (2); கருணை விளக்கு (5,77); கருணைப்பிராட்டி (8,64); கருணாலயச் செல்வி(10,34,59); கருணையாங் கற்பகம் (19); கருணை வடிவு (21); கருணாலய ஈஸ்வரி (30);கருணாலயப் பூங்கிளியே (49); கருணாலய மடக்கொற்றவையே (52); கருணை மணி விளக்கு (63); கருணைப் பெரு வெள்ளமே (65); கருணையுமையவளே (66); கருணை மலைவல்லி (99); கருணைப் பெருந்திருவே (100); கருணையம் பொன்கொடியே (68); இவை கருணை என்பது பற்றி நூல் தரும் செய்திகள்.

ஊழிக்காலத்தும் விநாசமின்றி இருப்பதால் அவிநாசி என்று சொல்லப்படுகிறது. இவ்வூரில் கோயில் கொண்டு உள்ள இறைவியை ஆசிரியர் அவிநாசிக்கிறையவளே (83) என்றும், அவிநாசி நிருமலையே (89) என்றும் ஊர்ப்பெயர் கொண்டு அழைக்கிறார்.

காசி என்று சொல்லப்படும் தென்காசியில் வீற்றிருப்பதால் தென்காசி வடகயிலைவல்லி (3) என்றும் தெட்சண காசியம்பதியம்மையே (81) என்றும் அழைக்கிறார்.

திருப்புக்கொளி என்று சொல்லப்படும் புக்கொளியூரில் வீற்றிருப்பதால் தென்புக்கொளியூர்ச் சுந்தரி (4); தென்புக்கொளி வேத வனக்குயிலே (26) புக்கொளியூர்ச் சிவசங்கரியே (27); புக்கொளியண்ணல் வலப்பாதியை (36) புக்கொளியம்மை (56); புக்கொளியெம்பெருமாட்டி (60); புக்கொளிப் பெருமான் புணர்வல்லவையே (80); தென்புக்கொளி நாயகியே (87); புக்கொளி வல்லி (95); தென்புக்கொளியார் வலப்பால் வளர் மின்னே (70) என்று அழைக்கிறார்.

பெருங்கருணை என்றும் சொல்வதுண்டு. பெருங்கருணாலய வானந்தச் சுந்தரியே (90); பெருங்கருணாலமே (73) பெருங்கருணாலய வால சவுந்தரி (12) என்றும் அழைக்கிறார்.

வாரணாசியில் வீற்றிருப்பதால் வாரணவாசிப் பெருங்கருணாலயமே (62) என்றும் வாரணவாசிப் பிரானுடனாடுங் கருணாலயச் செல்வி (10) என்றும் அழைக்கிறார்.

இமவான் பெற்றெடுத்த மடப்பம் பொருந்திய கொடி போன்றவளே என்பதை இமய மடக்கொடி (5); என்றும் கிரி இராசன் பெற்ற சேயே (மலையத்துவசப் பாண்டிய மன்னனின் மகள்) இமையாசல புத்திரியே (31) என்றும் அழைக்கிறார்.

வல்லிக்கொடிபோன்றவள் தேவி என்பதைஆசிரியர் வடகயிலை வல்லி (3); வல்லி (14); சுந்தரவல்லி (36); புக்கொளி வல்லி (95);என்றும் பசுங்கொடியே (96) என்றும் அழைக்கிறார்.

அவிநாசியில் எண்ணான்கு அறமும் வளர்த்ததால் அன்னபூரணி (79) என்றும் அன்பர்கள் மனத்தில் குடிகொண்டிருப்பதால் ஆலயமாய்க் குடிகொண்டவள் (97) என்றும் பரப்பிரம்ம ஞானமாகிய பேரறிவினையும் சுகானந்தமாகிய பெரும் பேற்றினையும் அளிப்பதால் பரப்பிரம்ம ஞானச் சுகானந்தமே (61) என்றும் அழைக்கிறார்.

வரிகள் நிறைந்து அழகு தரும் திருப்புயங்களோடு கூடிய சித்திரப் பாவையொத்து விளங்குவதால் பாஞ்சலி மாலையணிபவளே (13) என்றும் அழைக்கிறார். பாலிற் சிறந்த பனிமொழி (15), பாலினும் உயர்ந்த இன்பம்தரக்கூடிய மொழி பேசுபவளே என்றும், வண்டுகள் மொய்க்கின்ற அழகிய கூந்தல் உடையவள் மொய்குழலே (17,45) என்று அழைக்கிறார்.

திருமால் திருப்பாற்கடலைக் கடைந்த அன்று உண்டான நஞ்சினைச் சிவபெருமான் உண்டபோது அதனைக் கண்டத்திலே நிறுத்தி அந்த நஞ்சினை அமுதமாக ஆக்கி உயிரைக் காத்தருளிய கருணாம்பிகை என்னும் 'உத்தமியே' (25) என்றும் ஈசர்க்கமுதாக்கிய மெய்யருண் மயினே என்றும் அழைக்கிறார்.

இப்பரந்த நிலவுலகத்தினைத் தோற்றுவித்துப் பாதுகாத்து வருபவள் என்பதால் கனக்கும் புவனங்கள் யாவையும் ஈன்ற கனங்குழலே (23) என்றும் சிவசங்கரியே (98); விலோசன மெல்லியலே (74) என்றும் பல பெயர்களால் அழைக்கிறார்.

## தேவியின் சிறப்பு

### *வலப்பாகங்கரந்தாள்*

தேவி ஈஸ்வரரின் வலப்பாகம் பெற்றிருத்தல் இத்தலத்தின் சிறப்பாகும்.

சிவபெருமான் பிரளயதாண்டவஞ் செய்யுங்கால் இனி அக்கினித் தாண்டவம் செய்கின்றோம். நீ பிரணவ சொரூபியாக வரக்கடவை என்று கட்டளை இட்டார். பார்வதி தேவியார் அவ்வண்ணமே திருவுருக் கொண்டார். சிவபெருமான் காசியில் சிவலிங்கத்தில் மறைந்தருளினார். அடியேன் சின்னாள் உம்மைப் பிரிந்த தோடம் நிவர்த்தியாகும் பொருட்டு உம்மைப் பூசிக்க வேண்டும். அதற்குத் தக்க புண்ணிய பூமியை அனுக்கிரகஞ் செய்தருள வேண்டும் என்று வேண்ட, சிவபெருமான் திருவவிநாசியைக் காட்டுகிறார்.

பார்வதி தேவி அவிநாசி செல்லுங்கால் எதிரே ஒரு மாவிருக்ஷத்தைக் கண்டு இதுவே தவத்திற்குரிய இடம் என்று அங்கு சென்று தவக்கோலம் பூண்டு, தவம் மேற்கொண்டார். தேவியார் செய்யும் அருந்தவத்தைக் காணத் திருவுளங் கொண்டு விசுவநாதர் மூல லிங்கத்தினின்றும் ஒரு வேர் தென்பாலோடிச் சிவக்கொழுந்தாய்த் தோன்றி நிற்கத் தேவியார் கண்டு ஆனந்தமுற்றுப் பஞ்ச வில்வம் முதலிய பலபத்திர புஷ்பங்களாலர்ச்சித்துப் பூசித்தனர். சிவபெருமான் திருவுளம் மகிழ்ந்து காட்சி கொடுத்து சக்தியே உகந்துனக்கு எப்போது முரித்தாவது வாம பாக அன்றோ? இப்போது

உன்மீதுண்டாகிய மகிழ்ச்சியால் அப்பாகத்தை நாங்கொண்டோம். நமது பாகத்தை நீ கொள்வாய் என்று தமது வலப்பாகங் கொடுத்தருவினார்.

விநாயகர், முருகக்கடவுள், நந்திதேவர், சிவகணங்கள், சண்டேசுரர் முதலியோர், சூழ்ந்திருக்க இத்தலத்தின்கண்ணே மலரின் மணம் போல் பிரியாதிருந்து தம்மைப் பூசிப்போர்களுக்கு இம்மை, மறுமை, வீடு என்னும் பயனை எளிதிற்றருவதனால் இத்தலம் எத்தலத்தினுஞ் சிறந்தது என்று சொல்லப்படும்.

தென்காசி வடகயிலை வல்லியைப் பாகங் கரந்தாளை (3), வாரண வாசிப் பரம்பரர் தன்வலத்திற் புகுந்த கருணைப் பிராட்டி (8); புக்கொளி யண்ணல் வலப்பாதியை (36); தென்புக்கொளியார் வலப்பால் வளர்மின்னை (70) என்பன தேவி வலப்பாகம் பெற்று வீற்றிருக்கும் நிலையச் சுட்டுவன.

## தேவியின் பிற சிறப்புகள்

'சீதாபதி பரவுங்கருணாலயச் செல்வி' (34)

திருமாலாகிய இராமபிரானே வணங்கக்கூடிய கருணாலயச் செல்வி என்கிறார்.

'கும்பமு ரகத்தை ஏதாந்தரு நின்றிடு மூன்றையுங் கடந்தேறினார்க்கு நாதாந்த யோகந்தரு கருணாலய நாயகி (39) என்பதனால் நாதாந்த யோகமாகிய ஞான நெறியினை அளிக்க வல்ல சிறப்புடையவள் நீ என்கிறார்.

'சுருக்கும் பெருக்கும் பரப்பிரம்ம ஞானச் சுகானந்தரும்' (61) பேரறிவினையும் பெரும் பேற்றினையும் அளிப்பவள் தேவி என்கிறார்.

'மாதா வுதரத்துறா தடைத்தாள் சென்ம வாசலையே' (34) பிறப்பு நிலையை மீண்டும் அடையாதவாறு சென்மவாசல் என்னும் பிறவிக் கதவினை அடைத்துப் பிறவா வரமாகிய அருள்புரிந்தாள்.

'வாரணவாசியி லெண்ணான் கறமுன் வளர்த்த வன்னபூரணி (79) முப்பத்திரண்டு அறங்களையும் செய்தவளாகிய அன்னபூரணி நீ என்கிறார்.

*'ஆலிற் சிறந்த பணாடவிப் பார்முதலண்ட மெல்லாஞ்*
*சேலிற் படைப்பதும் காப்பதும் நான்முகன் சீதரனே' (15)*

ஆதிசேடனால் தாங்கப்பெறும் இந்த நில உலகத்தை எல்லாம் படைக்கிறான் நான்முகன், நான்முகனால் படைக்கப்பட்ட அனைத்து உயிர்களையும் திருமால் காக்கின்றார். இவர்களின் ஒப்பற்ற இத்தொழில் நடைபெறுவதற்குக் காரணமாக விளங்குபவள் தேவி என்கிறார்.

## அன்பர் பெறும் பரிசுகள்

தேவியின் திருவடிகளில் என்றும் நீங்காத அன்பு செய்பவர்கள் இந்நிலவுலகத்தில் உயர்ந்த விருதுகளைப் பெறுவார்கள். அவ்விருதுகள் என்று,

*'கரியுங் கவிகையுந் தேரும் பதாகினி யுங்கவனப்*
*பரியுஞ் சிவிகையும் பன்மணி யாரமும் பாலமிர்தஞ்*
*சொரியுங்கருணைச் சவுந்தரி நூபுரச் சோதிதுன்றி*
*விரியுங் கழற்கன்பு செய்வார்க் குண்டான விருதுகளே' (28)*

என ஆசிரியர் இவற்றை கூறி உள்ளார்.

### சிவனின் உயிரைக் காத்தல்

'ஈசற்கமுதாக்திய மெய்யருண் மயிலே ' (25) தேவர்களின் பொருட்டுத் திருமால் திருப்பாற்கடலைக் கடைந்த அன்று உண்டான நஞ்சினைச் சிவபெருமான் உண்டபோது அதனைக் கண்டத்திலே நிறுத்தி அந்த நஞ்சினை அமுதமாக ஆக்கி உயிரைக் காத்தருளியவள் கருணாம்பிகை தேவி என்று சிவனின் உயிரைக் காத்த பெருமை உடையவளாகத் தேவியை விளக்கி உள்ளார்.

### உறுப்புகளால் பூசித்தல்

வாயானது உன்னைத் துதித்துக்கொண்டே இருக்கும். என் கைகள் மலர்தூவித் தொழுது கொண்டிருக்கும். இரு செவிகளும் உன் பெருமைகளைக் கேட்பதில் ஆழ்ந்து கிடக்கின்றன. கண்கள் ஆனந்தக் கண்ணீர் பொழிகின்றது என ஆசிரியர் உறுப்புகள் மூலம் தேவியை உள்ளத்திலே நிலைநிறுத்தித் துதிப்பவர்கள் பெரும் பேற்றினை எய்துவார்கள் என்று கூறுகிறார்.

*'பாவிக்கச் சிந்தனை தந்தாள் தனையென்றும் பாடத்தந்தாள்*
*நாவிற் கசிந்து நறுமலர் தூவித் தற்பதத்தைச் சேவிக்கப்*
*பூசிக்கச் செங்கைதந் தாள்' (64)*

தேவியைத் துதிக்கச் சிந்தனையும், பாடுவதற்கு நாவினையும், மலர் தூவிப் பூசிக்கக் கைகளையும் கொடுத்தாள் என்று ஆசிரியர் கூறியுள்ளார்.

### மருந்தாக விளங்குபவள் தேவி

உலக மாயைகளிலே சிக்கி மயங்கி உயர்ந்த செயல் செய்ய இயலாது வருந்துகிறேன். இக்கவலையில் இருந்து நீங்கிக் கரையேற உன்னுடைய அருள் அல்லது வேறு மருந்து ஒன்றையும் அறியேன். அருள் புரிவாயாக என்கிறார்.

*'கரும்பே கவலை கடக்கமருந்*
*தயலொன் றிலாம லடைந்தே னுனை' (51)*

எனவும்,

*'மருந்திற் சிறந்த பெருங்கரு ணாலய வல்லி' (2)*

என்றும் மருந்தாக விளங்குபவள் தேவி என்றும் கூறியுள்ளார்.

### தேவியை வணங்காதவர் அடையும் பலன்கள்

*'இல்லாமையிற் புல்லர் மேற்சென்று நிற்றலு மேழமையும்*
*கல்லாமையுங் கடுந்துன்ப நோயும் கவலைமுதல் எல்லாம்' (60)*

தேவியைப் பணிந்து வணங்காதவர்கள் பெரும் துன்பமும், பிணியும், ஓயாக் கவலையும் வந்து சேரும் நிலையை அடைவார்கள் என்று ஆசிரியர் கூறியுள்ளார்.

*'பாதங் கடன்பு ரியார்கள் சற்றும் பரிவிலார்*
*யோதங்க ணீர்வரைப் பொங்குமிக் கோர்சொல் லுரையிகழ்வார்*
*போதங்க ளில்லவ ராய்த்திரி வார்கொடும் புல்லரன்றோ' (43)*

உள்ளப் பக்குவம் அடைந்த இவர்களைச் சான்றோர்கள் இகழ்வார்கள். ஞானம் சிறிதும் இல்லாதவராய் வெற்று உடலோடு திரியும் கொடும் அற்பர்களாகக் கருதப்படுவார்கள் என்கிறார்.

*'வாழார் தொழுது மலர்சொரிந் தெம்பெரு மாட்டிபொற்றா*
*டாழார் மெய்யன்பரைத் தான்பணி யாரவள் சந்நிதிமுன்*
*சூழார் தினைப்பொழு தேனுமெஞ் ஞானச் சுகப்பெருக்கி*
*லாழா ரென்செயவ ரன்றோ வங்கால இயமபடர்க்கே' (9)*

## மகளிரின் மயக்கத்தை விலக்க வேண்டல்

*'வையத்தனி வேலன்ன கண்ணியர் கொங்கைக்கும் வாளரவின்*
*பைத்தலை யல்குற்கு மேங்கிக்கண் ணாடியில் பாருலகிற்' (22)*

வேலினை ஒத்த கண்களையும், நகில், அல்குல் ஆகியவற்றை உடைய மகளிரை அடைய விரும்பி அவற்றை அடையும் செயலில் ஈடுபட்டு அலையும் என்னை நல்வழிப்படுத்தித் துணை செய்வாயாக என்று கூறுகிறார்.

*'கொண்டலை வென்ற குழலிய ராசைக் கொழுங்கனியை*
*யுண்டலை யாதுன் னருள்வழிக் கேயுயி ருய்யச்செய்வாய்' (27)*

மேகத்தை வென்ற கருமையும் அடர்த்தியும் வாய்ந்த அழகிய கூந்தலையுடைய மகளிருடைய இன்பத்தைத் தேடி அலைகின்ற அடியேன்மீது உனது அருட்கண் பார்வையைச் செலுத்தி அருள் புரிவாயாக என்றுவேண்டிக்கொள்கிறார்.

*'மையைக் கயல்விழி காட்டிய மாதர் மயக்கவெறும்*
*பொய்யைச் சிறிதும் பொருந்தாமற் புந்தியைப் போதவன்பி' (41)*

ஆடவரை மயக்கும் மகளிருடைய செயலை உண்மை என்று நம்பி அதில் மயங்காமல் தள்ளி வாழ்வாரே உயர்ந்த வாழ்க்கை உடையவர்கள் என்று மகளிரின் மயக்கத்தை விலக்கித் தேவியிடம் அன்பு கொண்டு இருப்பவர்கள் பேரின்ப வீட்டினைப் பெறுவது உறுதி என்று கூறியுள்ளார்.

தேவியை இவ்வாறு தொழாதவர்கள் மீண்டும் பிறவித் துன்பத்தை ஏற்று வருந்தப் போகின்றார்கள் என்று கூறியுள்ளார்.

## நெஞ்சிற்குக் கூறுதல்

*'புக்கொளிச் சுந்தரி தன் னெல்லைக்கு ளோடி வலஞ்சூழ்ந்*
*துருகி யெதிர் பணிந்ததில்லை' (6)*

எம்பெருமாட்டியின் கோயிலைப் பெருவிருப்பத்தோடு அடைந்து உள்ள முருகித் துதித்துப் பணிந்து நின்றாயுமில்லை. நீ இப்பிறவித் துன்பத்திலிருந்து விடுபட்டுப் பேரின்ப வாழ்வை எய்துவது எங்கனம். உன்னால் இயலாது என்று நெஞ்சிற்குக் கூறுவதாக அமைத்துள்ளார்.

*'தரவா வரமுந் தவமுமென் றேதினந் தாழ்ந்துருகிக்*
*கரவாத ரருள நீபெற்றி டாற் கனிந்தவரைப்*
*புரவாமல் நாளையெல் லாங்களித் தாய்கொடும் புன்பிறப்பில்' (55)*

உள்ளம் உருகித் தவம் இயற்றினால் அவளிடத்து இருந்து உயர்ந்த வரத்தினைப் பெறுவாய். அவ்வாறு செய்யாமல் நாளெல்லாம் வீணாய்க்

கழித்தாய். இப்பிறவி அன்றி நீ பேறு பெறுவது வேறு பிறவி இல்லை என்று கூறிக்கொள்கிறார்.

*'.... .... மனத்தையொன்றாய்க்*
*கூட்டி யசைவற்றி ருந்தே கருணையங் கொம்பையுளங்*
*நாட்டிக் குறிப்பவர்க் கரஞ்சிலம் பாலிக்கும் நாதங்களே' (42)*

' உலக மயக்கங்களை நீக்கி உள்ளத்தை ஒரே நிலையில் நிறுத்தித் தேவியை நிலைநிறுத்தி இருப்பவர்களுக்கு கரஞ்சிலம்பாலிக்கும் நாதங்களே என்று ஆசிரியர் கூறுகிறார்.

## தேவியைத் துதித்தவர் அடையும் பலன்

தேவியை இடைவிடாது உள்ளத்திலே இருத்தித் துதித்து வருபவர்கள் எல்லா வகையான செல்வங்களை நிரம்பப் பெறலாம். கல்விச் செல்வம், அழகிய வடிவம், உயர்ந்த ஒழுக்கம் ஆகிய எல்லாப் பண்புகளையும் பெற்றிடலாம் என்று கூறுகிறார்.

*'திருவுந் திறமையுஞ் செவ்வியுங் கல்வியுஏ செல்வமுஞ்சீ*
*ருருவு மொழுக்கமு முற்றிட வாம்' (21)*

## திருவடிச்சிறப்பு

விண்ணாடவர்களாகிய தேவர்கள் வணங்கும் சிறப்பு உடையவள் என்பதை,

*'விண்ணாடவர் நயந்து தொழும் ' (40)- என்கிறார்.*
*'சித்தரும் மாதவச் செல்வரும் நான்மறை தேர்பரம*
*முத்தரும் போத முனிவருஞ் செங்கை முகிழ்த்து முடி' (54)*
*'அணிமுடி சூடும்பல்லாயிர கோடி யண்டத்தமரர்*
*மணிமுடி தாழ்க்கும் பொன்னூபுரச் சீரடி' (14)*

முப்பத்து முக்கோடிதேவர்கள் அவர்களின் மணிமுடிகள் அனைத்தையும் கீழ்ப்படியச் செய்யும் பெருமை வாய்ந்தவள்.

*'கழலிணை யாவென கருத்தைத் திருத்திக் கருநரகத்*
*தழலிசை யாமற் தடுத்தாள்' (46)*

உன்னுடைய திருவடிகளிலே பொருந்தாத அடியேனுடைய உள்ளத்தைத் திருத்திக் கொடிய நரகத்தின் கொடுமையிலே சென்று உழலாதவாறு தடுத்து ஆட்கொண்டவள் என்று திருவடியைப் போற்றி உள்ளார் ஆசிரியர்.

*'சேவடி யெந்தன் சிரத்திலும் நான்சொலுஞ் செந்தமிழின்*
*பாவடி தோறும் பதித்துவைத் தாயென்ன பாக்கியமோ' (45)*

அருள் நிறைந்த உன்னுடைய திருவடியை என் தலையில் பதித்து வைத்தாய். செந்தமிழ்ப் பாக்களின் ஒவ்வொரு (அடியேன் பாடுகின்ற) தோறும் உனது திருவடிகளைப் பதித்து வைத்து இருக்கின்றாய்.

*'மெய்யை நிலை சொல்லிடும் பேதைத்*
*துணிவை யொளித்துச் சுகநெறியிற்*
*செல்லிடும் புந்தி தருங்கரு ணாம்பிகை சேவடியே' (44)*

உயர்ந்த ஞானத்தைத் தருவன கருணாம்பிகையின் திருவடிகளே என்று கூறியுள்ளார்.

பாமாலைகளை உன்னுடைய திருவடிகளே அணிவிக்கின்ற பெரும் பேற்றினை எனக்கு அளித்து உதவுவாயாக என்கிறார்.

*'பாடுஞ் செழுந்தமிழ்ப் பாமாலை யென்றுமுன் பாதத்துக்கே*
*சூடும் படிக்கருள் தேற்றிவைப் பாய்'*

என்னுடைய உயிரை உன்னுடைய மலர் போன்ற திருவடிகளிலே அடைக்கலமாக ஒப்புவிக்கின்றேன் என்கிறார்.

*'புவன பகிரண் டகோடி முழுவதும் பெற்ற*
*வன்னே யென்னாருயி ருன்னிரு தாளுக் கடைக்கலமே' (69)*

*'பூங்கொடி யேயெந் தன்பத்த தியாதெனிலுன்*
*பாடகச் சீரடிப் பேதையெக் காலமும் பண்ணுவதே' (72)*

என்னுடைய நோக்கம் அழகிய உன்னுடைய திருவடித்தாமரைகளை எக்காலமும் போற்றிப் புகழ்ந்து பாடுவதேயாகும் என்கிறார்.

*'மெல்லிய நூபுரப் பாதத்தை யேயுன்னி விம்மிவிம்மி*
*புல்லிய பாசம் பொடியாக்கி மெய்யன்பு பூண்டு' (75)*

என்னுடைய இந்தச் செயல் எல்லாம் உன்னுடைய திருவடிகளையடையும் பேரின்பச் சுவையை விரும்பி வேண்டுவதாகும்.

### தேவியின் வடிவம்

தேவியின் வடிவத்தைக் கூறும் ஆசிரியர் அவள் கூந்தல் அழகை வருணிக்கிறார்.

*'கருங்குழற் கண்மணி' (6)*
*'மொய்குழலாளை' (17)*
*'புரிகுழலும்' (32)*
*'மேகத்தை வென்ற குழலணங்கே' (49)*

மணமிக்க மலர்களை அணிந்த கரிய கூந்தலை உடையவள் என்றும், வண்டுகள் மொய்க்கின்ற அழகிய கூந்தலை உடையவள் என்றும், சுருண்ட அழகிய கூந்தலை உடையவள் என்றும், மேகத்தை வென்ற கரிய கூந்தலை உடையவள் என்றும் கூறுகிறார்.

நெற்றியை வருணிக்கும்பொழுது,

*திருவும் பிறையுந் திகழ்வா ணுதலுந் திலதமுஞ்' (1)*

இளம்பிறையின் வடிவும் அழகும் பொருந்தி விளங்கும் ஒளி பொருந்திய நெற்றியும் அந்த நெற்றியில் பொருந்திய அழகிய பொட்டும் என்கிறார்.

கண்களைக் குறிக்கும் இடத்து வேல், சேல் இவற்றுடன் ஒப்பிடுகிறார்.

*'கயலொன்றிய கட்கரும்பே' (51)*

*'வேலையுஞ் சேலையும் வென்ற விலோசன மெல்லியலே' (74)*

கூர்மையான வேலாயுதத்தைவிட கூர்மையான கண்களை உடையவள் என்றும் மீன் போன்ற கண்களை உடையவள் என்றும் குறிப்பிடுகிறார்.

வாயைக் குறிக்கும் இடத்துப் புதிய அமிழ்தம் ஒழுகும் பவளம் போன்ற சிவந்த வாயினை உடையவள் என்கிறார்.

*'புத்ததாரமுத மொழுகுஞ் செவ்வாய்' (32)*
*'வையேறுஞ் செந்துகிர் வாய்' (38)*
என்று கூறி உள்ளார்.

புன்னகையைக் குறிக்கும்போதும், சொல்லை குறிக்கும் இடத்தும், ஆசிரியர்,

*'முருந்த நகை யாடகப் பூங்கொடியே' (72)*
*பாலிற் சிறந்த பனிமொழி' (15)*
*'தென்புக்கொளி வேதவனக் குயிலே' (26)*
என்கிறார்.

காதையும், காதில் அணிந்து இருந்த அணிகலன்களையும் வருணிக்கிறார் ஆசிரியர்.

*'செல் பொருவுங் குழையும்' (1)*
*'குழலுந் திருச்செவிக் கொந்தள வோலையும்' (24)*
*'மேகங் குழைத்தோடு' (87)*

மேகத்தை ஒத்து அசையும் மகர குண்டலங்களும், தாழை மடல் போன்ற பொன்னால் ஆன ஓலைச்சுருளினை அணிந்திருந்தது என்கிறார்.

கழுத்திலே சிவபெருமான் கொடுத்த கொன்றை மாலையை அணிந்து இருந்தது என்கிறார். முத்துமாலையும் அணிந்து இருந்தது என்கிறார்.

*'கொண்டால் நஞ்சமு தாக்கிய கேள்வன் கொடுத்த கொன்றை' (98)*

இளமை வாய்ந்த அழகிய நகில்களை உடையவள், சீர்காழிப் பெருமானுக்குப் பாலூட்டிய தனங்களை உடையவள் என்பதாகத் தேவியின் நகில்களை வருணிக்கிறார் ஆசிரியர்.

*'முற்றா முகிழ்முலை' (17)*

*'முத்தாரமுஞ் சண்பையார்க் கமுதூட்டும் முலைத்தளமும்' (32)*

வரிகள் நிறைந்து அழகு தரும் திருப்புயங்களோடு கூடிய சித்திரப் பாவையொத்து விளங்குபவள் தேவி .

*'வரியே ரணிபுயத் தெண்டிசை யோரண் டவாணா*
*யறியேலையன் பாஞ்சலி மாலை யணிபவளே' (13)*

அழகிய வண்டுகள் மொய்க்கின்ற காந்தள் மலரை ஒத்ததும் அழகிய வளையல்களை அணிந்து விளங்கியதுமான கைகளைப் பெற்றிருந்தாள்.

*'கோல வண்டு சுழலும்பைங் காந்தளுஞ் சூடகக் கையும்' (24)*
*'சூடகப் பங்கையச் செங்கை மின்னே' (72)*

இடையைக் குறிக்கும் ஆசிரியர் மின்னலை வென்ற இடையினை உடையவள் தேவி என்றும் கூறுகிறார். அந்த இடையிலே மேகலை எனும் இடையணி அணிந்து விளங்கினாள் என்கிறார்.

*'மின்னைவென்ற யிடையார்' (70)*
*'வனைந்திடும் மேகலை' (87)*
*'மணிமேகலையும்' (1)*

ஓசையும் அழகும் பொருந்திய ஏழு கோவை வடமாகிய இடையணியை அணிந்தவள் தேவி என்கிறார்.

திருவடிகளிலே பொன்னால் ஆன சிலம்பை அணிந்து இருந்தாள் தேவி என்கிறார்.

*'கழலுமின் பாடகமும் பூஞ்சிலம்பும்' (24)*
*'கொத்தாருங் கிண்கிணிப் பொற்றாள்' (332)*
*'மெல்லிய நூபுரப் பாதத்தை' (75)*
*'பொற்றாளினை யாந்தெய்வத் தாமரைக்கென ' 77*

ஒத்த திருவடிகளிலே ஒளி பொருந்திய பாடகம், சிலம்பு போன்ற அணிகலன்கள் அணிந்திருந்தாள் தேவி என்கிறார்.

தேவியின் அழகைக் கூறும் ஆசிரியர் மின்னே! கருணை வடிவே! வெயிலே! கருணை மணியே! கரும்பே! நந்தாத ஒளிவிளக்கே!! பொன்னே! சூடகப் பங்கைய செங்கை மின்னே! என்றும், 'தோள் கருப்பு! வில்லியை வென்ற மின்னே என்றும் மயில் போன்றவளே, அன்னத்தை ஒத்தவளே என்றும் மல்லிகைக் கொடியினை நிகர்த்தவளே என்றும் தேவியின் வடிவத்தை ஆசிரியர் கூறுகிறார்.

## தேவியின் தாயன்பு

உலகத்தில் தாய் அன்பைவிடச் சிறந்தது எதுவும் இல்லை. தாய் அன்பே சிறந்ததாகக் கருதப்படுகிறது. பத்து மாதம் சுமந்து பெற்றுப் பாலூட்டி வளர்த்த அன்னையின் அன்பிற்கு இணை உலகில் எதுவும் இல்லை. பெற்ற பிள்ளையைப் பரிவது தாயன்றி வேறு இல்லை என்று கூறியுள்ளார்கள் சான்றோர். மனிதன் மட்டுமின்றி விலங்கு, பறவை இவைகளிலும் தாயன்பே மிகவும் புனிதமாகவும், சிறந்ததாகவும் போற்றப்படுகிறது.

'ஆய் புரி அருள்' என்றமையால் தாய் அருளைச் சிறப்பாக எடுத்து ஓதுகின்றனர், கைம்மாறு கருதாது அன்புடன் உதவுபவள் தாய். இறைவனைக் கூறுமிடத்தெல்லாம் தாயருளையே உவமையாகக் கூறுவது ஆன்றோர் வழக்கு.

*'தாயிற் சிறந்ததோர் கோயிலுமில்லை*
*தந்தை சொல் மிக்க மந்திரமில்லை*
*ஆயிரம் உறவில் பெருமைகள் இல்லை*
*அன்னை தந்தையே அன்பின் எல்லை'*

என்று உயர்வாக சொல்லப்படுகிறது தாயன்பு.

*'தாயில் சிறந்த தயாவான தத்துவனே'*

*'தாயான செல்வர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ'*

*'பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து'*

எனத் தாய்ப் பாசத்தைப் பற்றி மணிவாசகர் கூறியுள்ளார்.

*'தாயினும் இனியநின்னைச் சரணென*
*அடைந்த நாயேன்*
*பேயினும் கடையனாகிப் பிதற்றுதல்*
*செய்தல் நன்றோ'*

*'தாயினும் நல்ல தயாளுவே நின்னை உன்னித்*
*தீயின் மெழுகொத் துருகுஞ் சிந்தை வரக்காண்பேனோ'*

*'அன்னைபோல அருள் மிகுத்து*
*மன்னு ஞான வரதனே*
*என்னையே எனக் களித்த*
*நின்னை யானும் நினைவனே'*

என்று தாயன்பு பற்றித் தாயுமானவர் கூறியுள்ளார்.

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம், ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்று கூறியுள்ளார். மேலும் மாதா, பிதா, குரு, தெய்வம் என்று தாயிற்குத்தான் முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது.

கருணையம்மன் அந்தாதியில் தேவியின் தாயன்பு பற்றிக் கூறுமிடத்து முருகப்பெருமானின் தாயாகவும், விநாயகப் பெருமானின் தாயாகவும், திருஞான சம்பந்தருக்கு ஞானப்பாலை அளித்ததால் தாயாக ஆசிரியர் கூறியுள்ளார்.

## முருகக்கடவுள்

முருகன் தமிழ்க்கடவுள் என்று புராணங்கள் சொல்லுகின்றன. முருகக்கடவுள் குறிஞ்சிநிலக் கடவுள். ஆதலால் மலைக்கு நாயகன் என்றார் கிருபானந்த வாரியார். 'மலைக்கு நாயக' என்று திருக்கோண மலைத் திருப்புகழிலும் கூறியுள்ளார். அருட்பெருஞ்ஜோதியாண்டவர் ஆறுமுகக் கடவுளே என்பதைப் பிறிதொரு பாடலிலும் விளக்குகின்றார்.

*'தீப மங்கள ஜோதீ நமோநம*
*தூய அம்பல லீலா நமோநம*
*தேவ குஞ்சரி பாகா நமோநம'*[17] *(திருப்புகழ்)*

என்பது அருணகிரிநாதர் கூற்று. பழநி திருவாவினன் குடியில் எழுந் தருளியுள்ள முருகப்பெருமானைப் போற்றிப் பாடுகின்றார்.

முருகப்பெருமான் ஞானமூர்த்தி என்பதும் கீழே கொடுக்கப்பட்டுள்ள பிரமாணங்கள் மூலம் உணர்த்தப்பெறுகின்றன.

*'குருக டாக்ஷக லாவே தாகம*
*பரம வாக்கிய ஞானா சாரிய*
*குறைவு தீர்த்தருள் ஸ்வாமீ' (திருப்புகழ்)*

என்பது திருப்புகழ். கந்தபுராணத்தில் இதே கருத்தை ஆசிரியர்.

*'ஞானானந்த வுருவாகிய நாயக னியல்பை*
*யானு நீயுமா யிசைத்து மென்றாலஃ தெளிதோ'*[18] *(கந்தபுராணம்)*

என விளக்கியுள்ளார்.

குருநாதன், குருபரன், குருமூர்த்தி, ஆத்மகுரு, சிவகுரு, ஞானகுரு என்ற திருநாமங்களையுடையவனாகத் திகழ்கிறான். குருவாகக் கந்தர் அனுபூதியில் பாடியுள்ளார் ஆசிரியர்.

*'முருகன் தனிவேல் முனிநம் குருஎன்று*
*அருள் கொண்டறியார் அறியுந்தரமோ'*[19] *(கந்தர் அனுபூதி)*

முருகு என்பது அழகு, மணம், இளமை, கடவுள், தேன் எனப் பல பொருள்களைக் கொண்ட சொல். முருகு என்றால் அழகு என்பது பொருள். முருகன் என்றால் அழகன் என்பது பொருள். முருகன் எனவும் கந்தன் எனவும் அழைக்கப்படுகிறார் முருகப்பெருமான். கந்து என்றால் நடுவில் இருப்பது;சிவனுக்கும் பார்வதிக்கும் நடுவில் இருப்பதால் கந்தன் என்ற பெயர் ஏற்பட்டது.

*'குருவாய் வருவாய் அருள்வாய் குகனே'*
*'முருகன் குமரன் குகன் என்று மொழிந்*
*துருகுஞ் செயல்தந் துணுர்வென் றருள்வாய்' [20] (கந்தர் அனுபூதி)*

முருகனைக் குருவாகக் கந்தர் அனுபூதியில் பாடப்பட்டுள்ளது.

'திருமருவு புயன் அயனொடு அயிராவதக்குரிசில் அடிபரவு' என திருப்புகழில் அருணகிரிநாதர் பாடியுள்ளார். போதவன் பிரம்மன். முதல் எழுத்துக்குப் பொருள் கூறமாட்டாது சிறை புகுந்த பிரம்மதேவர், முருகனைத் துதி செய்து நலம் பெறுகின்றார்.

*'உருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்*
*கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே'21 (கந்தர் அனுபூதி)*

என்பது கந்தர் அனுபூதி.

ஆறுமுகம், சண்முகம், சுப்பிரமணியம், பழநியாண்டவர், வேலாயுதம் என்ற பெயர்களாலும் முருகன் அழைக்கப்படுகிறார். முருகன் கடம்ப மாலை அணிந்தவன். அதனால் கடம்பன் என்றும் அழைக்கப்பெறுகிறார்.

கருணையம்மன் அந்தாதியில் ஆசிரியர் முருகப்பெருமானைப் போற்றிப் பாடும் இடத்து முருகப்பெருமான் கடம்பமாலை அணிந்தவன், வேலாயுத்ததைக் கையில் ஏந்தியவன், ஆறுமுகங்களை உடையவன், அசுரரை வென்ற பெருமை உடையவன் என்றெல்லாம் சிறப்பிக்கிறார். இத்தகையச் சிறப்புகளையுடைய முருகப்பெருமானுக்குத் தாயாக விளங்கும் அம்பிகையின் அன்பையும் கூறியுள்ளார்.

*'அமரணி தானடர் திண்புயஞ் செம்புன லாறுபட*
*சமரிடு வேற்கைக் கடம்பணி வான்புயச் சண்முகப்பொற்*
*குமரனை யீன்ற கருணா லயவல்லி' (88)*

*என்று விளக்குகிறார்.*

மிகுந்த அருமை வாய்ந்த இருளை வென்ற சிறப்புடையவன் முருகப்பெருமான். அத்தகைய சிறப்புப் பொருந்திய முருகப் பெருமானுக்குத் தாயாக விளங்கும் பசுங்கிளி போன்ற அன்னையே என்று தாயாகத் தேவியைப் போற்றிப் பாடுகிறார் ஆசிரியர்.

## விநாயகர்

எந்த ஒரு காரியத்தையும் செய்யத் தொடங்கும் முன் பிள்ளையார் சுழி போட்டுத் தொடங்குவது மரபாக உள்ளது. எந்த நூலாக இருந்தாலும்

ஆசிரியர் இறைவணக்கப் பாட்டு அல்லது காப்புப் பாட்டைக் கொண்டே நூலைத் தொடங்குவார்கள். இந்த இறைவணக்கப் பாட்டு அல்லது காப்பு அனேகமாக விநாயகப் பெருமானைப் பற்றியதாகவே அமையும். தொடக்கப் பாட்டாக விநாயகனைப் போற்றிப் பாடுவதைப் பல ஆசிரியர்களும் கையாண்டுள்ளார்கள்.

விநாயகப் பெருமான் யானையின் முகத்தையும் மனித உடலையும் கொண்ட உருவமாக உள்ளார். யானை முகத்தைப் பெற்றிருப்பதால் யானை முகத்தோன் என அழைக்கப்படுகிறார். முருகப்பெருமானின் அண்ணன்.

தேவிகாலோத்திரம் உரைபாடம் என்ற நூலில் விநாயகரைப் போற்றி காப்புப் பாடலாக ஆசிரியர் பாடியுள்ளார்.

*'முக்திவினா யகன்மனத்தின் முரணறவே*
*முடுகிநிலமுதல்விளைக்கு*
*மத்திவினா யகனெனவந் தவித்தையியல்*
*பனைத்துமழித்தறத்தையாக்கும்*
*சத்திவினா யகனுயர்ந்த தானுவினா*
*யகன்றோற்றந் தருமோ நட்ட*
*சித்திவினா யகன்மதுரைச் சித்திவினா*
*யகனிருதாள் சிரத்தில் வைப்பாம்'*[22]

*'திருவுங் கல்வியுஞ் சீரும் தழைக்கவும்*
*கருணை பூக்கவுந் தீமையைக் காய்க்கவும்*
*பருவ மாய் நம(து) உள்ளம் பழுக்கவும்*
*பெருகும் ஆழத்துப் பிள்ளையைப் பேணுவாம்'*[23]

*(விருத்தாசல புராணம்)*

என விருத்தாசல புராணத்தின் துதிப்பாடலில் விநாயகரைப் போற்றிப் பாடியுள்ளார் ஆசிரியர்.

*'வாழிய புக்கொளி மேவிய தற்பர மணியேயென்*
*றூழி மறைப் பொருளோது தமிழ்க்கட லுரையேற*
*வேழிசையிற் செவிநீள்கரடக் கவுளிரு நால்வாய்ச்*
*சூழியருட் களியானை கழற் புணை துணையாமால்'*

என்று அவிநாசித் தலபுராணத்தில் விநாயகரைப் போற்றி ஆசிரியர் காப்புப் பாட்டில் பாடியுள்ளார்.

*'தற்பரமாய் நின்ற கணபதி காப்பானே'* என்று அகத்திய நூலில் விநாயகரைப் போற்றியுள்ளார்.

***'ஆதியாம் அகண்ட பரிபூரணமாய் நின்ற***
***அகண்ட பராபரத் திருந்த ஐங்கரனே காப்பு'***

என்று போற்றியுள்ளார்.

***'திருநாவுக் கரையர் முதல்உணர கோவற்குயர் கடவுள்***
***பெரியானை கணபதியின் இருதாளைப் பணிகுவனே'***[25]

என்று திரு அவதார ஆதியான திருவருள் விளக்கத் தோத்திரத்தின் தொடக்கத்தில் விநாயகரைப் போற்றி வீடேஸ்வரம் சிவசண்முக மெஞ்ஞான தேசிகர் பாடியுள்ளார்.

கருணையம்மன் அந்தாதியில் ஆசிரியர் காப்புப் பாடலாக விநாயகரைப் போற்றிப் பாடியுள்ளார்.

*'தேக்குஞ் சுவைத்தண் டமிழ்க்கவி வாணர் செவிக்கமுத*
*மாக்கும் பொருளுமலங்கா ரமுமா வரலுதரம்*
*வீக்கு மொருத்த முகத்தோவென் னாவின் மிகுமதுர*
*வாக்குந் தருவன் கருணையந் தாதி வமுழ்த்துதற்கே'*

என்று காப்புப் பாட்டில் கூறியுள்ளார்.

இத்தகைய சிறப்புகளைப் பெற்ற விநாயகப் பெருமானின் தாயாக விளங்கும் தேவியே என்றும் தேவியைப் போற்றிப் பாடியுள்ளார்.

*'கொற்றவை யேயென்றுங் கோமளை யேயென்றுங்*
*குஞ்சரத்தைப் பெற்றவ ளேயென்றும்' (53)*

உலகத் துன்பத்தையெல்லாம் போக்கவல்ல யானை முகத்தலைவனாகிய விநாயகனைப் பெற்று எடுத்த தாயே என்று துதிக்கிறது. கருணையம்மன் அந்தாதியில் ஆசிரியர் தன் உள்ள நிலையைக் கூறும் இடத்துத் தேவியை தாயாகப் போற்றி உள்ளார்.

## திருஞானசம்பந்தர்

சோழநாட்டில் வளஞ்சிறந்த திருநகரம் ஒன்று உள்ளது. அது பிரமபுரம், சண்பை, சீர்காழி என்னும் திருப்பெயர்களையுடையது. அந்நகரிலே அந்தணர் குலத்திலே கவுணிய மரபிலே சிவனார் மலரடியே சிந்திக்கும் சிவபாத இருதயர் என்பவர் ஒருவர் இருந்தார். மனைவியின் பெயர் பகவதியார். இருவரும் செய்த தவத்தினாலே திருத்தோணியப்பர் திருவருளாலே எப்பொருளிலும் சிவம் பெருக்கும் பிள்ளையார் பிறந்தருளினார்.

ஒருநாள் தந்தையார் நீராடுவதற்குச் சென்றார். பிள்ளையாரைக் கரையிலே திறுத்தித் தோணியப்பரைக் காவலாக நினைத்துக் கும்பிட்டு விட்டுக் குளத்திலிறங்கினார். நீராடித் தருப்பணம் புரிந்து, அகமருடணமென்னும் மந்திரத்தை உச்சரித்த வண்ணம் மறுபடியும் முழுகினார். பிள்ளையார் தந்தையாரைக் காணாமல் அம்மே! அப்பா! என்று பொருமினார்.

அழுகை கேட்டத் தோணியப்பர் அம்பிகையுடன் விடையின் மேலெழுந்தருளி அருகில் வந்தார். அந்தணர்க்குப் பிள்ளையாரை அளித்த காரணம் நினைத்து போலும், தம் திருவடித்தொண்டு செய்வதற்காக உமையம்மையாரை நோக்கிச் 'சிவஞானத்தைக் குழைத்த பாலைப் பொன் வள்ளத்திலேற்றி இவனுக்கூட்டுக!' என்றருளினார். அம்மையாரும் அருகில் சென்று பாலைக் கறந்து சிவஞானத்தைக் குழைத்தூட்டினார். எல்லோருக்குந் தந்தையும் தாயுமான இவர்களால் இப்படி ஆட்கொண்டருளப் பெற்றதனாலே, ஆளுடைய பிள்ளையாராயினர். பாலிற் குழைக்கப்பெற்ற சிவஞானத்தாற் சம்பந்தஞ் செய்ததனாலே 'சிவஞான சம்பந்த'ராயினர். அந்நிலையிலே சிவனடியே சிந்திக்குஞ் சிவஞானம் - பவமதனை மாற்றும் ஞானம் - உவமையில்லாத கலைஞானம் - உணர்தற்கரிய மெய்ஞ்ஞானம் ஆகிய ஞானம் பெற்றவர் பிள்ளையார் (பெரியபுராணம்).

*'ஆரணமும் உலகேழும் ஈன்றருளி அனைத்தினுக்கும்*
*காரணமாய் வளம்பெருகு கருணைதிரு வடிவான*
*சீரணங்கு சிவபெருமான் அருளுதலும் சென்றணைந்து*
*வாரிணங்கு திருமுலைப்பால் வள்ளத்துக் கறந்தருளி'.*[26]

*'எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி*
*'உண்ணடிசில்' எனஊட்ட உமையம்மை எதிர்நோக்கும்*
*கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணம் அளித்(து)*
*அண்ணலைஅங் கழுகைதீர்த் தங்கணனார் அருள்புரிந்தார்'.*[27]
**(திருத்தொண்டர் புராணம்)**

இவ்வாறு திருத்தொண்டர் புராணத்தில் பார்வதி தேவியார் திருஞான சம்பந்தருக்கு ஞானப்பால் அளித்தமையை ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமி கூறியுள்ளார்.

கருணையம்மன் அந்தாதி ஆசிரியரும் திருஞானசம்பந்தருக்குப் பார்வதி தேவியார் ஞானப்பால் ஊட்டிய வரலாற்றைக் கூறியுள்ளார்.

*'பாலையும் ஞானப் பொருளையுஞ் சம்பந்தர் பாலளித்த*
*வேலையுஞ் சேலையும் வென்ற விலோசன மெல்லியலே (74)*

திருஞானசம்பந்தருக்கு ஞானப்பாலை அளித்ததோடு அன்றி ஞானப் பொருளையும் அளித்து அருளிய அம்மையே! ஆலையிலே இடப்பட்ட கரும்புபோலச் சிற்றிடையார் மய்யலில் மயங்கித் திரிந்து, நொந்து மெலிவு உற்றேன். அத்துன்பத்தினின்று நீங்கிக் கரைசேர அருள் புரிவாயாக என்று கூறியுள்ளார். இங்கும் தேவியின் தாயன்பு பற்றிக் கூறியுள்ளார்.

சீர்காழிப் பெருமான் ஆகிய திருஞானசம்பந்தருக்குப் பால் ஊட்டிய தனங்களை உடையவள் தேவி,

*'முத்தார முஞ்சண்பை யார்க்கமு தூட்டு முலைத்தளமும்'(32)*

என்று கூறுகிறார்.

இந்நிலவுலகத்தின்கண் பொருந்தி உள்ள எல்லா உயிர்களுக்கும் தாயாக விளங்குபவள் தேவி என்று கூறுகிறார்.

*'பரந்த புவன சராசர செந்துக் கெல்லாம் தாய்' (12)*

*'கனக்கும் புவனங்கள் யாவையும் ஈன்ற கனங்குழலே' (23)*

இந்நிலவுலகத்தைத் தோற்றுவித்துப் பாதுகாத்து வருபவள் என்று தேவியைக் கூறுகிறார்.

*'பெற்ற தாயிற் சிறந்த தயாவை' (4)*

நாயைவிட இழிவான குணத்தை உடைய என்னை நீ ஆட்கொண்டது பெற்ற தாயினும் மிக உயர்ந்த உள்ளத்தை எடுத்துக் காட்டுவதாக உள்ளது.

*'அடுக்குல கீன்ற கருணைக் கடைகண்ணருளை பெற்றால்' (94)*

மேலும் கீழும் அடுக்கப்பட்ட ஈரேழு பதினான்கு உலகையும் ஈன்றவள் தேவி என்கிறார்.

## தேவியின் வீரம்

மகிடன் என்பவன் எருமை முகமும் மனித உடலும் படைத்த ஓர் அரக்கன். இவன் அருந்தவங்களைப் புரிந்து பெருந்திருவடைந்து விளங்கினான். அரக்கர்கள் பலர் இவனுக்குத் துணையாக அமைந்து நின்றார்கள். இவன் அவர்களோடு மாகிசம் என்னும் நகரில் இருந்து அரசாட்சியை நடத்தினான். செல்வத்தருக்கால் செருக்கி நின்ற இவன் எல்லோருக்குந் தொல்லைகளையே விளைவித்தான். அனைவரும் இவனுக்குப் பகைவர்களாக அமைந்து நின்றார்கள்.[28] இவனை ஒழிக்க வேண்டுமென்று எல்லோரும் இறைவனை வேண்டிக்கொண்டார்கள்.

இறைவன் சக்தியின் கூறு ஒன்றினை அனுப்பினார். அது மிகக் கடுமையான சீற்றத்துடன் வந்து இவனைக் கொலை புரிந்து சினந்தணிந்து சென்றது. கொடுமையான செயல்களைப் புரிவோர் விரைந்தழிவர் என்பது இவனாற் பெறப்பட்டது.

*'விருதிட்ட வென்றி மயிடா சுரன்புய வெற்பொடியப்*
*பொருதிட்ட வாகைப் பொலன்கொடியே' (29)*

*'மாமயி டாசுரநா ழிவலிச் செற்றவ ளேயென்று*
*வாழ்த்துமென் னாளுமென் சித்தமே' (53)*

என்று கருணாம்பிகை அந்தாதியின் ஆசிரியர் தேவியின் வீரத்தைப்பற்றிக் கூறியுள்ளார். மகிடனை அழித்து வாகை மாலை சூடியவளே என்றும் பாராட்டுகிறார்.

## *நாட்டுச் சிறப்பு*

தொடர்நிலைச் செய்யுளைப் பெருங்காப்பியம், சிறுகாப்பியம் என இருவகைப்படுத்துவர். அவற்றுள் கருணாம்பிகை அந்தாதி சிறுகாப்பியம் வகையைச் சேர்ந்தது. சிறுகாப்பிய அமைப்பின் சிறப்புகளுள் ஒன்று நாட்டுச் சிறப்பினைக் கூறுதல். காப்பியத் தலைவனின் நாட்டைச் சிறப்புப்படக் கூறுவதன் வழி தலைவனின் சிறப்பினைக் கூறுவதுடன் அவன் வாழும் நாட்டு மக்களின் பண்பாட்டுச் சிறப்பினையும் புலப்படுத்த இயலுகின்றது.

ஐம்பெருங்காப்பியங்களுள் இந்த இலக்கணமுறைக்கேற்ப அமைந்திருப்பது அக்கருத்திற்கு அரண் செய்கின்றது.

*'தேன்பெருகுஞ் சோலைத் தென்னன் வளநாடு;*
*கனியுருகிடுஞ் சோலைக் கனமதுரை நன்னாடு;*
*வாழைகிழக் கினும் வடமதுரைப் பட்டணமாம்;*
*சோலைகிழக் கினும்; துய்யபலா மேற்கினும்*
*கரும்பும் இளநீரும் கண்திறந்து மடைபாயும்;*
*கட்டுக்கலம் காணும்; கதிர்உழக்கு நெல்காணும்;*
*அரிதாள் அறுத்துவர, மறுதாள் பயிராகும்;*
*அரிதாளின் கீழாக ஐங்கலத்தேன் கூடுகட்டும்;*
*மாடுகட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல்என்று*
*ஆனைகட்டிப் போரடிக்கும் அழகான தென்மதுரை'[29]*

*(அல்லிஅரசாணி மாலை)*

இவ்வாறு மதுரைநகர் வளம் குறித்துக் கூறப்படுகிறது.

*'காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகினெற்றிப்*
*பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து*
*தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்*
*ஏமாங் கதமென் றிசையாற் றிசை போய துண்டே'*[30]

*(சீவகசிந்தாமணி-31).*

என்னும் திருத்தக்க தேவரின் பாடலும்,

*'அகிலி டும்புகை யட்டிலி டும்புகை*
*நகலி னாலை நறும்புகை நான்மறை*
*புகலும் வேள்வியிற் பூம்புகை யோடளாய்*
*முகிலின் விம்மி முயங்கின வெங்கணும்'*[31] *(கம்பராமாயணம்)*

என்னும் கம்பரின் பாடலும் நாட்டு வளத்தைச் சுவைபடப் புனைந்துரைக்கின்றன.

*'மஞ்சளு மிஞ்சியு மயங்கரில் வலயத்துச்*
*செஞ்சுளைப் பலவின் பரற்பகை யுறுக்கும்*
*கரும்பிற் றொடுத்த பெருந்தேன் சிதைந்து*
*கரும்புகழ் பொய்கைத் தூ நீர் கலக்கும்*
*குறுந ரிட்ட குவளையம் போதொடு*
*பொறிவரி வண்டினம் பொருந்திய கிடக்கை*
*நெறிசெல் வருத்தத்து நீரளு றெய்தி*
*கயனெடுங் கண்ணி காதற் கேள்வ*
*வயலுழைப் படர்குவ மெனினே யாங்குப்*
*பூநா றிலஞ்சிப் பொருகய லோட்டி*
*நீர்நாய் கௌவிய நெடும்புற வாளை*
*மலங்குமிளிர் செறுவின் விளங்கப் பாயும்'*[32] *(சிலப்பதிகாரம்)*

என்று சிலப்பதிகாரத்தில் நாட்டு வளத்தைச் சுவைபட இளங்கோவடிகள் புனைந்துரைக்கின்றார்.

மேலும், நாட்டுச் சிறப்பினைக் கூறுவதன்வழி, கவிஞர் தம் கற்பனைத் திறத்தினை உவமை போன்ற அணிகளின் வழி நன்கறிய முடிகிறது.

வருணனை என்பது ஒரு பொருளைக் குறித்த முழுமையான விளக்கமாகும். ஒரு பொருள் குறித்த எல்லாவற்றையும் உவமை, கற்பனை அமைய இலக்கிய நயம் மிளிர விளக்கிச் சொல்வது வருணனையாகிறது. உவமையும் கற்பனையும் வருணனையிலிருந்து விலகி இருப்பினும் அவற்றைத் தன்னுள் அடக்கியதாகவே வருணனை அமைகிறது.

பொதுவாக வருணனைகள் இயற்கையைச் சார்ந்தனவாகவே அமைகின்றன. எனவே, 'இயற்கைப் புனைவு' என்ற சொல் கொண்டும் குறிக்கின்றன.

பொதுவாக நீண்டு செல்லும் கதை அமைப்பினை உடைய எந்த இலக்கியத்திலும் வருணனைச் சிறப்பினை அமைப்பது கவிஞர் மரபு. ஆற்றுப்படை இலக்கியங்களுள்ளும் வழி வருணனைச் சிறப்பிடம் பெறுவதைப் பல ஆற்றுப்படை நூல்களின் வழி அறிய முடிகின்றது.

இம்முறையில் கருணாம்பிகை அந்தாதி சிறு காப்பிய அமைப்பைத் தன்னுள் கொண்டு விளங்குகிறது. காப்பியங்களில் பெரும்பாலும் கதைக்குள் செல்வதற்கு முன், நூலின் தொடக்கப் பகுதியாக நாட்டு வருணனை அமைவது இயல்பு.

*'கொண்டலை வென்ற குழலிய ராசைக் கொழுங்கனியை*
*யுண்டலை யாதுன் னருள்வழிக் கேயுயி ருய்யச் செய்வாய்*
*விண்டலைக் குங்குட முக்கனி தேறல் விளைந்தொழுகும்*
*தண்டலைக் கற்பகப் புக்கொளி யூர்ச்சிவ சங்கரியே'(27)'*

*'வேதாந்த சார நறுந்தே னொழுக விரிந்த கற்கள்*
*போதார்ந்த பச்சைப் பசுங்கொடியே...' (39)*

*'மடையுஞ் சிவகங்கை வாவியுந் தண்டமிழ் வாணர்தினங்*
*குடையுஞ் தென்காசி' (52)*

*'கட்ட முட்டிய மலர்தொறுஞ்செந் தேன்கொண்டு*
*கூட்டுதல் போல' (66)*

*'காரணத் தாலண்டமி யாவையுங் காக்க கங்காநதிசூழ்*
*வாரண வாசி' (79)*

*'பூவியை நான்முக னூழ்வினை நோக்கிப் புரிந்து விட்ட*
*வாவியை' (85)*

என்று நூல் ஆசிரியர் அவிநாசி நகரின் நீர்வளத்தையும் கூறி உள்ளார்.

அயிராவதத் தீர்த்தம், நாககன்னி தீர்த்தம், கங்கா தீர்த்தம், நள்ளாறு இப்பொழுது தீர்த்தமாக விளங்குகிறது. ஆதியில் தலவிருட்சம் மாமரம் கருணாம்பிகை அதனடியில் தவம் இருந்து மகாதேவனின் வலப்பாகம் பெற்றாள். அந்த இடத்தில் இப்பொழுது பாதிரி மரம் உள்ளது.

## பிற வரலாறு

### பழக்கம்

நம் முன்னோர்கள் எல்லாம் திருமணம் என்னும் ஒரு சடங்கினைத் தன் பிள்ளைகளுக்குச் செய்து வைக்கும் பழக்கம் தொன்றுதொட்டு நம்மிடையே இருந்து வருகிறது. நம் முன்னோர்கள் பின்பற்றிய பழக்கத்தைப் 'பொன்னே போல் போற்றி உள்ளார்' இந்நூலின் ஆசிரியர்.

### தேவியின் திருமணம்

பொதிய மலையின் உருவம் எழுதிய கொடியை உடையவனாகிய மலையத்துவசப் பாண்டியன் குழந்தைப்பேறு இல்லாமல் வருந்தி இறைவனை நோக்கித் தவமிருந்தான். இறையருளால் உமையம்மையார் அவனுக்கு மகளாகத் தோன்றினார்.

பாண்டியன் மகளாகிய அம்மையார் தடாதகைப் பிராட்டியார் என்னும் பெயரோடு பகைவரை வென்று பாண்டிய நாட்டை அரசாண்டு வந்தாள்.[33]

ஒருமுறை தன் நாட்டின் மீது படையெடுத்து வந்த பகைவன்மேல் போருக்கு கிளம்பிய பிராட்டியார் பகைவரின் படைத்தலைவராக விளங்கிய

இறைவனைக் கண்டபோது தன்னுடைய மூன்று நகில்களிலே ஒன்று மறையக் கண்டு நாணமுற்று நின்றாள். பின்னர் வந்த படைத்தலைவர் சிவபெருமானே என்று உணர்ந்து பணிந்து நின்றாள். தன் தாய், தந்தையரின் நிலையைக் கூறித் திருமணம் ஏற்க வேண்டினாள்.

அம்மையார் விருப்பப்படியே இறைவனும் கணங்களோடு வந்து மணம் முடித்துச் சென்றார்.

*'மங்கலம் புனைந்த செம்பொன் அம்மிமேல், மணாட்டிபாத*
*பங்கய மலரைக் கையால் பரிபுரம் சிலம்பப் பற்றி,*
*புங்கவன் மனுவால் ஏற்றி, புண்ணிய வசிட்டன் தேவி*
*எங்குளனச் செங்கை கூப்பி எதிர்வர, அருட்கண் சாத்தி*[34]

*(திருவிளையாடற்புராணம், 787)*

என்று, திருவிளையாடற்புராணம் மதுரைக்காண்டத்தில் திருமணப் படலத்தில் பரஞ்சோதி ஆசிரியர் சிவனின் திருமணத்தைப் பற்றிக் கூறியுள்ளார். இந்நூலின் ஆசிரியரும் இதனைப் பின்பற்றியே,

*'சீதமதிக் குந்தள மிக்க நினைச்செல்வத் திருவடிப்பிர*
*சாதமதிக்கு மெனமேன் மேல்வைக்க வீசன் சகித்திலனோ*
*வேதமதிக் குமணவம் மிமீது விமல நின்பொற்*
*பாத மதிக்கப் பொறாமலன் றோசுரம் பற்றியதோ' (16)*

என்று இந்நூலின் ஆசிரியர் சிவபெருமானின் கருணை உள்ளத்தைப் பாராட்டி உள்ளார். அருள்பாலிப்பதன் பொருட்டு என்மீது உன் திருவடி படவும் இறைவனார் பொறுத்துக்கொள்ள இயலாத நிலையையும் கூறியுள்ளார்.

திருமணம் செய்வித்தல் என்ற பழக்கம் நம் முன்னோர்களிடம் இருந்து இருக்கிறது என்றும் இந்நூல் ஆசிரியர் அந்தப் பழக்கத்தைக் கையாண் டுள்ளமையை அறிந்து கொள்ள முடிகிறது.

இந்தப் பழக்கத்தை மலையத்துவசப் பாண்டிய மன்னர் பின்பற்றினார் என்பதை,

*'இமவான் மகிழ்ந்து கயிலேசனுக்கருள் கண்மணியே' (26)*

என்று கூறியுள்ளார் நூல் ஆசிரியர்.

காப்பியத்தின் பாட்டுடைத் தலைவன் அல்லது பாட்டுடைத் தலைவி பற்றிக் கூறுமிடத்தும், மன்னர்கள் சிற்றரசர்கள், புலவர்கள் பற்றிக் கூறுமிடத்தும் அவர்களின் முன்னோர் பெயர்களைக்கூறி அந்த வழியிலே வந்தவன் அல்லது வந்தவள் என்று குலப்பெருமையைக் கூறுவது இயல்பு.

இந்நூலின் ஆசிரியர் அதனைப் பின்பற்றி கருணாம்பிகையம்மையைக் குறிக்கும் இடத்துத் தேவியின் தந்தை பெயரைச் சொல்லி அவரின் மகளாகத் தோன்றிய தேவியே என்றும் திருமாலின் தங்கையாகத் தோன்றியவளே என்றும் அழைக்கிறார்.

*'கிரி இராசன் பெற்ற சேயே' (12)*
*'இமய மடக்கொடியே' (5)*
*'இமயாசலப் புத்திரியே' (31)*
*'இமயாசல மடப்பாவையே' (67)*
*'மூவடி வாங்கும் நெடியோன் பின்வந்தருள் மொய்குழலே' (45)*

என்று தந்தை, சகோதரர் உறவு முறைகள் கூறித் தேவியின் தோற்றச் சிறப்பை ஆசிரியர் கூறுகிறார்.

## இறைவன் பெயர்

இறைவன், அவிநாசி ஆளுடைய நாயனார், அவிநாசிலிங்கன், அவிநாசிலிங்கர், அவினாசி ஆண்டார், அவிநாசி ஆளுடையார், அவிநாசியீஸ்வரர், அவிநாசியப்பர், வாரணவாசிப் பிரான் என்றும் கூறப்படுகிறார்.

கோதண்டம் வாங்கிக் குடித்த சடைமுடியார் (6); வாரணவாசிப் பரம்பரர் (8); வாரணவாசிப் பிரான்(10, 62); திருவடிப் பிரசாத மதிக்கு மேன்மேல் வைக்கவீசன் (16); பற்றார் புரங்குறுமூரலிற் காய்ந்தவன் (17); கயிலேசன் (26); புக்கொளியண்ணல் (36); சடிலப்புராந்தகன் (69); தென்புக்கொளியார் (70); புக்கொளிப்பெருமான் (80); அவிநாசிலிங்கர்(84); நஞ்சமுதாக்கிய கேள்வன் (98).

இந்நூல் ஆசிரியர் பாட்டுடைத் தலைவனின் பெயரைப் பல இடங்களில் பலவாறாகப் பாடி உள்ளார்.

## *சிவனின் பெருமை*

சிவன் மும்மூர்த்திகளில் ஒருவராக விளங்குகிறார். மின்னல் சோதியாய் எங்கும் நிறைந்துள்ளார். இவர் நெற்றிக்கண் உடையவர். அஞ்சு சிரசு உள்ள ஆயிரம் கண்ணுடைய ஆதிசிவன் என்றும் அழைக்கப்படுகிறார்.

ஈசன், சிவசங்கரன், மகாசிவன், பரமேசுவரன், மூர்த்தி, சிவன், சிவா, சிவபாதம், கங்காதரன், ஈசுவரர் என்று பல பெயர்களில் அழைக்கப்படுகிறார்.

முழு முதல் கடவுள் சிவபெருமான் மதுரை நகரில் தமிழ்ச்சங்கத் தலைவராக அமர்ந்து, பெரும் புலவர்களோடு ஒன்றித் தமிழ் ஆராய்ந்தவர் என்ற செய்தி மதுரையைத் தவிர வேறு எந்த நகருக்கும் இல்லை.

*'கண்ணு தற்பெருங் கடவுளும் கழகமோடு அமர்ந்து*
*பண்ணு றத்தெரிந்து ஆய்ந்தஇப் பகந்தமிழ்'35*

என்று பரஞ்சோதி முனிவர் பெருமிதமாகப் பேசுவார். 'கண்ணுதற் பெருங்கடவுள்' என்று கம்பரும் இச்சொற்றொடரைக் கையாண்டு உள்ளார்.

சிவபெருமான் நிகழ்த்திய மதுரையோடு தொடர்பு கொண்ட அறுபத்து நான்கு திருவிளையாடல்களைப் புராணம் கூறுகிறது (திருவிளையாடற் புராணம், மதுரைக்காண்டம்).

அவிநாசித் திருத்தலத்திலே எழுந்தருளி உள்ள சிவபெருமானின் பெயர் அவிநாசியப்பர் என்பதாகும்.

'அரிய பொருளே அவிநாசியப்பா' என்று மாணிக்கவாசகர் இறைவனைப் போற்றுகிறார்.

அருணகிரிநாதர், 'அவிநாசிப் பெருமாளே', 'புக்கொளியூருடையார் புகழ்த் தம்பிரானே' என்று திருப்புகழில் பாடுகிறார்.

அநாதி மல முத்த சித்துருவாய் விளங்கி நின்ற சிவபெருமான் சர்வான்மாக்களும் உய்யும் பொருட்டுத் திருக்கோயில் கொண்டருளிய

தலங்கள் பலவற்றுள்ளும் காசியே மிகச் சிறந்ததாம். அக்காசியினின்றும் கிளைத்தோங்கிய அக்கிரஸ்தலம் அவிநாசியாம். 'காசியிற் பாதி அவிநாசி' என்றும் சிறப்பிக்கப்படுகின்றது.

'அரிய பொருளே அவிநாசியப்பா பாண்டி வெள்ளமே' என்று திருவாயில் தேனூற அழைக்கின்றார் திருநாவுக்கரசர்.

'அளவரியன் கண்டாய் அமலன் கண்டாய் அவிநாசி கண்டாய்' என்று திருத்தாண்டகத்தில் அருளி இருக்கின்றார்.

உலகெலாம் படைத்த முழுமுதற் பொருளை இறைவன் என்கிறோம். அவன்தான் எல்லா உயிர்களிடத்தும் நின்று செயல்படுத்துகிறான். ஆதியும் அந்தமும் இல்லாத இறைவனிடத்தில் இருந்துதான் எல்லா உயிர்களும் தோன்றுகின்றன. இதை, மாணிக்கவாசகர், 'போற்றி எல்லாவுயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்' என்கிறார்.

அயிராவதம் என்னும் வெள்ளை யானையின் சாபம் நீக்கியவனும், அவிநாசியிலுள்ள சிவபெருமானே ஆவார். இராக்கத குலத்திலே பிறந்த தாடகை என்பவள் அவிநாசியில் சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்து மாரீசன் என்ற குழந்தையையும் பெற்றெடுத்தாள். நாககன்னிச் சருக்கம், வியாதச் சருக்கம், சங்க கள்ளச் சருக்கம், தெய்வரம்பைச் சருக்கம், காகச் சருக்கம், தருமசேனச் சருக்கம், சுந்தரச் சருக்கம் என்ற பல சருக்கங்களை நிகழ்த்திய பெருமையை உடையவர் சிவபெருமான்.

*'இறவாமற் பிறவாமல் எனையாள்சற் குருவாகிப்*
*பிறவாகித் திரமான பெருவாழ்வைத் தருவாய்;*
*குறமாதைப் புணர்வோனே; குகனேசொற் குமரேசா;*
*அறநூலைப் புகல்வோனே; அவிநாசிப் பெருமாளே!'*[36]

*(திருப்புகழ்)*

என்று அருணகிரிநாதர் புகழ்கின்றார்.

*'கண்ணப்பன் இடுமெச்சில் மிசைந்தவனே*
*கமலையில் தூ துக்கு மிசைந்தவனே*
*தண்ணிய சடையணி கங்கையனே*
*சாரங்கம் பரசுதங் குங்கையனே*

*கண்ணினுக் கினியதோர் காட்சியனே*
*கடவுளர் புகமுல காட்சியனே*
*மண்ணினிற் புக்கொளி சிறந்தவனே*
*மயல்செயும் புலங்களஞ் சிறந்தவனே'*[37]

*(அவிநாசிநாதர் பதிகம்)*

என்று நெகமம் வித்துவான் முத்துநாகப்ப முதலியார் பாடியுள்ளார்.

*'செந்திரு மார்பலும் திசைமுகன் முதலாம்*
*தேவர்க்கும் உயிர்க்குயி ராகியே திகழ்ந்தோய்!*
*அந்தியும் பகலும்நின் னடியிணை பரவும்*
*அருந்தவ முனிவரும் திருந்துநல் லன்பர்*
*புந்தியில் உனைநினைந் துருகியுள் கசிந்து*
*போற்றுவர் புக்கொளி புண்ணியப் பொருளே!*

*பந்தம தறுத்துமே எந்தனை யாளும்*
*பரஞ்சுடரே! பள்ளி எழுந்தரு ளாயோ'*[38]
*(அவிநாசிநாதர் திருப்பள்ளியெழுச்சி)*

என இராமநாத நாயுடு, (சாவற்கட்டுப் பாளையம்) என்பவர் பள்ளியெழுச்சியாகப் பாடியுள்ளார்.

இந்நூலின் ஆசிரியர் சிவபெருமாளின் பெருமைகளைக் கூறும்பொழுது,

*'கொடியா ருயிர்மலைக் கோதண்டம் வாங்கிக் குடித்தசடை*
*முடியா ரொடுநெடு மால்விடை யேறித்தண் மூரல்கொண்டு' (6)*

எனக் குலகிரிகளால் சூழப்பெற்ற மகாமேரு மலையை வில்லாகக் கொண்டவரும், நஞ்சினைக் குடித்துத் தேவர்களைக் காத்தவரும் சிவபெருமானே என்று ஆசிரியர் கூறுகிறார்.

*'சலத்தைச் சருகைக்கொண் டேதள்ளி னோர்க்குந் தவர்கட்கெல்லாம்*
*பலத்தைச் சிறந்தருள் வாரண வாசிப் பரம்பரர்தன்' (8)*

நீண்ட நாட்களாய் நீரையும், இலையையுமே உணவாகக் கொண்டு வாழ்ந்து வந்த அடியவர் பெருமக்களுக்கும் கடுந்தவத்தை மேற்கொண்ட தவசிரேஷ்டர்களுக்கும் ஆன்ம பலத்தை அளித்துக் காப்பவர் தெக்கணகாசியில் உள்ள சிவபெருமான் என்றும் கூறியுள்ளார்.

*'வரியே ரணிபுயத் தென்டிசை யோரண் டவாணா*
*யறியே லையன் பாஞ்சலி யணிபவளே' (13)*

எட்டுத்திக்குப் பாலகர்களாகிய தேவர் தலைவர்க்கெல்லாம் தலைவனாக விளங்குபெருமாள் என்று கூறியுள்ளார்.

*'சீதமதிக் குந்தன மிக்க நின்செல்வத் திருவடிப்பிர*
*சாதமதிக்கு மெனமேன் மேல்வைக்க வீசன் சகித்திலனோ*
*வேதமதிக் குமணவம் மிமீது வமல நின்பொற்*
*பாத மதிக்கப் பொருமலன் றோகரம் பற்றியதே' (16)*

சிவபெருமானின் திருமணச் செய்தியையும் அவர் தேவியின்பால் கொண்டிருந்த கருணையையும் ஆசிரியர் விளக்கி உள்ளார்.

*'பற்றார் புரங்குறு மூரலிற் காய்ந்தவன்' (17)*

பகைவர்களுக்குரியனவுமாகிய முப்புரங்களையும் தமது இள புன்முறுவலினாலே எரித்தவர் எம்பெருமான் என்று அவரின் வீரத்தைக் கூறியுள்ளார்.

*'தருவு முருவும் கண்டமு மண்டமு மானவனை' (21)*

உலகம், அகில உலகத்திற்கும் தலைவனாக விளங்குபவன் சிவபெருமான் என்று கூறுகிறார்.

*'மயிலே களப மடப்பிடி யேயிம வான்மகிழ்ந்து*
*கயிலே சருக்கருள் கண்மணி' (26)*

என மலையத்துவசப் பாண்டியனால் மகிழ்ந்து மணம் செய்து கொடுக்கப் பட்டுள்ளதைக் கூறியுள்ளார்.

*'ஓதியு ணர்ந்தமெய் ஞானிய ருள்ளத் துதித்தபரஞ்*
*சோதியை' (36)*

திருமுறைகள் பலவற்றையும் கற்று உணர்ந்த ஞானியாவார் எம்பெருமான் அப்பெருமானின் திருவுள்ளத்தின் பயனாய் இத்திருத்தலத்திலே வந்து தோன்றியவள் தேவி என்று ஆசிரியர் சிவனின் பெருமையைக் கூறும் இடத்துக் கூறுகிறார்.

*'விடையார் தென்புக்கொளியார் வலப்பால்' (70)*

விடை ஆகிய எருது ஊர்தியை உடையவரும் திருப்புக்கொளியில் எழுந்தருளி இருப்பவர் சிவபெருமான் என்று வாகனத்தையும் இருப்பிடத்தையும் குறித்து ஆசிரியர் கூறியுள்ளார்.

## புராணக் கதைகள்

### காகத்தின் கதை

முன்னொரு காலத்தில் ஆகாயத்திலே பறந்து சென்ற காகத்தின் மீது நீ வைத்த கருணையினாலே அக்காகமானது வாயில் கவ்விச்சென்ற பிதிர் கரும பலியில் பெற்றுவந்த உணவிலே ஒரு சிறு பகுதி சிவவேடம் தாங்கிய ஓர் அந்தகனது பாத்திரத்திலே விழுந்தது. அச்செயலின் புண்ணியத்தால் அக்காகமானது பெரும் பேற்றினை அடைந்தது.[39]

### சுந்தரச் சருக்கம்

அவிநாசியை நோக்கிப் புறப்பட்ட சுந்தரமூர்த்தி நாயனார் அவ்வீதி வழிச் செல்லும்போது ஒரு வீட்டில் அழுகையொலியும், மற்றொரு வீட்டில் மங்கல ஒலியும் எழுதலைக் கேட்டு அங்குள்ள பிராமணர்களை நோக்கி நிகழ்வதென்னென்றார்.[40]

அதற்குப் பிராமணர்கள் ஐந்து வயதுள்ள இரண்டு புதல்வர்கள குளத்திலே குளித்தபோது ஒரு புதல்வனை முதலை விழுங்கிற்று என்றார்கள். புதல்வனை இழந்த பிராமணனும் மனைவியும் முகமலர்ச்சியோடு அவர் திருவடிகளில் நமஸ்கரித்தார்கள்.

அவர்கள் பின்னும் வணங்கிச் சுவாமி அது முன்னே நிகழ்ந்துபோயிற்று. அது நிற்க, அடியேங்கள் தேவரீரைத் தரிசிக்க நெடுங்காலம் அவாவி யிருந்தோம். அவ்வன்பு பழுதாகாமல் தேவரீரே இங்கே எழுந்தருளப் பெற்றோமென்றார்கள்.

அதைக்கேட்ட நாயனார் இவர்கள் புதல்வனை அம்முதலை வாயினின்றழைத்துக் கொடுக்க அவிநாசியில் வீற்றிருக்கின்ற நமது கடவுளை வணங்குவேன் என்று சொல்லி அவ்வாவிக் கரையில் எழுந்தருளி 'எத்தான் மறக்கேன்' என்னும் முதலையுடைய திருப்பதிகம் பாடத் தொடங்கினார். அந்தப் பதிகம் முடிவு அடையும் முன்பே சிறுவனை முதலை கரையிலே கொண்டுவந்து உமிழ்ந்தது. அக்குழந்தைக்கு உபநயன முகூர்த்தம் செய்வித்தார் சுந்தரர்.

*'புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி நாசியே*
*கரைக்கால்முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே'*[41]

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தில் புக்கொளியூர்த் தேவியின் சிறப்பு பற்றி பாடியுள்ளார்.

கருணையம்மன் அந்தாதியில் உள்ளத்தில் நிறைந்த அன்பு உள்ளவர்களாகத் தொண்டர்களிடத்திலே நீ கொண்டுள்ள அருட்பார்வை மிகவும் உயர்ந்ததாகும் என்று கூறும் ஆசிரியர் முதலையால் விழுங்கப்பட்ட சிறுவனைக் குறித்துச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வேண்ட குழந்தையை வெளியிடச் செய்த அம்பிகையே என்று கூறி உள்ளார்.

*'விளங்கு மறைச்சிறு பாலனைச் சுந்தரர் வேண்டமுன்னாட்*
*குளங்கொள் கராவிடந் தந்தபொன் னேயன்பு கூர்ந்தவர்தம்*
*முளங்கொ ளுனதருட் பார்வைக்கு மீறின தோ' (78)*

## இறைவன் நஞ்சுண்ட கதை

துறக்கத்தில் இருந்து அமுதம் முதலிய உயரிய பொருள்களெல்லாம் கடலிற் புகுமாறு துருவாச முனிவர் ஒரு காலத்தில் சாபமிட்டார். அப்பொருள்களும் அவ்வாறே புகுந்தன. தேவர்கள் அப்பொருள்களை மீண்டும் பெற எண்ணினர். தேவர்களும், அரக்கர்களும் ஒன்றாகத் திரண்டு பாற்கடலைக் கடைய முடிவு செய்தனர். மந்தர மலையை மத்தாக நாட்டினர். திங்களைத் தூணாக அமைத்தனர். வாசுகி என்னும் பாம்பை நாணாகப் பிணித்தனர். இரு சாராரும் இரு பக்கத்தில் நின்று வாசுகியின் வாலையும்,தலையையும் இழுத்துக் கடைந்தனர்.

வாசுகி என்னும் பாம்புக்குத் துன்பம் அதிகமாயிற்று. அது தன்னுடைய நஞ்சைக் கக்கி விட்டது. அந்நஞ்சு மிகுந்த கொடுமை உடையதாக இருந்தது. தேவர்களையும், அசுரர்களையும் வருத்தத் தொடங்கியது. இறைவனை அடைந்தால் தான் இத்துன்பத்தைப் போக்கலாம் என்று இறுதியில் முடிவு செய்தனர். இறைவனே! அடைக்கலம்!! அடைக்கலம்!!! என்று ஓலமிட்டுப் பரமனிடம் ஓடினர். வானாறுசூடிய பெருமான் நஞ்சுத் தொல்லையைப் போக்கத் திருவுளத்தில் எண்ணினர். அந்நஞ்சினைத் தாம் பருகத் தொடங்கினார். உமா தேவி அந்நஞ்சு திருக்கழுத்திலே உள்ளே செல்லாமல் கண்டத்தைப் பிடித்துக் கொண்டாள். நிறுத்தியருளினர். இதனால் தேவர்களுக்கு உண்டாகிய தொல்லை நீங்கியது. தனக்கு ஒப்பில்லாத இறைவனுடைய திருவடியைச் சேர்ந்தாலல்லாமல் மனக்கவலைகளையும், துன்பங்களையும் போக்க முடியாதென்பது அன்று நன்கு பெறப்பட்டது.

## மூர்க்க நாயனார்

சான்றோர் நிறைந்த தொண்டை வள நாட்டிலே, பாலாற்றின் வடக்கிலே திருவேற்காடு என்றொரு திருநகரம் உள்ளது. அந்நகரில் அமரர்களுக் கமுதமளித்துத் தாம் மட்டும் நஞ்சுண்ட வள்ளலார்க்கடிமை பூண்ட வேளாளர் ஒருவர் இருந்தார். அவர் அறிவுபெற்ற நாள் முதலாக வெண்ணீறணிந்த விமலரடியாரைத் தேடி அறுசுவை யுண்டி அளிப்பார்! அவர் வேண்டுவனவெல்லாம் விருப்புடனளிப்பார்! பிறகே, உணவு உண்பார்!

இவருடைய விருந்தோம்பலால் அடியார் வரவு பெருகியது. அதனால், அவர்கட்குதவும் பொருள் வரவு குறுகியது. பொருள் வரவு குறுகினும் பணி குறுகாமல் முன்னிலும் பெருகியது; ஆர்வமும் பெருகியது; வறுமையும் பெருகியது. ஆகவே, அசையும் பொருளும் அசையாப் பொருளுமாக இருந்த

அனைத்தையும் அசைத்துப் பிறர்க்காக்கிப் பொருள் பெற்றுத் தொண்டு செய்தார். அவைகளும் ஆயினபிறகுதான் அயர்ந்தார். 'பணி செய்துகிடக்கும்' பண்புடைய வாழ்வுபெற எவ்வழி யேற்கலாமென இருந்திருந்து ஆராய்ந்து பார்த்தார் அவர்.[42]

அவரிடம் இளமைப் பழக்கமான ஒரேயொரு வழிதான் இருந்தது. அதுதான் இப்போது துணையாயிற்று. சூதாடிப் பொருள் பெற்றுத் தொண்டு செய்தலே துணிவாகக் கொண்டார். சூதிலே, முதலில் எதிரிக்கு விட்டுக்கொடுத்தபின் ஆட்டமெல்லாம் இவரே வெற்றிபெறுவார்! ஒழுங்காகச் சூதாடுவார்! பொய்யாக சூதாடமாட்டார்! ஆகையால், நற்சூதரெனப் பெயர் பெற்றார். சூதாட்டத்திலே பொய்யாக எவராவது ஆடினால் சுரிகையாற் குத்திவிடுவார். எனவே, மூர்க்கரெனவும் பெயர் பெற்றார்.

மூர்க்க நாயனார் சூதில் வரும் பொருளைத் தாம் தொடவும் மாட்டார். உணவு சமைப்போரிடம் அளித்துச் சிவனடியார்க்கு உணவு படைக்கச் செய்வார்! இறுதிப் பந்தியிலே தாமும் ஒருவராக அமர்ந்துண்பார்.

திருவேற்காட்டிலும், அயல் நகர்களிலும் அவரோடு பொருவாரில்லாமல் போகவே, தென்னாடு நோக்கிச் சென்று பல திருப்பதிகளையும் பணிந்தவாறு தன் தொண்டையும் நடத்திக்கொண்டு, குடமூக்கு சென்று தங்கி முன்போலத் தொண்டு செய்தார்.

கருணையம்மன் அந்தாதியில் ஆசிரியரும், மூர்க்க நாயனார் என்னும் சிவத்தொண்டர் செய்த பூசைகளையெல்லாம் மனமுவந்து இனிமையாக ஏற்றுக்கொண்டவளாகிய கருணை நாயகியே! உனக்கு நாயினும் கடையேனாகிய நான் செய்யத் தகும் கைம்மாறு வேறு எதுவும் இல்லையாகும் என்பதை,

*'வல்லிக் கவண்களை யாற்கர மாதி வுடையர்செய்யும்*
*மல்லிற் பெரிதிரு மார்புறு மூர்க்கன் மனவயிரக்*
*கல்லைக் குலைத்துக் கனியாக்கிக் கொண்ட கருணைமலை*
*வல்லிக்கு நாயடி யேன்செய்ய வேறோர்கை மாறிலையே'* (90)

இப்பாடலின்மூலம் விளக்கியுள்ளார்.

## உவமைகள்

### உவமைச்சிறப்பு

தெரிந்தது கொண்டு தெரியாததை விளக்குவது உவமை எனப்படும்.

*'பண்பும் தொழிலும் பயனும் என்றிவற்றின்*
*ஒன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்த்தி*
*ஒப்புமைத் தோன்றச் செப்புவது உவமை'*[43]

என்பது தண்டியலங்காரம். உவமையைக் கையாளுவதின் வழி நூலாசிரியர்கள் கடினமான பல செய்திகளை எளிமையாக விளக்கிவிடுவர். இந்த நிலை, 'கருணையம்மன் அந்தாதியில் பலவிடத்தும் கையாளப்படுகிறது.

*(1) 'படநாகந் தாங்கு மகலிடத் தாசையிற் பட்டுழலு*
*மடநாயி லும்புல்ல னாயினும்' (10)*

*(2) 'ஆவிற் சிறந்த பணாடவிப் பார்முத லண்டமெல்லாஞ்*
*சேலிற் படைப்பதுங் காப்பதும் நான்முகன் சீதரனே' (15)*

*(3) 'வையத்தனி வேலன்ன கண்ணியர் கொங்கைக்கும் வாளரவின்*
*பைத்தலை யல்குற்கு மேங்கிக்கண் ணாடியிப் பாருலகில்' (22)*

(1) ஆயிரம் படங்களையுடைய ஆதிசேடன் தாங்கி நிற்கும் இப்பரந்த நிலவுலகத்தில் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்னும் பேராசைகளில் மூழ்கி அவற்றில் இருந்து கரையேற இயலாது தத்தளித்துக்கொண்டிருக்கும் அடியேன் நாயினும் மிகவும் இழிவு வாய்ந்த அற்பனாவேன் என்று ஆசிரியர் தன்னைப் பேராசையில் இருந்து அருள்பெறச் செய்ய வேண்டும் என்று தேவியை வேண்டுகிறார்.

(2) ஆதிசேடனால் தாங்கப்பெறும் இந்த நில உலகத்தைப் படைக்கின்றான் நான்முகன். உயிர்களையெல்லாம் காக்கின்றார் திருமால். இவர்களின் ஒப்பற்ற இத்தொழிலகள் நடைபெறுவதற்குக் காரணமாக விளங்குபவள் கருணாம்பிகை தேவி என்று ஆசிரியர் இந்த உவமையை எடுத்துக் கையாண்டுள்ளார்.

(3) பெண்களின் அழகிய உறுப்பாகிய நகிலையும், பாம்பின் தலையாகிய படத்தை ஒத்த அல்குலையும் அடையும்பொருட்டு அலையும் என்னை நீ அருள்புரிந்து நல்வழிப்படுத்த வேண்டும் என்று ஆசிரியர் தேவியிடம் வேண்டிக் கொள்வதாக அமைந்துள்ளது.

(4) மயிடாசுரன் என்னும் அரக்கனைக் கொன்று வாகை சூடிய தேவியின் வீரத்தைச் சொல்லுகின்ற ஆசிரியர் இந்த உவமையைக் கையாண்டுள்ளார். 'விருதிட்ட வென்றி மயிடா சுரன்புய வெற்பொடியப் பொருதிட்ட வாகைப் பொலன் கொடியே' (29) என்று கூறி உள்ளார்.

(5) அற்பச் செயலில் மயங்கி கானலைக் கண்டு மயங்கிய மான் போல நெஞ்சமே தேவியை வணங்காமல் 'வெங்கானலை மான்றண்ணீ ரென்றோடித் தளர்வது போல' (33) துன்பத்திற்குள்ளாகி நிற்கின்றாய் என்று தன் நெஞ்சிடம் கூறிக்கொள்வதாய் ஆசிரியர் அமைத்துள்ளார் இந்த உவமையை.

*'மையைக்கயல்விழி காட்டிய மாதர் மயக்க வெறும்*
*பொய்யைச் சிறிதும் பொருந்தாமற் புந்தியைப் போதவன்பி'*

மகளிருடைய செயல்களிலே மயங்காமல் அதை பொய் என்று ஒதுக்கி,

*'புல்லிலை நீரும் புனல்மேற் குமிழியும் புட்கரத்தின்*
*வில்லிடு வில்லுமெனத் தோன்றி வீழும் மெய்யை' (44)*

இவையெல்லாம் தோன்றி உடனே மறையக் கூடியவை. அத்தகையதே இந்த உடலும் என்று ஆசிரியர் தன் நெஞ்சிடம் கூறுவதாக அமைந்துள்ளது.

*'பண்டு விண்பறந்த காகத்தின் வைத்த கருணையிலோர்*
*புன் கடுகிலோரு பாகத்தை' (49)*

காகத்தின்மீது அருள் வைத்ததால் அது பெரும் பேற்றினை அடைந்தது. அதில் ஒரு கடுகு அளவானது தன்மீது அருள் வைக்க வேண்டும் என்பதைக் காகத்தோடு தன்னை உவமையாக ஆசிரியர் கையாண்டுள்ளார்.

*'உருக்குங் கருத்தை உலைமெழு காகி யுடல்புளகங்' (61)*

உலையிலே இட்டு காய்ச்சப்பட்ட மெழுகினைப் போல தீயக் கருத்துகள் எல்லாம் உருகி அழியும். அதுபோல தேவியை எக்காலமும் துதித்து வந்தால் தீயக் கருத்துகள் எல்லாம் அழியும் என்று ஆசிரியர் உவமை காட்டியுள்ளார்.

*'பருத்திப் பொதி கனலிட்டது வாம் செய்த பாவங்களே' (63)*

தேவியை நினைத்து ஞாலத்திலே மூழ்கி இருப்பவர்களுக்கு அவர்கள் செய்த பாவம் அனைத்தும் பருத்திப் பொதியினைக் கனலிட்டது போல உருத்தெரியாமல் அழியும் என்று ஆசிரியர் கூறி உள்ளார்.

*'கூட்டமிட்டிய மலர்தொறுஞ் செந்தேன் கொண்டு*
*கூட்டுதல் போல்' (66)*

வண்டானது மலர்தோறும் சென்று தேனைத் திரட்டி வந்து தன்னுடைய கூட்டிலே சேர்த்து வைப்பதுபோல தமிழ்ப் பாடல்களின் உண்மைத் தன்மை, கற்பனைத் திறன் ஆகியவற்றையெல்லாம் இணைத்து வைத்த தமிழ்ப்பாவை நீ என்று ஆசிரியர் தேவியை உவமை காட்டியுள்ளார்.

*'ஆலையிலேறுங் கரும்பெனச் சிற்றிடையார் மயலின்' (74)*

ஆலையிலே இடப்பட்ட கரும்பினைப்போல அழகிய மெல்லிய இடையினையுடைய பெண்களின் மய்யலில் மயங்கித் திரிந்து அலையும் என்னை இத்துன்பத்திலிருந்து கரையேற வேண்டும் என்று தேவியிடம் அருள்கூர்வதாக அமைத்துள்ளார்.

*'அம்பரமெங்கணும் போய்க்கரை கண்டறியாது*
*வங்கத்தும்பரின் மீண்டும்' (82)*

ஒரு பறவையானது ஆகாயம் முழுமையும் சுற்றித் திரிந்து ஆகாயத்தின் எல்லையைக் கண்டு அறிய முடியாது மரக்கலங்களின் மூலமாக வந்து இறங்குகின்ற வானவர்களைப் போல மீண்டும் திரும்பி வந்து நிலத்தை அடைகிறது. அதுபோல உன்னையே அடைக்கலம் என்று அடைந்தேன் என்று ஆசிரியர் பறவையின்மூலம் உவமை காட்டி உள்ளார்.

*'வாவியை நான்சுமந் தாசையைப் பற்றிப் படர்ந்த*
*கொம்பிற் றாவிய' (85)*

பிரம்மதேவன் தன் ஊழ்வினையால் இத்தலத்தில் வந்து தவம் புரிந்தபோது தோற்றுவித்த தீர்த்த குளத்தை நீங்க இயலாதவனாய் இந்த ஆசையினால் கொம்பில் தாவித் திரிகின்ற குரங்கினைப்போல் இவ்விடதத்தை விட்டு நீங்காது அலைந்து திரிகின்றேன் என்று ஆசிரியர் கூறுகிறார்.

*'நெஞ்சகத்தை வுலைப்பான் மெழுகி னுருக்கிடு வாள்' (90)*

அவளையே துதித்து நிற்பவர்கள் ஆகிய அன்பர்களின் உள்ளத்திற் குடியிருந்து உலை இடப்பட்ட மெழுகினைப்போல அவர்கள் உள்ளத்தை உருக்கிவிடுவாள்.

*'வண்டுதாகந் தவிர்மெய்த்தேன் விரிக்குநின்*
*சேவடிப் பங்கேரு கத்துண்டு' (91)*

மலர்தோறும் அலைந்து திரியும் வண்டினைப்போலத் தியானத்தில் நிலைபெற்று நிற்க உள்ளத்தின் உணர்வாகிய தாகத்தை ஒழித்து அருள்புரிவாய் என்று கூறியுள்ளார்.

## பிற அணி நயங்கள்

### உருவகம்

உவமை வேறு, பொருள் வேறு என்று பிரித்துக் காட்டாமல் இரண்டையும் ஒன்றாகவே கூறுவது உருவகம்.

'உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்
தொன்றென மாட்டினஃ துருவமாகும்'[44]

என்பது தண்டியலங்காரம்.

*வல்லி - 2,3,14; வாய்மலர் - 2; கருணைவிளக்கே - 5; கண்மணி - 6; சீரடி - 14,72; கற்பகம் - 18; பொலன் கொடி - பொற்கொடி - 29; மணி விளக்கு - 63; மயிலே - 68; பொன் கொடியே - 68; பொன்னே, மின்னே - 69; பூங்கொடி - 72; களப மடப்பிடியே - 26; குயிலே - 26.*

### எதுகை, மோனை

பெரும்பாலான பாடல்கள் அடியெதுகையால் அமைந்தவையாகும். அடிமோனைப் பாடல் ஒன்றேனும் அமையவில்லை.

## அடிக்குறிப்பு

1. திராவிட மொழி இலக்கியங்கள்
   டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், உலக தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை - 113.
   பக்க எண் 187 வருடம் 1983.
2. தமிழ் இலக்கிய வகையும் வடிவும்
   டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், தமிழ்ப் பதிப்பகம், சென்னை - 96.
   பக்க எண் 547 வருடம் 1984.
3. பாட்டியலும் இலக்கிய வகைகளும்
   ந.வீ. செயராமன், இலக்கிய பதிப்பகம்.
   பக்கம் 24 வருடம் 1981.
4. பிபந்த மரபியல்
   மு.அருணாசலம், பத்தாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு, திருச்சிற்றம்பலம்.
   பக்கம் 212 - 213 வருடம் 1971.
5. சிவஞானபோதம்
   ஔவை சு.துரைசாமிப் பிள்ளையவர்கள், முதல் நூற்பாவின் இறுதியடி
   பக்கம் 6 வருடம் 1968.
6. சிலப்பதிகாரம்
   இளங்கோவடிகள், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்.
   கானல் வரிகள் 2,3,4,9. வருடம் 1968.
7. யாப்பருங்கலக்காரிகை
   வேங்கடசாமி நாட்டார் அவர்கள், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 108.
   பாட்டு எண் 18,5 2 வருடம் 1940.
8. பிரபந்தத் திரட்டு
   டாக்டர் அன்னிதாமஸ், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை-113.
   பாட்டு எண் 95.
9. இலக்கணத் தொகை - யாப்பு - பாட்டியல்
   டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை - 113,
   பக்கம் 213 வருடம் 1983.
10. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்
    கி.வா.ஜகந்நாதன், கலைமகள் ஆசிரியர், சென்னை.
    பாட்டு எண் 4 வருடம் 1982.

11. அவிநாசி லிங்கேஸ்வரர் திருக்குட நன்னீராட்டு விழா மலர்
திருப்பணிக்குழு - அவிநாசி.
வருடம் 1980.

12. திருவாசகம்
மாணிக்கவாசகர், உரையாசிரியர் : இரத்தினசபாபதி பிள்ளை
முருகன் அச்சகம், சென்னை-14.
பாட்டு எண் 225 வருடம் 1973.

13. அவிநாசி லிங்கேஸ்வரர் திருக்குட நன்னீராட்டு விழா மலர்
திருப்பணிக்குழு - அவிநாசி.
பக்கம் எண் 21 வருடம் 1980.

14. அவிநாசி கல்வெட்டுகள்
ந.இரா.சென்னியப்பன், திருப்பணிக்குழு - அவிநாசி.
பக்க எண் 1 வருடம் 1980.

15. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்
கி.வா.ஜகந்நாதன், சென்னை.
பாட்டு எண் 2.

16. அவிநாசிப் புராணச் சுருக்க வசனம்
திருப்பணிக்குழு - அவிநாசி.
காப்பு பாட்டு வருடம் 1980.

17. திருப்புகழ் விரிவுரை (மூன்றாம் படைவீடு)
அருணகிரிநாதர், வானதி பதிப்பகம், சென்னை-17.
பக்க எண் 15 வருடம் 1965.

18. கந்த புராணம்
ஸ்ரீ சம்பந்த சரணாலய சுவாமிகள், தருமையாதீனம்,
தருமபுரம்.
பாட்டு எண் 37 வருடம் 1964.

19. கந்தர் அனுபூதி விளக்கம்
கி.வா.ஜகந்நாதன், சென்னை-18.
பாட்டு எண் 13 வருடம் 1978.

20. கந்தர் அனுபூதி விளக்கம்
கி.வா.ஜகந்நாதன், சென்னை-18.
பாட்டு எண் 15 வருடம் 1978.

21. கந்தர் அனுபூதி விளக்கம்
கி.வா.ஜகந்நாதன், சென்னை-18.
பாட்டு எண் 51 வருடம் 1978.

22. தேவி காலோத்திரம்
சுவடி எண் 2, உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை-113.

23. அவிநாசி லிங்கேஸ்வரர் நன்னீராட்டு விழா மலர்
திருப்பணிக்குழு - அவிநாசி
துதிப்பாடல்கள் வருடம் 1980.

24. கந்தபுராணம்
ஸ்ரீ சம்பந்த சரணாலய சுவாமிகள், தருமபுரம்
பக்க எண் 2 வருடம் 1964.

25. திருஅவதார ஆதியான திருவருள் விளக்கத் தோத்திரம்
சுவடி எண் 9
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை-113.

26. பெரியபுராண வசனம்
புலவர் அரசு, கழக வெளியீடு, வருடம் 1968
பாட்டு எண் 67.

27. திருத்தொண்டர் புராணம்
ஸ்ரீ.ல.ஸ்ரீ. காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள்
ஸ்ரீ காசி மடத்து வெளியீடு
பாட்டு எண் 68 வருடம் 1968.

28. மேற்கோள் விளக்க கதை அகரவரிசை
சு.அ. இராமசாமிப் புலவர்
திருநெல்வேலி - 6
கதை எண் 943 வருடம் 1963.

29. அல்லி அரசாணி மாலை
புகழேந்திப் புலவர், சென்னை - 1,
நகரச் சிறப்பு பக்க எண் 3 வருடம் 1980.

30. சீவக சிந்தாமணி
திருத்தக்க தேவர், சென்னை -1,
பாட்டு எண் 31.

31. கம்பராமாயணம்
டாக்டர் உ.வே. சாமிநாதையர், சென்னை - 41
பக்க எண் 93 வருடம் 1967.

32. சிலப்பதிகாரம்
இளங்கோவடிகள், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
சென்னை - 1.
வருடம் 1968 பாட்டு எண் 75, 80, 80, 85, 90

33. திருவிளையாடற் புராணம் (மதுரைக் காண்டம்)
பரஞ்சோதி முனிவர், மதுரை.
வருடம் - 1973 பக்க எண் 143.

34. திருவிளையாடற் புராணம்
பரஞ்சோதி முனிவர், மதுரை.
வருடம் 1973 பாட்டு எண் 787.

35. திருவிளையாடற் புராணம்
பரஞ்சோதி முனிவர், மதுரை.
வருடம் 1973 பக்க எண் 644.

36. திருப்புகழ்
அருணகிரி நாதர்
சென்னை - 1. பாட்டு எண் 7.

37. அவிநாசி லிங்கேஸ்வரர் நன்னீராட்டு விழா மலர்
முத்துநாகப்ப முதலியார்.
நெகமம் வருடம் 1980.

38. அவிநாசி நாதர் திருப்பள்ளியெழுச்சி,
இராமநாத நாயுடு
சாவற்கட்டுப்பாளையம், வருடம் 1980.

39. மேற்கோள் விளக்கக் கதை அகர வரிசை
சு.அ. இராமசாமிப் புலவர், திருநெல்வேலி - 6.
கதை எண் 282, வருடம் 1963.

40. மேற்கோள் விளக்கக் கதை அகர வரிசை
சு.அ. இராமசாமிப் புலவர்
கதை எண் 442, வருடம் 1963.

41. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்
கி.வா.ஜகந்நாதன், சென்னை.
பாட்டு எண் 4.

42. திருத்தொண்டர் புராணம்
ஸ்ரீ காசி வாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள்
வருடம் 1968 பக்க எண் 234.

43. தண்டி அலங்காரம்
சுப்பிரமணிய தேசிகர் உரை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
நூற்பா எண் 36, வருடம் 1971.

44. தண்டி அலங்காரம்
சுப்பிரமணிய தேசிகர் உரை,
நூற்பா எண் 37.

# கருணையம்மன் அந்தாதி

## கடவுடுணை - காப்பு

'தேக்குஞ் சுவைத்தண்[1] டமிழ்க்கவி வாணர் செவிக்கமுத
மாக்கும் பொருளு மலங் கா ரமுமா வரலுதரம்
வீக்கு மொருத்த முகத்தோனென் னாவின் மிகுமதுர
வாக்குந் தருவன் கருணையந் தாதி வழுத்துதற்கே.'

நிறைந்த சுவையை அளிக்கவல்ல இனிய தமிழ்மொழியிலே வல்லுநராகிய புலவர் பெருமக்களின் செவியில் அமுதம் போன்ற இனிமை தரும் உயர்ந்த பொருளாக விளங்குபவரும், அழகு விளங்கக் காட்சி தருபவரும், பூரித்துப் பருத்த வயிறும் யானை முகமுமாய் விளங்குபவருமாகிய விநாயகப்பெருமான், அவிநாசித் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள கருணாம்பிகையம்மையின்மீது அந்தாதிப் பாடலைச் சொல்லுவதற்கு என் நாவில் வீற்றிருந்து சிறந்த இனிய சொற்களை எனக்குந் தந்து அருள்புரிவானாக.

கடவுடுணை - கடவுள் + துணை, காப்பு - எடுத்துக்கொண்ட செயல் இனிதே நிறைவுறுதல் பொருட்டு இறைவனை வணங்கித் துதிக்கும் தெய்வ வணக்கப் பாடல்.

தேக்குதல் - நிறைதல்; தண்டமிழ் - தண் + தமிழ், இனிய; குளிர்ச்சி பொருந்திய தமிழ்; கவிவாணர் - புலவர்; வாணர் - வாழ்நர்; அலங்காரம் - அழகு; உதரம் - வயிறு; வீங்குதல் - பூரித்துப் பருத்தல்; ஒருத்தம் - களிறு, ஆண் யானை; மதுர வாக்கு - இனிய சொற்கள்; தருவன் - கொடுப்போன், அன் ஈறு பெற்ற ஆண்பால் வினைமுற்று; கருணையந்தாதி - கருணாம்பிகையின் மீது பாடப்பெறும் அந்தாதியாகிய இலக்கியம்; வழுத்துதல் - போற்றிச் சொல்லுதல்.

1. *தண்டமிள்க்கவி.*

# நூல்

## உயிர் மருந்து

1. 'திருவும் பிறையுந்[1] திகழ்வா ணுதலுந் திலதமுஞ்செல்
பொருவுங்[2] குழையு மணிமே கலையும்பொற்[3] பூணும்பெம்மான்
சருவுந் தனமுங் கருணாம் பிகையிரு தண்சிலம்பு
மருவுஞ் சரணமு மென்னுயிர்[4] காக்க வருந்துணையே.'

கண்டாரால் விரும்பத்தகும் அழகும் மேன்மையும் பொருந்திய தெய்விகத் தன்மையும், இளம்பிறையின் வடிவும் அழகும் பொருந்தி விளங்கும் ஒளிபொருந்திய நெற்றியும், அந்த நெற்றியிலே பொருந்திய அழகிய பொட்டும், மேகத்தை ஒத்து அசையும் மகர குண்டலங்களும், ஓசையும், அழகும் பொருந்திய ஏழு கோவை மணிவடமாகிய எம்பெருமான் தழுவும் தனங்களும் பொருந்த விளங்குபவனாகிய கருணாம்பிகையம்மையின் சிலம்பணிந்த திருவடிகள் எனது உயிரைக் காக்கும் சிறந்த துணையாக என்றும் என்னுள்ளத்திலே நிலைத்திருக்குமாக.

திரு - அழகு, மேன்மை, தெய்வீகம், கண்டோரால் விரும்பப்பெறும் தன்மை நோக்கம்; பிறை - இளநிலவு; வாணுதல் - வாள் + நுதல்; வாள் - ஒளி; திலதம் - திலகம், நெற்றிப்பொட்டு; செல் - மேகம்; பொருவுதல்-ஒத்தல்; குழை - குண்டலம்; மணி - அழகு; மேகலை - மகளிர் இடையணி; இது ஒரு ஏழு கோவை மணிவடங்கள் உடையது; பொற்பூண் - பொன்னாலாகிய அணிகலன்கள்; பெம்மான் - பெருமான், உயர்ந்தவன் (சிவபெருமான்); சருவுதல் - தழுவுதல்; சிலம்பு - காலணி; மருவுதல் - பொருந்துதல்; சரணம் - பாதம், திருவடி.

*1. திகள்வா 2. குளையு 3. பொற்பணும் 4. கார்க்க. (1)*

## உம்பர் மருந்து

2. *'வருந்தித் துதிக்கு மிரவும் பகலுமென் வாய்மலர்தூய்த்*
*திருந்தித் தொழுங்கை யிணைசெவி நாளுந்[1] திருப்புகழிற்*
*பொருந்திப் பரம[2] சுகானந்த நீர்கள் பொழியுமும்பர்*
*மருந்திற் சிறந்த பெருங்கரு ணாலய வல்லியையே.'*

தேவரின் அமிர்தத்திலும் இனிய வல்லியை இரவும் பகலென்று இடைவிடாது என் வாயானது துதித்துக்கொண்டே இருக்கும். என் கைகள் தமது தீச்செயல்களிலிருந்து விடுபட்டுத் திருந்தி மலர் தூவித் தொழுது கொண்டிருக்கின்றன. என் இரு செவிகளும் தேவியின் சிறப்புப் பொருந்திய பெருமைகளைக் கேட்பதில் ஆழ்ந்து கிடக்கின்றன. கண்களோ தேவியைக் கண்டு பேரானந்தக் கண்ணீர் பொழியா நிற்கும்.

துதித்தல் - புகழ்தல், நினைத்தல்; இரவு - இருள்; பகல் - ஒளி; கையிணை - இணையாகிய கைகள், இரண்டு கைகள்; வாய்மலர் - வாயாகிய மலர்; திருப்புகழ் - தேவியின் சிறப்புகள்; சுகம் + ஆனந்தம் -இன்பந்தரும் பேரின்பம்; செவி - காது; உம்பர் - தேவர்; மருந்து - அமிழ்தம்; வல்லியை - கொடிபோன்றவள்.

*1. திருப்புகளிற் 2. சுகாநந்த (2)*

## புகலிடம்

3. *'வல்லியை யுந்தன மின்னைத்தென் காசி வடகயிலை*
*வல்லியைப் பாகங் கரந்தாளை யாகம வேதமெல்லாஞ்*
*சொல்லிய தேவியை யல்லாம லோரெழு தொல்பிறவி*
*புல்லிய துன்ப மொழித்தற்கு வேறு புகலில்லையே.'*

தென்காசி எனப்பெறும் அவிநாசித் திருத்தலத்திலே எழுந்தருளி இருப்பவளும் வடகயிலைக்குரியவளும் வல்லிக் கொடியை நிகர்த்தவளும் சிவபெருமானின் வல்ப்பாகத்தை இருப்பிடமாகக் கொண்டு இருப்பவளும் வேதம், சாஸ்திரம் ஆகிய எல்லாவற்றாலும் புகழ்ந்து கூறப்பெறுபவளுமாகிய உமாதேவியை அல்லாமல் மிகவும் தொன்மை வாய்ந்த என்னுடைய ஏழு முற்பிறப்பிலும் வந்து அடைந்த துன்பங்களையெல்லாம் போக்கிக் கொள்ளுவதற்கு வேறு புகலிடம் இல்லை.

வல்லி - வல்லிக்கொடி போன்ற உமை; மின் - மின்னலை நிகர்த்தவள்; பாகம் கரந்தாள் - இறைவனது வலது பாகத்தைத் தன் இருப்பிடமாகக் கொண்டு இறையுருவத்தின் ஒரு பகுதியை மறைத்து விளங்குபவள்; கரந்தாள் - கரந்தவள் - வினையாலணையும் பெயர்; ஆகமம் - சிவ விஷ்ணுகளால் இருஷிகள் பொருட்டு அருளிச் செய்யப்பட்ட நூல்கள். அவற்றுள் சிவாகமம் இருபத்தெட்டு வகை. வேதம் - இருக்கு, யஜுர், சாம, அதர்வண வேதம் என்பன. ஏழு பிறவி - தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் என்பன; புல்லுதல் - வந்தடைதல். (3)

## பிறப்பு

*4. 'இல்லைக் கிழத்தியை வாழ்வைச் சிறாரை யிருநிதியின்*
*தொல்லைத் துயரை யொழியாய்த்தென் புக்கொளிச் சுந்தரிதன்*
*னெல்லைக்கு ளோடி வலஞ்சூழ்ந் துருகி யெதிர்பணிந்த*
*தில்லைப் பிறப்பினின் றெவ்வணம் நீகடைத் தேறுவதே.'*

இல்லக்கிழத்தியாகிய மனைவியைப் பிரியமாட்டாய். சிற்றின்பம் நிறைந்த இவ்வுலக வாழ்க்கையை விட்டொழிக்க மாட்டாய்; பிள்ளைப் பாசத்தைத் துறக்க மாட்டாய்; தென்காசியினைப் பெறும் திருப்புக்கொளித் திருக்கோயிலைப் பெருவிருப்பத்தோடு அடைந்து வலம் வந்து உள்ளமுருகித் துதித்துப் பணிந்து நின்றாயுமில்லை. இவ்வாறான நற்செயல்களிலே ஈடுபடாத நீ இப்பிறவித் துன்பத்திலிருந்து விடுபட்டுப் பேரின்ப வாழ்வை எய்துவது எங்கனம்? உன்னால் இயலாததே ஆகும்.

இல்லைக்கிழத்தி - இல்லக்கிழத்தி; பின் அடிகளை நோக்கி இல்லை என்றமைந்தது. கிழத்தி - தலைவி; சிறார் - சிறுவர்; இருநிதி - பெருஞ்செல்வம்; தொல்லை - பழமை; எதிர்பணிதல் - தேவியின் முன் சென்று வணங்குதல். (4)

## கருணை விளக்கு

*5. 'தேறா மனமுந் தெளியா மதியுந் திருவடிக்கண்*
*ணூறாக் கருத்து மொழியாக் கவலையு முள்ளமட்டும்*
*மாறா திருத்த லழகோசொல் பெற்றவ ளீயலவோ*
*மாறாக் கருணை விளக்கே யிமய மடக்கொடியே.'*

என்றும் மாறாத கருணையே வடிவமாகி நிற்கும் அன்னையே! இமவான் பெற்றெடுத்த மடப்பம் பொருந்திய கொடி போன்ற தேவியே! என்னைப் பெற்ற தாயாக விளங்கும் உமையவளே! நல்லவை கெட்டவையென்று

பகுத்தறிந்து நல்லவற்றிலே ஈடுபடுவதை ஆய்ந்து பார்க்காத உள்ளத்தை உடையவனானேன், சிறந்த பணியை மேற்கொள்ளும் தெளிவு பெறாத அறிவையே பெற்றிருக்கிறேன்; உனது திருவடிகளை எண்ணி எண்ணி மனம் ஒன்றாது அலையும் உள்ளத்தையே அடைந்து இருக்கிறேன். இப்பிறவியில் என்றும் விட்டொழிக்க இயலாத வருத்தத்தை உடையனவாக இருக்கிறேன். நான் இந்த இழிநிலைகளில் இருந்து நீங்கும் வரை என்னைத் திருத்தி அருள்புரியாதிருத்தல் உனக்கு அழகாகுமா?

தேறா - தெளியா - ஊறா - மாறா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள், தேறுதல் - துணிதல்; தெளிதல் - தெளிவு அடைதல்; ஊறுதல் - பெருகுதல்; மறுத்தல் - மாற்றம் அடைதல்; மதி - அறிவு; இமய மடக்கொடி - பர்வதராசனாகிய மன்னன் மகள்; மடப்பம் பொருந்திய கொடி போன்றவள், பார்வதியைக் குறித்தது. (5)

## அஞ்சலென்க

6. *'கொடியா ருயிர்மலைக் கோதண்டம் வாங்கிக் குடித்தசடை*
*முடியா ரொடுநெடு மால்விடை யேறித்தண் மூரல்கொண்டு*
*கடியார் கருங்குழற் கண்மணி யேவந்து காத்தருள்வா*
*யடியார் குழாத்தொடு மென்னுயிர் போம்பொழு தஞ்சலென்றே.'*

குலகிரிகளால் சூழப்பெற்ற மகாமேரு மலையை வில்லாகக் கொண்டவரும், கடலில் தோன்றிய நஞ்சினைக் குடித்துத் தேவர்களைக் காத்தவரும், சடாமுடியினை உடையவருமாகிய சிவபெருமானோடு, திரிபுரமெரித்த காலத்து இடப வடிவமாக வந்து தாங்கிய திருமாலாகிய இடப வாகனத்தில் இருந்தருளிய கருணாம்பிகையே! அருள் நிறைந்த புன்முறுவலோடு மணமிக்க மலர்களை அணிந்த கரிய கூந்தலை உடையவளாய் விளங்கும் அம்மையே! என்னுடைய உயிர் நீங்குங்காலை உன்னுடைய அடியவர் குழாத்தொடும் காட்சியளித்து அஞ்சேல் என்று கூறி அபயமளித்து என்னைக் காத்துப் பேரின்பப் பேற்றினை அடைய அருள் புரிவாயாக.

மலைக்கோதண்டம் - மலையாகிய வில்; குடித்தல் - திருப்பாற்கடலில் தோன்றிய நஞ்சினை உண்டவர்; அரக்கர் உயிரைக் குடித்தவர் எனவும், கங்கையைச் சடையிலே தாங்கியவர் எனவும் கொள்ளலாம்; நெடுமால் விடை திருமாலாகிய இடப வாகனம்; மூரல் - புன்சிரிப்பு; கடி - மணம்; அடியார் குழாம் - திருத்தொண்டர் கூட்டம். (6)

## பிறவி இல்லை

7. *அஞ்சலென் றோங்கு மபையமும் பாசமு மங்குசமுந்*
*தஞ்சமென் றோர்க்கருள் வைத்த நாட்டமுந் தாளிணைப்பூங்*
*கஞ்சமுங் கஞ்சத்தின் மேலே கிடந்த கதிர்ச்சிலம்பும்*
*நெஞ்சமொன் றாகி நினைவார்க் கிலைசென்மம் நீணிலத்தே.*

அடைக்கலம் என்று அடைந்தவர்களுக்கு அஞ்சேல் என்று அபயம் அளிக்கும் பெருங்கருணை வாய்ந்தவள் அம்பிகை. பாசம், அங்குசம் என்று

வந்தடைந்தவருக்கு அருள்புரியும் திருவருள் பார்வையை உடையவள். இணையாகிய திருவடிகளோ அழகிய தாமரை மலர்களாக விளங்குகின்றன. அந்தத் திருவடிகளாகிய தாமரை மலரின்மீது ஒலியும் ஒளியும் பொருந்திய சிலம்புகள் ஒலித்து நிற்கின்றன. இத்தகு கருணாம்பிகை தேவியின் உள்ளம், பாசம், அங்குசம், நாட்டம், திருவடி, சிலம்பு ஆகியவற்றை என்றும் உள்ளத்திலே நிலைநிறுத்தித் துதிப்பவர்களுக்கு இப்பூவுலகின்கண் மறு பிறவி இல்லையாகிப் பெரும் பேற்றினை எய்துவர்.

அபையம் - அடைக்கலம்; பாசம் - அன்பு; அருள் - பார்வை; தஞ்சம் - அடைக்கலம்; நாட்டம் - விருப்பம்; தாளிணை - இணையாகிய திருவடிகள்; கஞ்சம் - தாமரை; கதிர் - ஒளி; சிலம்பு - பாத அணி; நெஞ்சம் - உள்ளம்; சென்மம் - மறுபிறப்பு; நீணிலம் - பரந்த பெரிய உலகம். (7)

## வலத்தில் புகுந்தவள்

*8. 'நிலத்திற் பெருந்தவஞ் செய்தனம் நெஞ்சமே நெடுநாள்*
*சலத்தைச் [1]சருகைக்கொண் டேதள்ளி னோர்க்குந்*
*[தவர்கட்கெல்லாம்*
*பலத்தைச் [2]சிறந்தருள் வாரண வாசிப் பரம்பரர்தன்*
*வலத்திற் புகுந்த கருணைப் பிராட்டியை [3]வாழ்த்துதற்கே.*

நீண்ட நாட்களாய் நீரையும், இலையையுமே உண்டு சிவபெருமானைத் துதித்துத் தங்கள் வாழ்நாட்களைக் கழித்து வந்திருக்கின்றவர்கள் அடியவர் பெருமக்கள். அவ்விறைவன்மீது கடுந்தவத்தை மேற்கொண்டுக் காலத்தைக் கழித்து வந்தவர்கள் தவசிரேஷ்டர்கள். அத்தகு சிவனடியார் அனைவருக்கும் ஆன்ம பலத்தை அளித்துக் காப்பவர் தெக்கண காசி என்னும் திருத்தலத்திலே எழுந்தருளி உள்ள சிவபெருமான். அப்பெருமானது வலப்பாகத்தைப் பெற்று வீற்றிருக்கின்ற கருணாம்பிகையம்மையை எக்காலமும் நினைந்து துதிப்பதற்கு ஏ! நெஞ்சமே! நீ இப்பரந்த நிலவுலகத்தில் பெருந்தவம் செய்திருக்கின்றாய்.

சருகு - உலர்ந்த இலை; சலம் - நீர்; தவர் - தவசிகள்; வாரணவாசி - காசித்திருத்தலம்; வலத்தில் புகுந்தவள் - பார்வதி; அவிநாசித் திருத்தலத்தில் இறைவனின் வலது பாகம் பெற்று வீற்றிருக்கும் கோலம்.

1. சறுகை 2. சிரந்தருள் 3. வாள்த்துதற்கே. (8)

## வருங்காலம்

*9. 'வாழார் தொழுது மலர்சொரிந் தெம்பெரு மாட்டிபொற்றா*
*டாழார் மெய்யன்பரைத் [1] தான்பணி யாரவள் சந்நிதிமுன்*
*சூழார் தினைப்பொழு தேனுமெஞ் ஞானச் சுகப்பெருக்கி*
*லாழா ரென்செய்வ ரன்றோ வருங்கால இயமபடர்க்கே.'*

மானிடராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் ஒரு நாளையில் தினை அளவு எனப்பெறும் ஒரு சிறிது கால நேரமானது உள்ளத்தை இறை உணர்வு வழியிலே ஆழ்த்தி மூழ்கச் செய்யாமல் இப்பிறவியை வீணாக்குகிறார்கள். அவர்கள் எம்பெருமாட்டியை எக்காலமும் தொழுது வாழாத பெரும்

பழிக்குரியவராகிறார்கள். அவளுடைய பொன் போன்ற திருவடிகளிலே அன்றலர்ந்த மலரைச் சொரிந்து தொழாது பாபத்தை ஏற்றவராகிறார்கள்; அவர்கள் எம்பெருமானது திருவடிகளைத் தொழுது வாழும் மெய்யன்பராம் அடியவர்களையும் பணிவதில்லை. எம்பெருமாட்டியின் ஆலயத்தின்முன் சூழ்ந்து இருந்து வணங்குவதும் இல்லை. இவ்வாறு பேரின்ப சுகத்தை அடையும் செயல்களிலே ஈடுபடாத இவர்கள் காலன் வருகின்றபோது என்ன செய்யப்போகிறார்கள்? மீண்டும் பிறவித் துன்பத்தை ஏற்று வருந்தவே போகிறார்கள்.

சொரிதல் - தூவுதல்; பொற்றாள் - பொன் போன்ற திருவடி; மெஞ்ஞானச்சுகம் - பேரின்பப்பேறு; கால இயமன் - காலனாகியவன்; எமன். வாழார், தாழார், சூழார், ஆழார் - என்பன எதிர்மறைப் பொருளில் வந்தன.

*1. மெய்யன்பறைத். (9)*

## கண்ணருள்

*10 'படநாகந் தாங்கு மகலிடத் தாசையிற் [1]பட்டுழலு*
*மடநாயி லும்புல்ல னாயினும் வாரண வாசிப்பிரா*
*னுடனா டுறுங்கரு ணாலயச் [2]செல்வி யுனக்கிதுதான்*
*கடனாகு மெந்தனைக் கண்ணருள் பாலித்து [3]காப்பதுவே'*

தெக்கண காசியாகிய திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள எம்பெருமானோடு திருத்தாண்டமாடியருளிய கருணாம்பிகை அம்மையே! ஆயிரம் படங்களையுடைய ஆதிசேடன் தாங்கி நிற்கும் இப்பரந்த நிலவுலகத்தில் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்னும் பேராசைகளில் மூழ்கி அவற்றில் இருந்து கரையேற இயலாது தத்தளித்துக் கொண்டிருக்கும் அடியேன் நாயினும் மிகவும் இழிவு வாய்ந்த அற்பனாவேன் என்றாலும் தேவியே! அடியேனையும் உனது திருவருள் நோக்கத்தால் கடைத்தேற்றிக் காத்து உன் அருள் பெறச் செய்வது உனது கடமையாகும்.

படநாகம் - ஆதிசேடன், படத்தையுடைய நாகம் என விரியும்; படம் - பாம்பின் படம்; அகலிடம் - பரந்த இம்மண்ணுலகம் இது ஆதிசேடனால் தாங்கப்படுகிறது என்பது புராண வரலாறு; உழலுதல் - திரிதல்; புல்லன் - அற்பன்; வாரணவாசிப்பிரான் - அவிநாசியப்பர்.

1. பட்டுளலு 2. செல்லி 3. காற்பதுவே. (10)

## பராமுகம்

*11. '[1]காத்தாலுங் காப்பன் றிக்கை விடுத்தாலும் கடுநரகில்*
*சேர்த்தாலுஞ் [2]சொர்க்கந் [3]திகழ வைத்தாலுந் திருக்கண்களாற்*
*பார்த்தாலு மன்பர் பராக்கினில் என்னைப் [4]பராமுகமாய்*
*நீத்தாலுஞ் சொல்லிவைத் தேன்கதி யென்றைக்கும் நீயெனக்கே.'*

கருணாம்பிகையே! உன் திருவருளால் எனக்கு அருள்புரிந்து என்னைப் பாதுகாத்தாலும், அவ்வாறு காத்தலைச் செய்யாது வீணாய் அலையுமாறு செய்து கைவிட்டாலும், தீயோரைக் கொண்டு சேர்க்கும் கொடிய நரகத்திலே தள்ளி வதைத்தாலும், அல்லது நல்லோரைச் சேர்ப்பிக்கும் பேரின்ப

வாழ்விடமாகிய சொர்க்கத்திலே சேர்த்து இன்பம் அடையச் செய்தாலும், அம்மையே உன்னுடைய அருள் நிறைந்த திருக்கண் பார்வையைச் செலுத்தி என்னை ஆதரித்தாலும், அடியவர்களின் துன்பத்தைப் போக்கும் திருவருட் செயல்களின் மிகுதியாலே என்னை அலட்சியம் செய்து ஒதுக்கினாலும் - அம்மையே! என்றும் எல்லா நிலையிலும் எனக்கு உன்னைத் தவிர வேறு துணை யாரும் இல்லை; நீயே கதி என்பதை இப்போதே சொல்லி வைக்கிறேன்.

காத்தல் - காப்பாற்றுதல், இறைவனின் முத்தொழில்களில் ஒன்று; அவை - படைத்தல், காத்தல், அழித்தல் என்பன. எதுகை நோக்கி 'ர'கர ஒற்று இடையிட்டு நின்றது. காப்பன்றி - காப்பு + அன்றி. கடுநரகு - உயிர்கள் பாவத்தை அனபவித்தற்கான கொடிய இடம். சொர்க்கம் - சுவர்க்கம் - இன்ப உலகு; பராக்கு - நோக்கம்; பராமுகம் - கவனிப்பின்மை.

1. கார்த்தாலும் 2. சொற்க்கம் 3. திகள் 4.பாறாமுகமாய்.(11)

## தாய்

*12. 'நீயே திருவருள் பாலிக்க வேண்டுங்கை நீக்கிவிட்டால்*
*நாயேற்கிங் கோர்பற்று மில்லைகண் டாய்கிரி [1]இராசன்பெற்ற*
*சேயே [2]பரந்த புவன சராசர செந்துக்கெல்லாம்*
*தாயே [3]பெருங்கரு ணாலய வால சவுந்தரியே.'*

திருக்கருணைக் கிருப்பிடமாய இத்தலத்திலே எழுந்தருளியுள்ள இளமையும் அழகும் பொருந்திய தேவியே! மலையரசனாகிய இமவான் மகளாகப் பிறந்த அம்மையே! நீரால் சூழப்பெற்று மிகப் பரந்து விளங்கும் இந்நிலவுகின்கண் பொருந்தியுள்ள அனைத்துப் பொருள்களுக்கும் அருள்புரியும் தாயாக விளங்குபவள் நீ. நாயினும் கடைப்பட்டவனாகிய எனக்கு இந்நிலவுலகில் எந்தவிதமான துணையும் இல்லையாதலின் பற்றுக்கோடு அற்று இருக்கிறேன். என்னைக் கைவிட்டுவிடாமல் நீயே திருவருள் புரிந்து பேறு பெறச் செய்ய வேண்டுகிறேன்.

பாலித்தல் - அருளுதல், காத்தல்; பற்று - துணை, ஆசை; கிரிராசன் பெற்ற சேய் - பார்வதி; இமவான் (இமவந்தன், பர்வதராசன்) மேனகையை மணந்து கங்கை, பார்வதி என்னும் இருமகளிரைப் பெற்றுச் சிவபெருமானுக்குக் கொடுத்தான். வாலசவுந்தரி - இளமையும் அழகும் பொருந்திய பார்வதி.

1. இறாசன் 2. பறந்த 3. பெறுங்கரு. (12)

## சித்திரப்பாவை

*13. 'தரியேன் கந்தையைத் தள்ளேன் சிவாகம சாரமொன்றுந்*
*தெரியேன் குடும்பச் சிறைப்படு [1]வேன்கடைத் தேறச்செய்வாய்*
*வரியே ரணிபுயத் தெண்டிசை யோரண் டவாணா*
*யறியே லையன் பாஞ்சலி மாலை யணிபவளே.'*

எட்டுத்திக்குப் பாலகர்களாகிய தேவர் தலைவர்களுக்கெல்லாம் தலைவனாய் விளங்கும் ஐயனாகிய இறைவனின் பாகத்தைப் பெற்று வீற்றிருக்கும் அம்மையே! வரிகள் நிறைந்த அழகு தரும் திருப்புயங்களோடு

கூடிய சித்திரப் பாவையொத்து விளங்கும் தேவியே! அடியேன் உயர்ந்த ஆடையணிகளால் உன்னை அலங்கரித்து அறியேன். இறைவனது தன்மைகளை விளக்கும் பதிநூ லாகிய சிவ ஆகம சாரங்களைக் கல்லாது என்றும்நீக்குவேன் அல்லேன். மானம் இழந்து வாழ்தலைச் சிறிதும் பொறுக்க மாட்டேன். இறைவனின் தன்மைகளுக்கு என்றுமே அடிமையாவேன். என்னை ஈடேற்றி நல்வினைப் பெறச் செய்வது உன் அருளேயாகும்.

கந்தை - நல்லாடை; சிவாகமசாரம் - இறைப்பெருமைப் பதிநூல்; குட்டு - மானம்; சிறைப்படுதல் - அடிமையாதல்; கடைத்தேறுதல் - ஈடேறுதல், உய்வு அடைதல்; வரி - தேமல்; அணி - அழகு; எண்டிசையோர் - எட்டுத்திக்குப் பாலகர்; அக்கினி, இந்திரன், இயமன், ஈசானன், குபேரன், நிருதி, வருணன், வாயு - ஆகியோர்; ஆண்டவன் - தேவர்களுக்குத் தலைவன், சிவபெருமான்; பாஞ்சலி - சித்திரப்பாவை போல்வாள்.

1. கடத்தேற. (13)

## மணிமுடி

*14. 'அணிமுடி கடும்பல் லாயிர [1]கோடி யண்டத்தமரர்*
*மணிமுடி [2]தாழ்க்கும்பொன் னூ புரச் சீரடி வல்லிமனத்*
*தெணிமுடி யாத்துன் பிடர்ப்படு வேனை யெடுத்தடியார்*
*மணிமுடி சூடி யடிமைக்கென் றோவருள் [3]பாலிப்பதே.'*

அழகிய முடிசூடி விளங்கும் தேவர்கள் முப்பத்து முக்கோடி எனப்படுகிறார்கள். அந்தத் தேவர்களுடைய மணிமுடிகள் அனைத்தையும் கீழ்ப்படியச் செய்யும் பெருமை வாய்ந்தவை உன்னுடைய கிண்கிணியாகிய பொற் சிலம்பணிந்த திருவடிகள். அத்தகு திருவடிகளை உடைய வல்லிக்கொடி போன்ற அம்மையே: உன்னுடைய தொண்டனாகிய அடியேன் உள்ளத்தால் எண்ணிப் பார்க்கவும் முடியாத அளவிற்கு இவ்வுலக மாயைகளிற் சிக்கி இன்னல்பட்டுக் கொண்டிருக்கிறேன். அம்மையே என்னுடைய துன்பங்களிலிருந்து என்னை விடுவித்து உனது அடியார்களில் அடியேனும் ஒருவன் என்ற நிலையில் எனக்கு உயர்வளித்து அருள் புரியுமாறு வேண்டுகிறேன்.

அணிமுடி - அழகிய முடி; மணிமுடி - இரத்தினங்கள் பதித்த முடி; பல்லாயிரகோடி அமரர் - முப்பத்து முக்கோடி தேவர் என்பர்; அண்டம் - மேலுலகம்; தாழ்க்குதல் - கீழ்ப்படியச் செய்தல்; மணிமுடிகள் - திருவடிகளில் பதியுமாறு விழுந்து வணங்கச் செய்தல்; நூபுரம் - கிண்கிணி, சிலம்பு; எணி- எண்ணி என்பதன் இடைக்குறை; துன்பிடர் - துன்பு இடர் - துன்பம்; சீரடி - பெருமை பொருந்திய திருவடிகள்.

1. கொடி 2. தாள்க்கும் 3. பாவிப்பதே. (14)

## பணாடவிப்பார்

*15 'பாலிற் சிறந்த [1]பனிமொழியே நின்பொற் பாடகப்பூங்*
*காலிற் சிறுதுகள் மாமுடி மேற்பட்ட காரணத்தால்*
*ஆலிற் சிறந்த பணாடவிப் பார்முத லண்டமெல்லாஞ்*
*சேலிற் படைப்பதுங் [2]காப்பதும் நான்முகன் சீதரனே.*

பாலினும் உயர்ந்த பலனுடையதாக, மிகவும் இன்பம் தரத்தக்கதாக அன்பு மொழி பேசும் அம்மையே! பரந்த ஆலமரத்தின் விழுதுகளைப்போல ஆயிரம் படங்களோடு கூடிய தலையினை உடைய ஆதிசேடனால் தாங்கப்பெறும் இந்த நில உலகத்தை எல்லாம் படைக்கின்றார் நான்முகன், நான்முகனால் படைக்கப் பெற்ற அனைத்து உயிர்களையும் அளித்துக் காக்கின்றார் திருமால். இவர்களின் ஒப்பற்ற இத்தொழில்கள் நடைபெறுவதற்குக் காரணமாக விளங்குபவள் நீயே! பொன்னால் செய்யப்பெற்ற காலணிகளை அழகுற அணிந்து உள்ள உனது திருவடிகளின் தூசானது, உன்னைப் பணிந்து நிற்கும் நான்முகன், திருமால் ஆகியோரின் சிறந்த மணிமகுடத்தில் பட்டதன் பயனாகவே இவ்வரிய செயல்கள் நடைபெறுகின்றன.

பாடகம் - மகளிர் காலணி; துகள் - புழுதி; ஆல் - ஆலமரம்; பணம் +அடவி = பணம் - பாம்பின் படம்; அடவி - காடு; ஆயிரம் படங்களை உடைய ஆதிசேடன்; சீதரன் - ஸ்ரீதரன் - திருமால்.

1. மொளியே 2. கார்ப்பதும். (15)

## *மண அம்மி*

*16. 'சீதமதிக் குந்தன மிக்க நின்செல்வத் திருவடிப்பிர*
*சாதமதிக்கு மெனமேன் மேல்வைக்க வீசன் சகித்திலனோ*
*[1]வேதமதிக் குமணவம் மிமீது விமல நின்பொற்*
*பாத மதிக்கப் பெறாமலன் றோகரம் பற்றியதே.'*

அம்மையே! வேத முறைப்படியமைந்த உங்கள் திருமணத்தின்போது அம்மி மிதித்தல் என்னு முறையால் அம்மியின்மீது உன்னுடைய பொன் போன்ற அழகிய திருவடிகள் பொருந்துவதைப் பொறுக்க இயலாத இறைவன் தம்முடைய கைகளினாலே உன்னுடைய திருவடிகளைத் தாங்கி நின்றாரல்லவா? உன்மீது அத்தகு கருணை உள்ளவர் எம்பெருமான். எனவேதான் குளிர்ச்சி பொருந்தியதும், இறைவனின் திருமுடியிலுள்ள இள நிலவின் வடிவம் அழுந்திப் படிந்துள்ளதும், செல்வச் சிறப்புடையதுமாகிய உனது திருவடிகளாகிய அருளமுதத்தைப் பெற விரும்பும் அடியேன்மீது இரக்கம் கொண்டு அருள்பாலிப்பதன் பொருட்டு உனது திருவடிகளை என்மீது வைக்கவும் இறைவனால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை.

சீதமதி - குளிர்ச்சிப் பொருந்திய சந்திரன்; பிரசாதம் - அருளாகிய அமுதம்; விமலன் - தூயவனாகிய சிவபெருமான்; பொறாமல் - பொறுக்கமாட்டாமல்.

1. வெதமதி. (16)

## *கருணை மணி*

*17. 'பற்றார் புரங்குறு மூரலிற் காய்ந்தவன் பங்கில்வளர்*
*முற்றா முகிழ்முலை [1]மொய்குழ லாளை முனிவர்தொழும்*
*வற்றாக் கருணை மணியைக் கருத்தினில் வைத்திறைஞ்சப்*
*பெற்றா ரன்றோவந் துதித்தி னாற்பலன் பெற்றவரே.'*

இரும்பு, பொன், வெள்ளி என்னும் மூவகை மதில்களை உடையனவும், தம் பகைவர்களுக்குரியனவுமாகிய முப்புரங்களையும் தமது இள

புன்முறுவலினாலே எரித்தவர் எம்பெருமான். அப்பெருமானின் வலது பாகத்தைப் பெற்று விளங்குபவளும், இளமை வாய்ந்த அழகிய நகில்களை உடையவளும், புதிய மலரை யணிந்து வண்டுகள் மொய்க்கின்ற அழகிய கூந்தலை உடையவளும், முனிவாகளெல்லாம் தொழுகின்ற பெருமை வாய்ந்தவளும், என்றும் குறைவில்லாத அருள்புரியும் திருவுள்ளத்தை உடையவளும், மாணிக்கம் போன்று உலகுக்கு ஒளி செய்பவளுமாகிய உமையம்மையைத் தங்கள் உள்ளத்திலே என்றும் மறவாது நிலைபெறச் செய்து துதித்து வருபவர்களே இந்த நிலவுலகத்திலே மனிதராய்த் தோன்றியதனால் பெற்ற பயனைப் பெற்று உயர்ந்தவர்களாவார்கள்.

பற்றார் - பகைவர்; புரம் - திரிபுரம் - அவை இரும்பு மதில், பொன் மதில், வெள்ளி மதில்களையுடைய மூன்று நகரங்கள்; காய்தல் - எரித்தல்; பண்பு - பாகம்; முகிழ்முலை - இளமை வாய்ந்த அழகிய நகில்கள்; மொய்குழல் - வண்டுகள் மொய்க்கின்ற கூந்தல்; வற்றா - குறையாத, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

1. மொய்குளல். (17)

## பெற்றவள்

*18. பெற்றவள் பிள்ளையைப் பேணா விடிலந்தப் பிள்ளைதன்மை*
*மற்றெவர் கட்குத் தெரியுஞ்சொல் லாயுன்னை வந்துதஞ்ச*
*முற்றவென் றுன்ப மொழிப்பாய் தவஞ்செய் துயர்ந்தவர்க்குங்*
*கற்றவர் கட்கு மமுதே கருணையங் கற்பகமே.*★

இவ்வுலக இன்பங்களை எல்லாம் துறந்து தவம் மேற்கொண்டு அத்தவ மகிமையால் உயர்ந்த விளங்குகின்றவர்களுக்கும், கற்க வேண்டிய நூல்களைமத் தேர்ந்து கற்று, அக்கல்வியின் சிறப்பால் உயர்ந்து விளங்குகின்றவர்களுக்கும், நிலையான இன்பத்தை விளைவிக்கின்ற அமுதமாக விளங்கும் அன்னையே! கருணை நிறைந்த உள்ளத்தினாலே அன்பர்கள் வேண்டியதையெல்லாம் அளிக்கக்கூடிய கற்பகத் தரு போன்ற தேவியே!

குழந்தையைப் பெற்றெடுத்த தாயே தன் பிள்ளையின் தன்மையறிந்து ஏற்ற முறையில் பேணி வளர்க்காவிட்டால் அந்தப் பிள்ளையின் அருமைத் தன்மைகள் வேறு யாருக்குத் தெரியும்? தாயைத் தவிர வேறு யாரும் அறியார். எனவே, அடைக்கலம் என்று வந்தடைந்த என்னுடைய பிறவித் துன்பத்தை ஒழித்து அருள் புரிவாயாக.

பேணாவிடில் - பாதுகாக்காவிட்டால்; பேணுதல் - பாதுகாத்தல்; கற்பகம் - கற்பகத் தரு; விரும்பியதைத் தருவது; தேவர் உலகில் உள்ளது. (18)

## கல்வியும் செல்வமும்

*21 'திருவுந் திறமையுஞ் செவ்வியுங் கல்வியுஞ் செல்வமுஞ்சீ*
*[1]ருருவு மொருக்கமு முற்றிட லாமறை யுச்சிக்கெடா*

★ 19,20-ஆம் பாடல்கள் உள்ள ஏடு இல்லை.

*தருவு [2]முருவும் கண்டமு மண்டமு மானவனை*
*மருவுங் கருணை வடிவைத் தியானத்தில் வைத்தவர்க்கே.'*

நான்மறைகளுக்கெல்லாம் எட்டாத வடிவமாகவும், அருவமாகவும், உருவமாகவும் அன்பர்கள் இடையே விளங்கி இந்நில உலகம் முதலான அகில உலகமுமாக விளங்குகின்ற எம்பெருமானைத் தன் தலைவனாகப் பெற்றுள்ள கருணாம்பிகை அம்மையை இடைவிடாது உள்ளத்திலே இருத்தித் துதித்து வருவோர் இவ்வுலகிலே எல்லா வகையான செல்வங்களை நிரம்பப் பெறலாம். அனைத்துத் திறமைகளும் ஒருங்கே அமையும். பலவகை அழகுகள் நிரம்ப கல்விச் செல்வம், அழகிய வடிவம், உயர்ந்த ஒழுக்கம் ஆகிய எல்லா வகையான பண்புகளையும் பெற்றிடலாம்.

உற்றிடல் - அடைதல்; மறை - வேதம்; அருவும் உருவும் - உருவம் அற்ற நிலை,உருவம் உள்ள நிலை; அகண்டமும், அண்டமும் - அளவில்லாது விரிந்த உலகம்; மருவுதல் - அடைதல்.

1. செல்வமுஞ்சீறுருவு 2. மருவும். (21)

## மூவிலைச் சூலம்

2. *'வையத்தனி [1]வேலன்ன கண்ணியர் கொங்கைக்கும் வாளரவின்*
*பைத்தலை யல்குற்கு மேங்கிக்கண் ணாடியிப் பாருலகிற்*
*பொய்த்தலை யாதருள் வைத்தே துணைச்செய்யப் போதுகண்டாய்*
*நெய்த்தலை மூவிலைச் சூலங்கை தாங்கிய நீயெனக்கே.*

நெய்பூசப்பெற்றுக் கொழுவிய மூன்று இலை போன்ற பிரிவுகளையுடைய சூலாயுதத்தை ஏந்தி விளங்கும் கருணாம்பிகையே, அழகிய கூர்மையும் ஒப்பற்ற தன்மையும் வாய்ந்த கரிய வேலினை ஒத்த கூர்மையான கண்களை உடையவர்களாகிய பெண்களின் அழகிய உறுப்பாகிய நகிலையும் கொல்லும் தன்மை வாய்ந்த கொடிய பாம்பின் தலையாகிய படத்தை ஒத்த அவர்களின் அல்குலையும் அடைய விரும்பி அவற்றிற்காக ஏக்கம் கொண்டு அவற்றை அடையும் செயலிலேயே ஈடுபட்டு அலைகின்றேன். இவ்வுலகின்கண் பொய்யான பொருளை விரும்பி அலையும் என்னை நல்வழிப்படுத்தத் துணைபுரிந்து இப்போதே அருள்புரிவாயாக.

வை - கூர்மை; தனிவேல் - ஒப்பற்ற வேலாயுதம் - என்ன - உவமை உருபு; கண் +நாடி=பார்த்துப் பார்த்து அலைதல்; பொய்த்து + அலையாது; நெய்த்தலை - நெய் பூசப்பட்ட நுனி; மூவிலைச் சூலம் - மூன்று பிரிவுடைய இலை வடிவான சூலாயுதம். (22)

1. லேலன்ன.

## புவனம் ஈன்றாள்

23. *'எனக்குத் துணை யம்மை நீயன்றி வேறில்லை யீன்றசிறார்*
*தனக்குப் பரிவது தாயன்றி மற்றில்லைத் தாரணியில்*
*உனக்குப் பிறிதிங்கி யானுபச் சார முரைப்பதேன்னே*
*கனக்கும் புவனங்கள் யாவையும் ஈன்ற [1]கனங்குழலே.'*

உயிருள்ளவை, உயிரற்றவை என்ற நிலையில் பலவகையான பொருள்களால் நிரப்பப்பெற்று விளங்கும் இப்பரந்த நில உலகத்தினைத் தோற்றுவித்துப் பாதுகாத்து வரும் கருணாம்பிகையே! நீ தோற்றுவித்த உயிர்க்கண் அடியேனும் ஒருவன். இவ்வுலகத்தில் பெற்றெடுத்த குழந்தைகளிடத்தில் பரிவு காட்டிக் காத்து முன்னேறச் செய்வது தாயின் கடமையேயாகும். பிறருக்கு அப்பிள்ளையின் அருமை தெரியாது. நீ இந்தத் தத்துவத்தை அறியாதவள் அல்லள். எனவே நான் இவற்றையெல்லாம் உனக்கு எடுத்துக்கூறுவது அதிகப்படியான வார்த்தைகளாகும். எனவே, எனக்குத் துணையாக நின்று ஆதரிக்க வேண்டியவள் நீயேயல்லாது வேறு எவரும் இலர்.

சிறார் - குழந்தைகள்; பரிவது - அன்பு காட்டுவது; தாரணி - பூமி; பிறிது இங்கு யான் உரைப்பது என்ன எனப் பிரிக்க; கனக்கும் - மிகுந்த சுமையை யுடைய; புவனம் - பூமி; கனங்குழல் - அடர்ந்து நீண்டு வளர்ந்த கூந்தல், வினைத்தொகை. (23)

1. கணங்குளலே.

## ஒரு துணை

*24. 'குழலுந் திருச்செவிக் கொந்தள வோலையுங் கோலவண்டு*
*சுழலும்பைங் காந்தளஞ் சூடகக் கையும்பொற் றோளுமணிக்*
*கழலுமின் பாடகமும்பூஞ் சிலம்புங் கவிக்குப் பொற்றாள்*
*நிழலுமென் னாவிக் கொருதுணை யாய்வந்து நின்றதுவே.'*

அலைந்து திரியும் என் உயிருக்குத் துணையாகிக் காத்து அருள் புரிய என் எதிரிலே ஓர் உருவம் தோன்றியது. அவ்வுருவம் நீண்ட கூந்தலையுடையதாய் காணப்பெற்றது. அழகிய காதுகளிலே தாழை மடல் போன்ற பொன்னாலான ஓலைச் சுருளினை அணிந்திருந்தது. அழகிய வண்டுகள் மொய்க்கின்ற பசுமையான காந்தள் மலரை ஒத்ததும், அழகிய வளையல்களை அணிந்து விளங்கியதுமான கைகளைப் பெற்றிருந்தது. அவ்வடிவத்தின் தோள்கள் பொன்னாகின்றது போன்று அழகுற விளங்கியது. மாணிக்கத்தையொத்த அழகிய திருவடிகளிலே ஒளிபொருந்திய பாடகம், சிலம்பு போன்ற அணிகளை அணிந்திருந்தது. அத்தகு பொன் போன்ற திருவடிகளின் நிழலே என்னுடைய உயிருக்குத் துணையாயின.

குழல் - கூந்தலின் ஐவகைகயில் ஒன்று; அது சுருட்டி முடித்தது; கொந்தளம் - தாழை; கோலவண்டு - அழகிய வண்டு, சுற்றித் திரியும் வண்டு; மின் - ஒளி; பாடகம் - ஒருவகைக் காலணி; பூஞ்சிலம்பு - அழகிய சில்ம்பு; பசுமை + காந்தள் = பைங்காந்தள் - காந்தள் மலர் உருவகமாய்க் கையைக் குறித்தது.

பொன் + தோள்; கழல் - கால், காலணி; பொன் + தாள். (24)

## சேவடி

*25. 'நின்றாலும் வீற்றிருந் தாலுந் துய்த்தாலும் நெடிதுநெறி*
*சென்றாலுங் கண்டுயின் றாலுமென் சிந்தையுன் சேவடிக்கண்*
*ணொன்றா யிருப்பதல் லான்மற்று வேறிலை யுத்தமியே*
*யன்றாலு மீசற் கமுதாக் கியமெய் யருண்மயிலே.'*

தேவர்களின் பொருட்டுத் திருமால் திருப்பாற் கடலைக் கடைந்த அன்று உண்டான நஞ்சினைச் சிவபெருமான் உண்டபோது அதனைக் கண்டத்திலே நிறுத்தி, அந்த நஞ்சினை அமுதமாக ஆக்கி உயிரைக் காத்தருளிய கருணாம்பிகை என்னும் உத்தமியாகிய தேவியே! அடியேன் செயலற்று நிற்கின்ற போதும், இத்தரையின்கண் வீற்றிருக்கின்ற போதும் என்னுடைய உள்ளமானது உனது திருவடிகளை எண்ணி எண்ணி அத்திருவடிகளோடு இணைந்துவிடுகிறது. அடியேன் உயிர் வாழ்தல் விரும்பி உணவு முதலியவற்றை உண்கின்றபோதும், நீண்ட தூரம் நடந்து செல்லுகின்ற போதும், களைப்பு மிகுதியால் அயர்ந்து உறங்குகின்றபோதும் என்னுடைய உள்ளமானது உனது திருவடிகளிலேயே ஐக்கியமாகிவிடுகிறது. இத்தன்மையைத் தவிர அடியேனுடைய செயல்களிலே வேறு செயற்பாடுகள் தோன்றுவதில்லை.

துய்த்தல் - உண்ணுதல் முதலான செயல்கள்; நெடிது நெறி - நீண்ட வழி; கண் + துயின்றாலும் - கண் உறங்கினாலும்; சேவடி -செம்மை + அடி - அழகிய திருவடிகள்; கண்+ஒன்றாய் = கண்-ஏழன் உருபு; ஒன்றாகி இணைதல்; உத்தமி - பார்வதி; அன்று - கடல்கடைந்த அன்று; ஆலும் - ஆல்+உம்- ஆலம் - நஞ்சு.

(25)

## தொண்டு கொண்டவள்

*26. 'மயிலே களப மடப்பிடி யேயிம வான்மகிழ்ந்து*
*கயிலே சனுக்கருள் கண்மணி யேகன கத்திறைக்கும்*
*வெயிலே கருணை[1]விளக்கே தென்புக்கொளி வேதவனக்*
*குயிலே யருட்கொடியே யடியேன் றொண்டு கொண்டவளே.'*

அடியேனாகிய என்னை உனது திருவடிகளிலே தொண்டு செய்யுமாறு பணித்து ஆட்கொண்டவளாகிய தேவியே! மயிலினும் இனிய சாயலையுடைய அம்மையே! மடப்பம் பொருந்திய பெண் யானையின் தன்மையை ஒத்து விளங்குபவள் நீ. மலையரசனாகிய மலயத்துவச பாண்டியனின் தவப்புதல்வியாய்த் தோன்றிய நீ, உனது தந்தையாகிய அம்மன்னனாலே கயிலையம் பெருமானாகிய சிவபெருமானுக்கு மகிழ்ச்சியோடு மணமுடித்துக் கொடுக்கப்பெற்றவளாவாய். ஒளிமிக்க உன்னுடைய வடிவம் பொன்னானது வாரிச் சொரிகின்ற வெயில் போன்ற ஒளியினை உடையதாகும். உலக உயிர்களுக்குக் கருணை பொழியும் ஒளி விளக்காக அமைந்த நீ தென்னாட்டுக் கயிலாயமாகிய திருப்புக் கொளித்திருத்தலத்தில் திருமறைகளின் ஒலிபோல ஒலிக்கும் குயிலாக வீற்றிருக்கும் பேறு பெற்றவளாவாய். அருளே வடிவாகி வந்த கொடி போன்றவளே! என்னை ஆட்கொண்டவள் நீயே ஆவாய்.

களபம் - யானை; மடப்பிடி - மடப்பம் பொருந்திய பெண் யானை; இமவான் - இமய மலை நாட்டு மன்னவன்; கயிலேசன் - கயிலை மலையிலே எழுந்தருளியுள்ள சிவபெருமான்; கண்மணி - கண்ணினுள் விளங்கும் பாவை போன்றவள்; கனகம் - பொன்; இறைத்தல் - வாரிச்சொரிதல், வீசதல்; வெயில் - ஒளி.

1. விழக்கே.

(26)

## சிவசங்கரி

27. 'கொண்டலை வென்ற [1]குழலிய ராசைக் கொழுங்கனியை
யுண்டலை யாதுன் னருள்வழிக் கேயுயி ருய்யச்செய்வாய்
விண்டலைக் குங்குட முக்கனித் தேறல் விளைந்தொழுகும்
தண்டலைக் கற்பகப் புக்கொளி யூர்ச்சிவ சங்கரியே.'

மா, பலா, வாழை என்று சொல்லப்பட்ட நன்கு விளைந்த முக்கனிகளில் இருந்து தோன்றும் தேனானது ஆகாய கங்கையினைப்போலப் பெருக்கெடுத்து ஓடும், சிறந்த கற்பக மரங்கள் நிறைந்த சோலைகளை உடைய திருபுக்கொளி எனும் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள சங்கார மூர்த்தியின் தேவியாகிய சங்கரியே! மேகத்தை தோற்கடிக்கின்ற கருமையும், அடர்த்தியும் வாய்ந்த அழகிய கூந்தலை உடைய மகளிருடைய இன்பத்தைத் தேடி, அனுபவித்து அலைகின்ற அடியேனை இனியேனும் அவ்வாறு அலையாது உனது அருட்கண் பார்வைச் செலுத்தி என்னுடைய உயிரானது உய்யுமாறு அருள்புரிவாயாக.

கொண்டல் - மேகம்; குழலி - கந்தலை உடையவள்; கொழுமை+கனி - கொழுங்கனி; உண்டு + அலையாது; தேறல் - தேன்; தண் + தலை - தண்டலை; கற்பகம் - தேவதாரு; சங்கரி - பார்வதி. (27)

## விருதுகள்

28. 'கரியுங் கவிகையுந் தேரும் பதாகினி யுங்கவனப்
பரியுஞ் சிவிகையும் பன்மணி யாரமும் [1]பாலமிர்தஞ்
சொரியுங் கருணைச் சவுந்தரி நூபுரச் சோதிதுன்றி
விரியுங் [2]கழற்கன்பு செய்வார்க் குண்டான விருதுகளே.'

பால் அமிர்தமாகிய சிறந்த உணவினை வாரி வழங்கும் கருணை உள்ளம் படைத்தவள் கருணாம்பிகை. சிறந்த ஒளியும், அழகும் நிறைந்தவளாகிய பாதக் கிண்கிணி ஒலிக்கின்றதும் சிறந்த ஒளியை வீசக்கூடியதுமாகிய அவ்வம்மையின் திருவடிகளில் என்றும் நீங்காத அன்பு செய்பவர்கள் இந்நிலவுலகில் உயர்ந்த விருதுகளைப் பெறுவார்கள். அவ்வன்பர்கள் பெறும் விருதுகளாவன உயர்ந்த யானைகள், தேர், காலாட்படை, விரைந்து செல்லும் குதிரைகள், ஏறிச்செல்லப் பயன்படும் பல்லக்கு, நவமணிகளால் ஆன ஆபரணங்கள் போன்ற அரசச் செல்வங்கள் அனைத்துமே அந்த அன்பர்கள் பெறுவார்கள என்பதாம்.

கரி-யானை; பதாகினி - காலாட்படை; பரி- குதிரை; சிவிகை-பல்லக்கு ; சொரிதல் - வாரி வழங்குதல்; சவுந்தரி - அழகு உடையவள்; நூபுரம் - காலணிகளுள் ஒன்று(சிலம்பு, கிண்கிணி); விருது- பரிசுப் பொருள்கள்.

1. பாலமுர்தம் 2. களற்கன்பு. (28)

## பொலன்கொடி

29. 'விருதிட்ட வென்றி மயிடா சுரன்புய வெற்பொடியப்
பொருதிட்ட வாகைப் பொலன்கொடி யேயுன்னைப்

போற்றியுள்ளங்

*கருதிட்ட போது கவலையுன் டோவுன் கருத்துக்கிது*
*பெருதிட்ட மோவுரை [1]யாயறி யாமடப் பேதைமைக்கே.'*

தேவியே! உன்னுடன் பலவகையான வடிவுகொண்டு போரிட்ட மகிஷாசுரன் என்பவன் மகிஷம் என்னும் எருமை கொண்டு போரிட்டபோது சண்டிகை வடிவில் தோன்றி மலையை ஒத்த அவனுடைய தோள்கள் முறியும்படியாகச் செய்து இறுதியில் அவனைக் கொன்று வாகை சூடிய பொற்கொடி போன்றவளே! உன்னை உளமாரத் துதித்து உன்னையே நினைத்த போதெல்லாம் சிறிது கவலை இல்லாது செய்துவிடுவாய். தேவியே இச்செயல் எங்களுடைய அறியாமையாகிய மடமைத் தன்மையை நீக்குதற்கு நீ செய்த பெரிய திட்டமாகும் என்று கருதுகிறேன். உன்னுடைய கருத்தைக் கூறுவாயாக.

விருது -விரதம்; வென்றி - வெற்றி; மயிடாசுரன் - மகிஷாசுரன்; புயவெற்பு - புயமாகிய; மலை - உருவம்; பொருது- போர்செய்து; வாகை - வெற்றி; பொலன் கொடி - பொற்கொடி - உருவகம்; கருதுதல் - நினைத்தல்; மடப்பேதை - மடமை என்னும் அறியாமை, இரு பெயரொட்டு.

1. யரியா. (29)

## அறிவிலர்

*30. '[1]சுமைப்புகழ் [2]வார்பெருஞ் செல்வம்வந் தாற்றெய்வ*
*[சார்பையுன்னார்*
*சுமைப்படு துன்ப மிடிப்படில் வேதனை தூற்றிடுவார்*
*எமைப்புரந் தாண்டரு ளுங்கரு ணாலய யீஸ்வரிதன்*
*னமைப்பிது வாமென் றுணரா [3]ருலகத் [4]தறிவிலரே.*

அறிவில்லாதவர்களாகிய உலக மக்கள் தங்களுக்கு மிகுதியான செல்வம் வந்துற்றபோது இது எம்மையெல்லாம் படைத்துக்காத்து ஆண்டு அருள்புரிகின்ற கருணாம்பிகையாகிய உமையம்மையின் அருளால் உண்டான பெரிய செல்வமாகும் என்று எண்ணி மகிழ்ச்சியடைவதை ஒழித்துத் தங்கள் அரிய செயலால் உண்டான செல்வம் என்று கூறிப் பெருமைப்பட்டுக் கொள்ளுவார்கள். அந்தத் தேவியின் சிறப்பை எண்ணிப் பார்க்கவும் மாட்டார்கள். ஆனால் அவர்களைத் தாங்க முடியாத அளவு வறுமையுற்றுத் துன்பம் அடைகின்றபோது இது தெய்வத்தின் செய்த கொடுமை என்று கூறித் தங்கள் வேதனையை உலகமறியப் பறை சாற்றி வருத்தம் அடைவார்கள்.

தெய்வச்சார்பு - தெய்வத்தால் நிகழ்ந்த செயல்; உன்னார்- நினைக்க மாட்டார்கள். சுமைபடுதுன்பம் - பாரம் மிகுந்த துன்பம், தங்களால் தாங்க இயலாத மிகுந்த வருத்தம்; மிடி - வறுமை; வேதனை - துயரம்; தூற்றுதல் - பலர் அறியக் கூறுதல்; புரத்தல் - பாதுகாத்தல். 'வேதனைத் தூற்றிடுவார்' என்று பாடம் கொண்டால், தம்மைப் படைத்த பிரமனைப் பழிப்பார் என்பது பொருளாம். வேதண் - பிரமன்.

1. சுமைப்புகள் 2. வார்பெறுஞ்செல்வம் 3. குலகத் 4. தரிவிலரே.
(30)

## இமையாசலபுத்திரி

31 *'அறியாமை யிற்சிறி யோர்பிழை யாற்றி லறஞ்சிறந்த*
*நெறியார் பொறுத்தருள் கூர்வதன் னோர்கொள்கை நீர்மையில்லா*
*[1]வெறியாமென் புன்மதி மாற்றிமெஞ் ஞானம் வியந்தளிக்கப்*
*[2]பொறியா முனக்கன்ன மேயிமை யாசல புத்திரியே.'*

மலயத்துவச பாண்டியனின் மகளாகத் தோன்றி இமயத்தின் உச்சியாகிய வெள்ளியங்கிரியிலே எழுந்தருளியுள்ள சிவபெருமானின் தேவியாக வீற்றிருக்கும் எம்பெருமாட்டியே! அன்னத்தினை ஒத்த நடை வாய்ந்த உமையம்மையே! என்னைப்போன்ற அறிவில்லாத அற்பர்கள் தங்கள் அறியாமையாலயே பிழைகள் செய்வார்களேயானால் அறநெறிகளிலே உயர்ந்து விளங்கும் சான்றோர்கள் அப்பிழைகளைப் பொறுத்து அவர்களை மன்னிப்பதோடு அவர்களுக்கு அருள்புரிவதும் அச்சான்றோர்களின் உயர்ந்த செயல்களாகும், அம்மையே! ஒழுக்க நெறிகளைச் சிறிதும் பின்பற்றாத அற்ப புத்தியையுடைய முரடனாகிய என்னுடைய அறியாமையைப் போக்கி நல்லறிவைப் புகட்டும் உயர்ந்த நெறி உன்னிடமே உள்ளது. அறிவைப் புகட்டுவாயாக.

சிறியோர் - அறிவிற்குறையுடையோர்; ஆற்றுதல் - செய்தல்; நெறியார் - அறவழியில் செல்லுவோர் (நெறி - வழி); நீர்மை - ஒழுக்க நெறி; வெறி - முரட்டுத்தன்மை; புன்மதி - அற்பப்புத்தி; மெய்ஞ்ஞானம் - நல்லறிவு; பொறி - ஐம்பொறிகளாகிய உறுப்புகள்; இமயாசல புத்திரி உமாதேவி. இமயம் + அசலம் - இமயாசலம், அசலம் - மலை.

1. வெரியா 2. பொரியா. (31)

## பத்தாயிரங்கண்

32. *'புத்தா ரமுத மொழுகுஞ்செவ் வாயும் புரிகுழலும்*
*முத்தார முஞ்சண்பை யார்க்கமு தூட்டு முலைத்தளமுங்*
*கொத்தாருங் கிண்கிணிப் பொற்றாள் களுங்களி கூர்ந்துதொழப்*
*பத்தா யிரங்கண் படைத்தா னிலைமலர்ப் பண்ணவனே'*

ஞானமாகிய உயர்ந்த புதிய அமிழ்தம் ஒழுகும் பவளம் போன்ற சிவந்த வாயினை உடையவள் நீ. சுருண்ட அழகிய கூந்தலையும் முத்துக்களால் ஆன அழகிய மாலையையும் உடையவள். சீர்காழிப் பெருமான் ஆகிய திருஞான சம்பந்த மூர்த்திக்குப் பால் ஊட்டிய தனங்களை உடையவள். ஒலிக்கக்கூடிய கொத்துகளை உடைய கிண்கிணி என்னும் பொன்னால் ஆகிய பாதசரங்கள் விளங்குகின்ற திருவடிகளை உடையவள் நீ. இத்தகைய உன்னுடைய அழகை எல்லாம் கண்ணால் கண்டு மகிழ்ச்சி அடைந்து உன்னைத் தொழுவதற்கு விரும்புகின்றேன். ஆனால் உன்னுடைய அழகைக் காண்பதற்குத் தாமரை மலரை இருப்பிடமாகக் கொண்ட பிரும்மதேவன் எனக்கு பத்தாயிரம் கண்களைப் படைத்தான் இல்லை.

புத்தாரமுதம் - புதுமை +ஆர் + அமுதம் - புதுமை நிறைந்த அமுதம்; பண்பு புணர்ச்சி; புரிகுழல் - சுருண்ட கூந்தல்; வினைத்தொகை; சண்பையார் சீர்காழிப் பெருமான் ஆகிய திருஞானசம்பந்தர்; சண்பை - சீர்காழி; மலர்ப்பண்ணவன் - பிரும்மதேவன். (32)

## நெஞ்சமே

33. 'பண்ணீர்மை [1]யிற்பழம் பாடலிற் [2]புக்கொளி பார்ப்பதியைக்
கண்ணீர் பெருகத் துதித்துரு காமல்வெங் கானலைமான்
றண்ணீரென் றோடித் தளர்வது போலென்றுஞ் சஞ்சலத்திற்
புண்ணீர்மை கொண்டு நெஞ்சமேகளித் தாய்பல போதையுமே.

ஏ நெஞ்சமே! நீ மிகவும் அறியாமை உடையாய். பாலைவனத்திலே உள்ள வெறும் கானல் நீரை உண்மையான தண்ணீர் என்று எண்ணி வெகு ஆவலோடு ஓடிய மானானது வெறும் கானல் நீர் என்று அறிந்து சோர்வு அடையும். அதுபோல திருபுக்கொளியில் எழுந்தருளி உள்ள உமையம்மையின் பழம்பெரும் பழமைகளையும் உயர்ந்த ஒழுக்க நெறிகளையும் அன்பு உள்ளத்தையும் உணர்ந்து பழம்பெரும் பாடல்களின் மூலமாக அவளைத் துதித்து ஆனந்தக் கண்ணீர் பெருக நிற்றல் வேண்டும். அவ்வாறு செய்யாது அற்பச் செயலில் மயங்கி கானலைக் கண்டு மயங்கிய மான்போலத் துன்பத்திற்குள்ளாகி நிற்கின்றாய்.

பண்ணீர்மை-பண்+நீர்மை - இசைத்தன்மை, புகழ்; பார்ப்பதி- பார்வதி; கானல் - பாலை நிலத்தன்மை கானல் நீர்; தண்ணீர்போலத் தோன்றும் பொய்த்தோற்றம்; தளர்தல் - சோர்வு அடைதல்; புண்ணீர்மை - அற்பத் தன்மை; போது-பொழுது.

1. பளம் 2. புக்கொழி. (33)

## சீதாபதி

34. 'போதா வெனப்புன் மதிப்பாடலை வேதம்புகுந்ததிருக்
காதாரக் கேட்டெம் பெருமாட்டி யுள்ளக் கருணையினால்
சீதா பதிபர வுங்கரு [1]ணாலயச் செல்வியென்னை
மாதா வுதரத் துறாதடைத்தாள் சென்மவாசலையே.'

திருப்புக்கொளிப் பதியில் எழுந்தருளி உள்ள கருணாம்பிகையே! உயர்ந்த கருத்துகளைக் கொண்ட நான்மறைகளும் ஒலித்துக் கொண்டு இருக்கின்றவை உன்னுடைய திருச்செவிகள் மிகவும் அறியாமை நிறைந்த அடியேனுடைய பாடல்களையும் ஞானத்தால் நிறைந்தவை என்று கொண்டு உன்னுடையச் செவிகளினால் கேட்டு அருளினாய். அவ்வாறு கேட்ட எம்பெருமாட்டியே! திருமாலாகிய இராமபிரானே வணங்கக்கூடிய கருணாலயச் செல்வியே! என்னுடைய பாடல்களைக் கேட்டு உள்ளம் மகிழ்ந்த காரணத்தால் என்மீது அன்பும் இரக்கமும் காட்டித் தாயின் வயிற்றிலே இருந்து பிறக்கின்ற பிறப்பு நிலையை மீண்டும் அடையாதவாறு சென்ம வாசல் என்னும் பிறவிக்கதவினை அடைத்துப் பிறவா வரமாகிய அருள் புரிந்தாய்.

போதா - போதாத - தகுதியற்ற; புன்மதி - அற்ப அறிவு; சீதாபதி - சீதையின் கணவர், இராமபிரான்; உதரம் - வயிறு; சென்மவாசல் - பிறவி எடுக்கும் நிலை.

1. கருணாலைய. (34)

## பாச வினைக் கயிறு

35. 'வாசலை யொன்பது வைத்தே யியற்றி வழும்பையென்பின்
மூசலைத் தோலின் புறம்போர்த்து மூடி முடித்துலகின்

*வீசலைப் பாச வினைக்கயிற் றாற்கட்டி விட்டசடத்*
*தூசலை யாற்று கிலேன்கரு [1]ணாலய வோதிமமே.'*

புக்கொளிப்பதி கருணாம்பிகையே! அன்னத்தை நிகர்த்தவளே! மனிதப் பிறவி என்னும் இப்பிறப்பிலே ஒன்பது வாயில்களை அமைத்து பிறக்கச் செய்தாய். அவ்வுடம்பிலே அழுக்கும் கொழுப்பும் நிறைத்து அழியக் கூடியதாகிய தோலினை புறத்திலே மூடி அவ்வுடம்பினை உருவாக்கி விட்டாய். அவ்வுடலாகிய உருவினாலே இந்த நில உலகத்தின் கண் எல்லா வகையான பாசங்களையும் பெறுமாறு பணித்தாய். அப்பணியே நீ எனக்கு அளித்த பாசக் கயிறாக விளங்க இவ்வுலகத்திலே இணையான ஒரு நிலையைப் பெற்றுவிட்டது. சிறப்பில்லாத வெற்றுச் சடமாகிய இந்த உடல் ஆகிய ஊசலினால் நான் சிறிதும் மகிழ்ச்சி அடையேன். இந்த ஊஞ்சல் நிலையை மாற்றி அருள்புரிவாயாக.

வாசல் - நுழைவழி, ஐம்பொறிகளில் அமையும் துவாரங்கள்; வழும்பு - நிணம், கொழுப்பு; மூசல் - சாதல், மொய்த்தல்; வீசல் - நீக்குதல்; பாசம் - அன்பு; சடம் - உடல்; ஆற்றுதல் - ஏற்று மகிழ்தல்; ஊசல் - ஊஞ்சல்; ஓதிமம் - அன்னம்.

1. கருணாலைய. (35)

## ஞானியர்

36. *'ஓதியு ணர்ந்தமெய்ஞ் ஞானிய ருள்ளத் துதித்தபரஞ்*
*சோதியை யானந்தச் சுந்தர வல்லியைத் தொல்லைமறைக்*
*காதியை யாவர்க்கு மெட்டாத புக்கொளி யண்ணல்வலப்*
*பாதியை யென்சிறு புன்னாவில் லென்சொல்லிப் பாடுவதே.'*

தேவியே! திருமறைகள் முதலா யாவற்றையும் கற்று உணர்ந்த ஞானி யாவர் எம்பெருமான். அப்பெருமானின் திருஉள்ளத்தின் பயனாய் இத்திருத்தலத்திலே வந்து தோன்றி ஒளியோடு விளங்குபவள் நீ. மகிழ்ச்சியும் அழகும் நிறைந்த சுந்தரவல்லியே! பழைய மறைகளுக்கு எல்லாம் ஆதியாக விளங்குபவளே! யாவராலும் அடைய முடியாத திருபுக்கொளி அண்ணலின் வலது பாகத்தைப் பெற்று விளங்குபவளே!. உன்னுடைய பெருமைகளை எல்லாம் பாடுவது என்று சொன்னால் என்னுடைய இந்தச் சிறிய நாவினாலே பாட இயலாத ஒன்றாகும்.

சுந்தரவல்லி - அழகிய வல்லிக்கொடி போன்றவள்; தொல்லை - பழமை; ஆதி - தோற்றம்; வலப்பாதி - வலது பாகம் பெற்றவள் ஆகிய அன்னை. (36)

## சன்மார்க்கம்

37. *'பாடுஞ் செந்தமிழ்ப் பாமாலை யென்றுமுன் பாதத்துக்கே*
*சூடும் படிக்கருள் தோற்றிவைப் பாய்புல்லர் சூழலிற்போய்*
*நாடு [1]மகிழ்ச்சியை நானிங் குறாமலுன் னாண்மலர்த்தாள்*
*கூடு மளவுஞ்சன் மார்க்கத்தில் வைத்தருள் கூட்டுவையே.'*

திருபுக்கொளி தேவியே! அற்பர்களுடைய கூட்டுறவினாலே அவர்களோடு கூடிச் சுற்றி திரிந்து உன்னை அடைவது ஆகிய அடைதற்கரிய உயர்ந்த மகிழ்ச்சியைப் பெறுமாறு எனக்கு அருள்புரிதல் வேண்டும். உன்னுடைய மலர் போன்ற திருவடிகளில் இரண்டறக் கலக்கும் நிலையை

உண்டாக்கி நன்னெறியிலே செல்லுமாறு அருள் கூட்ட வேண்டும். அவ்வருளைப் பெறுவதற்கு அடிப்படையாகச் செந்தமிழ்ப் பாடல்களால் உன்னைப் போற்றிப் புகழ்ந்து அணிவிக்கின்ற பெரும்பேற்றினை எனக்கு அளித்து உதவுவாயாக.

புல்லர் - அற்பர்கள்; சூழல் - சூழ்ந்துள்ள இடம்; உறுதல் - அடைதல்; நாண் மலர்த்தாள் - நாள் + மலர்+தாள் - புதிய மலர் போன்ற திருவடிகள்; கூடுதல் - அடைதல்; அளவு - வரை.

1. மகிட்ச்சியை. (37)

## செந்துகிர்வாய்

*38. 'வையேறுஞ் செந்துகிர் வாய்ப்பசுங் கிள்ளை வனசமலர்க்*
*கையேறு வையத்த கருணாம் பிகையைக் கருதுகிலீர்*
*பொய்யேறு மிப்புன் குரம்பையைப் போற்றிப் புதுக்கிமெத்த*
*மெய்யே யென்றுன்னி யிருந்தீர் பின்னந்தகன் வேதனைக்கே.'*

உலக மக்களே நீங்கள் இந்நிலவுலகைப் படைத்துக் காத்து வருபவளும், சிவந்த பவளம் போன்ற வாயினை உடையவளும், பசுமையான கிளியைப் போன்றவளும், தாமரை மலரை ஒத்த அழகுடன் விளங்குபவளுமாகிய கருணாம்பிகையை எக்காலமும் உள்ளத்திலே நினைத்துத் துதிப்பீர்களாக. அவ்வாறு அவளைத் துதிக்காமல் பொய்ம்மையும், நிலையாமையும் உடைய இந்த உடலையே நிலையானது என்று நம்புகின்றீர்கள். அந்த நம்பிக்கையால் இவ்வுடலைப் பெரிதும் பாதுகாத்துப் புதுமை புதுமையாக அழகு செய்து புறத்தே தூய்மை செய்து இவ்வுடலே நிலையானது என்று நினைத்து வாழ்கின்றீர்கள். இந்த நிலை பின்னாலே வர இருக்கும் யமனுடைய வேதனைக்குட்பட்டு அழிகின்ற நிலையேயாகும்.

செந்துகிர் - செம்மை + துகிர்; துகிர் - பவளம்; கிள்ளை - கிளி; வனசமலர் - தாமரைப்பூ; கருதுகிலீர் - நினைக்காதவர்களே; முன்னிலை பன்மைப் பெயர்; குரம்பை - உடல்; புதுக்குதல் - அழகுபடுத்துதல்; உன்னுதல் - நினைத்தல்; அந்தகன் - எமன். (38)

## பசுங்கொடி

*39. 'வேதாந்த சார நறுந்தே னொழுக விரிந்தகஞ்சப்*
*போதார்ந்த பச்சைப் பசுங்கொடி யேகும்ப முரகத்தை*
*ஏதாந்தரு நின்றிரு மூன்றை யுங்கடந் தேறினர்க்கு*
*நாதாந்த யோகந் தருங்கரு ணாலய நாயகியே.'*

கருணாம்பிகையே! அரிய வேதங்களின் உட்பொருள்களை எல்லாம் உள்ளடக்கி மணமிக்க புதிய தேனைச் சொரிகின்ற தாமரை மலர்கள் நிறைந்து இருக்கின்ற பசுமையான கொடியை நிகர்த்த அம்மையே! சிவதைக் கொடியாகிய மல்லிகைக் கொடியினை நிகர்த்தவளே! குற்றங்களையெல்லாம் கடந்து நிற்கும் உயர்ந்தவளே! காமம், வெகுளி, மயக்கம் என்னும் குற்றங்களையும் அவற்றாலாம் தீச்செயல்களையும் விட்டு ஒழித்துச் சிறந்த ஞானத்தைப் பெற்று உயர்ந்தவர்களுக்கு நாதாந்த யோகமாகிய ஞான நெறியினை அளிக்க வல்லவள் நீயே ஆவாய்.

நறுந்தேன் - மணமிக்க தேன்; கஞ்சப்போது - தாமரை மலர்; கும்பம் - சிவதைக்கொடி; உரகம் - பாம்பு மல்லி; மூன்று - காமம், வெகுளி, மயக்கம் என்பன; நாதாந்தம் - ஞானநெறி. (39)

## விண்ணாடர்

*40. 'நாயிற் கடைப்படு வேனைவிண் ணாடர் நயந்துதொழுங்*
*கோயிற் புறத்திருந் தொண்டர்கு ழாத்தொடுங் கூட்டிப்பெற்ற*
*தாயிற் சிறந்தத யாவைவைத் தாட்கொண்ட துண்மையொரு*
*வாயிற் புகலுதற் கெளிதோ கருணை மகிமையையே.'*

கருணாம்பிகை தேவியே! விண்ணாட்டவர்களாகிய தேவர்கள் எல்லாம் வந்து வணங்குகின்ற உனது திருக்கோவிலின் புறத்தே சூழ்ந்திருக்கின்ற உன்னுடைய அடியவர்களாகிய திருத்தொண்டர் குழாத்திலே ஒருவனாக நாயினும் இழிந்த நிலையை உடையவனாகிய அடியேனையும் சேர்த்துக்கொண்டது உன்னுடைய அருளேயாகும். இந்த அருள்நிலை பெற்ற தாயினும் மிக உயர்ந்த அன்பு உள்ளத்தையே எடுத்துக்காட்டுவதாகும். இவ்வாறு அன்பு வைத்து என்னை ஆட்கொண்ட உனது அரிய செயலையும் உன்னுடைய பெருமையையும் எளியேனுடைய வாயால் எடுத்துச் சொல்லுவது மிகவும் அரிய செயலாகும்.

விண்ணாடர் - விண்ணாட்டவர்களாகிய தேவர்கள்; நயந்து - விரும்பி; தயா - தயை, கருணை. (40)

## இந்திர நீலம்

*41. 'மையைக் கயல்விழி கூட்டிய மாதர் மயக்கவெறும்*
*பொய்யைச் சிறிதும் பொருந்தாமற் புந்தியைப் போதவன்பின்*
*நெய்யையிற் கருத்தில் விளக்கேற்றிக் கொண்டிந்திர நீலமிளிர்*
*மெய்யைக் குறித்திருப் பார்பெறு வார்பர வீட்டின்பமே.'*

மீன் போன்ற தங்கள் விழிகளிலே அழகிய கருணை நிறைந்த மையினை அணிந்து தங்களை அழகுபடுத்திக் கொண்டு ஆடவரை மயக்கும் மகளிருடைய செயலை உண்மை என்று நம்பி அதில் மயங்காமல் அதனை வெறும் பொய் என்று ஒதுக்கித் தள்ளி வாழ்வாரே உயர்ந்த வாழ்க்கையை உடையவர்கள். அவ்வாறு உயர்ந்த அவர்கள் தங்களுடைய பேர் அறிவாகிய ஞானம் என்னும் அன்பையே நெய்யாக ஊற்றி உள்ளமாகிய அகலிலே உள்ளக்கருத்தாகிய விளக்கினை ஏற்றி ஒளிவிடச் செய்தவர்களாக. அவ்விளக்கு ஒளியின் துணையால் நவரத்தினங்களிலே ஒன்றாகிய இந்திர நீலத்தினை ஒத்த இந்த உடலைக் குறித்து உன்னிடத்திலே அன்பு கொண்டு இருப்பவர்கள் பேரின்ப வீட்டினைப் பெறுவது உறுதி.

மை - கருமை, கண்மை; கயல்விழி - கயல் போன்ற கண்கள், கயல் - மீன்; புந்தி - அறிவு; இந்திர நீலம் - நீலமணி, அது நவரத்தினங்களில் ஒன்று; மெய் - உடல்; பரவீடு - மேலுலகம். (41)

## சிலம்பு

*42. 'வீட்டிற் பொறிகா ணாதியைக் காம வெகுளிமுதல்*
*வாட்டிப் பிறவஞ்ச மயக்கங்க ணீக்கி மனத்தையொன்றாய்க்*

*கூட்டி யசைவற் றிருந்தே கருணையங் கொம்பையுள*
*நாட்டிக் குறிப்பவர்க் கரஞ்சிலம் பாலிக்கும் நாதங்களே.'*

ஏ நெஞ்சமே! நீ காமம், வெகுளி, மயக்கம் என்னும் குற்றங்களையெல்லாம் கொன்று அகற்றிப் பிறவாகிய வஞ்சனை போன்ற உலக மயக்கங்களை நீக்கி உள்ளத்தை ஒரே நிலையில் நிறுத்தி பேரின்பமாகிய வீட்டு இன்பத்தையே குறிக்கோளாகக் கொண்டு அதிலே உள்ளத்தைச் செலுத்தி அசைவு அற்ற நிலையாகிய யோக நிலையில் இருந்து கருணையே வடிவாகிய எம பிராட்டியை உள்ளத்திலே நிலை நிறுத்தி இருப்பவர்களுக்கு அவர்களுடைய கைகள் ஆனவை உயர்ந்த சிலம்பு ஒலியின் ஓசையை இனிமையாக ஒலித்து நிற்கும்.

வாட்டி-துன்பப்படுத்தி, விட்டொழித்து; கரம்-கை; சிலம் பொலிக்கும்-சிலம்பு ஒலியை ஒலிக்கும். (42)

## வெளி

43. *'நாதங் கடந்த வெளிக்கொளி யாங்கரு ணாம்பிகைபூம்*
*பாதங் கடன்பு ரியார்கள் சற்றும் பரிவிலார்*
*போதங்க ணீர்வரைப் பொங்குமிக் கோர்சொல் லுரையிகழ்வார்*
*போதங்க ளில்லவ [1]ராய்த்திரி வார்கொடும் புல்லரன்றே.'*

நாதமாகிய போரொலியினைக் கடந்து நிற்பவளும் பரந்த இந்நில வுலகத்திற்கு ஒளி தந்து நிற்பவளுமாகிய அக்கருணாம்பிகையின் மலர் போன்ற திருவடிகளை உள்ளத்திலே நிறுத்தி அவற்றில் அன்பு செலுத்தித் தொண்டு செய்யாதவர்கள் சிறிதும் அன்பு இல்லாதவர்கள் ஆகி உள்ளப் பக்குவம் அடையாதவர்கள் ஆவார்கள். நீரை எல்லையாக உடைய இந்நிலவுலகம் எங்கும் நிறைந்து இருக்கின்ற சான்றோர் உள்ளப் பக்குவம் அடையாத அவர்களை இகழ்ந்து உரைப்பர். அவ்வாறு சான்றோரால் இகழப்பட்டு ஞானம் சிறிதும் இல்லாதவராய் இந்நிலவுலகத்திலே வெற்று உடலோடு திரிபவர்கள் கொடிய அற்பர்களாகவே கருதப்படுவார்கள்.

நாதம்-பேரொலி; வெளி-பரந்த இடம்; பூம்பாதம்-மலர் போன்ற திருவடிகள்; பரிவிலார் -அன்பு இல்லாதவர்; போதம் - ஞானம்; கொடும் புல்லர்-கொடிய அற்பர்.

1. களில்லவறாய். (43)

## புல்லிலை நீர்

44. *'புல்லிலை நீரும[1] புனல்மேற் குமிழியும் புட்கரத்தின்*
*வில்லிடு வில்லு மெனத்தோன்றி வீழுமிம் மெய்யைநிலை*
*சொல்லிடும் பேதைத் துணிவை யொழித்துச் சுகநெறியிற்*
*செல்லிடும் புந்தி தருங்கரு ணாம்பிகை சேவடியே.'*

நெஞ்சமே! இந்த உடலானது சிறிய புல்லின்மேல் நிற்கின்ற நீர்த்துளியை ஒத்தது; நீரின் மேல் தோன்றுகின்ற நீர்க்குமிழியை நிகர்த்தது; அம்புகளைச் செலுத்துகின்ற வில்லினை ஒத்தது. அதாவது புல்லின் மேல்நீர்த்துளி, நீர்க்குமிழி, அம்பு ஆகியவை தோன்றி உடனே மறையக் கூடியவை. அத்தன்மையதே இந்த உடலும். அவ்வாறு தோன்றி அழியும் இந்த உடலினை

நிலையானது என்று சொல்லித் திரியும் அற்பர்களின் துணிவை அறுத்து பேரின்பமாகிய சுகநெறியை அடைதற்கான உயர்ந்த ஞானத்தைத் தருவன இக்கருணாம்பிகையின் திருவடிகளேயாகும்.

குமிழி-நீர்க்குமிழி; புட்கரம்-அம்பு; மெய்-உடல்; பேதை-அற்பர்கள்; சுகநெறி-பேரின்ப நெறி; புந்தி அறிவு; சேவடி-திருவடி.

1. நீறும். (44)

## சேவடி

*45. 'சேவடி யெந்தன் சிரத்திலும் நான்சொலுஞ்செந்தமிழின்*
*பாவடி தோறும் பதித்துவைத் தாயென்ன பாக்கியமோ*
*மாவடி யேந்தும் பலிபால் நடந்தொரு வாமனமாய்*
*மூவடி வாங்கும் நெடியோன்பின் வந்தருள் மொய்குழலே.*

குறுகிய வடிவமான வாமன வடிவமாய்த் தோன்றி நெடிய கால்களையுடைய மாபலிச் சக்கரவர்த்தியை அடைந்து தனது திருவடிகளாலே மூன்று அடி இடத்தினை அளந்து வாங்கிய நெடியோன் ஆகிய திருமாலின் இளையவளாய்த் தோன்றிய கருணாம்பிகையே! அடர்ந்த கூந்தலை யுடையவளாகிய அம்மையே! உன்னுடைய அருள் நிறைந்த திருவடிகளை அடியேனுடைய தலையில் பதித்தாய். அதுவும் அன்றி அடியேன் பாடுகின்ற செந்தமிழ்ப் பாக்களின் ஒவ்வொரு அடிகள்தோறும் உனது திருவடியினை பதித்து வைத்து இருக்கின்றாய். இது நான் பெற்ற பெரும் பேறேயாகும்.

சிரம்-தலை; பாவடி-பாக்களின் அடி; பாக்கியம்-பெரும்பேறு; பலி-மாபலிச் சக்கரவர்த்தி; வாமனம்-வாமன வடிவம்; மூவடி-மூன்று அடி; நெடியோன்-திருமால்; பின்வந்தருள்பவள்-திருமாலின் இளையவளாய்த் தோன்றிய தேவி; மொய்குழல்-அடர்ந்த கூந்தலையுடைய தேவி. (45)

## தடுத்தவள்

*46. 'குழலிசை யால்நிரை காத்தவ னுந்திருக் கோநாக*
*நிழலிசை வானுங் குறிக்குங் கருணைநிமலி செம்பொற்*
*கழலிசை யாவென கருத்தைத் திருத்திக் கடுநரகத்*
*தழலிசை யாமற் றடுத்தாள் கடைக்கண் டயவுவைத்தே.'*

தன்னுடைய புல்லாங்குழலின் ஓசையினாலே ஆநிரைகளைக் கவர்ந்து காத்து அருளினவன் திருமால். ஆதிசேடன் என்றும் பாம்பினது பரந்த நிழலின் கீழ் வீற்றிருந்த பெருமைக்குரியவனும் அத்திருமாலே ஆவான். அத்திருமாலின் தங்கையாகத் தோன்றிக் கருணை உள்ளம் நிறைந்து தூயவளாக விளங்குகின்ற கருணாம்பிகையானவள் தனது அழகிய பொன்னால் ஆகிய கழல்களை அணிந்த திருவடிகளிலே சிறிதும் பொருந்தாத அடியேனுடைய உள்ளத்தைத் திருத்திக் கொடிய நரகத்தின் கொடுமையிலே சென்று உழலாதவாறு தடுத்து ஆட்கொண்டாள். இத்திறம் அவள் என்மீது கடைக்கண் வைத்துத் தயவு காட்டியதின் தன்மையால் நிகழ்ந்ததேயாகும்.

குழல்-புல்லாங்குழல்; நிரைகாத்தவன்-திருமால்; கோநாகம்-ஆதிசேடன் என்னும் பாம்பு; நிமலி-தூயவளாக விளங்குகின்ற பார்வதி தேவி; செம்பொற்கழல்-பொன்னால் ஆகிய அழகிய காலணிகளை அணிந்த திருவடிகள் கடுநரகம்-கொடிய நரகம்; தழல்-தீ, வெப்பம். (46)

### சாதனை

47. *'வைத்தது மிங்கெனை[1]வல்வினை கோவேன் மனத்திருந்தும்*
*பொய்த்தது வென்னப் புதுமைய தோநினைப் போரைமுன்னீர்*
*உய்த்ததுஞ் சாதனை[2]யோவறி யேன்சொலு முன்செவிக்குத்*
*தைத்து மில்லைகொல் லோகரு ணாலயத் தற்பரையே.'*

திருக்கருணாலயம் எனத்தகும் அவிநாசித் திருத்தலத்தில் எழுந்தருளி உள்ள சிவசக்தியே! அடியேனாகிய என்னை இந்நிலவுலகிலே தோற்றுவித்தது எனது புழவினைக் காரணமோ? உனது திருவடிகள் எனது உள்ளத்திலே என்றும் நீங்காமல் இருந்தும் அதனைப் பொய்யாக்கி இப்பிறவியை எடுக்கச் செய்தது புதுமையாக இருக்கின்றது. எப்பொழுதும் உன்னையே நினைந்து துதிப்போரைப் பிறவியாகிய பெருங்கடலிலே மூழ்கச் செய்வதும் உன்னுடைய சாதனையோ? அறிவற்றவனாகிய அடியேன் சொல்லுகின்ற இக்கருத்துகள் எல்லாம் உன்னுடைய திருச்செவியிலே நுழைந்து தைக்கவும் இல்லையோ? எனக்குக் கூறுவாயாக.

வல்வினை-பழவினை; பொய்த்தது-பொய்யாக்கியது; முன்னீர்-பெருங்கடல்; உய்த்தது-மூழ்கச் செய்வது; தற்பரம்-கடவுள்.

1. வல்லினை 2. வரியேன் (47)

### கற்பனை

48. *'தற்பரை யுன்னிரு தாட்டா மரைக்குச் சரண்புகுந்துஞ்*
*சொற்பரைப் போயிதஞ் சொல்லவைத் தாலென்ன சொல்வன்முகாச்*
*சிறப்பை யேநற் சிவையே யிதுவுன் திருச்செயலின்*
*கற்பனை யென்றிருந் தேன்றமி யேன்கரு ணாலயமே.'*

சிவசக்தியாகிய தேவியே! அடியேன் உன்னுடைய திருவடிகளாகிய தாமரைகளில் அடைக்கலம் புகுந்தேன். அவ்வாறு இருந்தும் சொல் இழுக்கு உடைய சிறியோரை அணுகி அவர்கள் மூலம் உள்ளத்திற்கு இனிமை தரும் செய்திகளைச் சொல்ல வைத்தாய். உன்னுடைய இச்செயலைக் குறித்து அடியேன் என்ன சொல்லுவேன். சிவசக்தியே! இதுவும் உன்னுடைய திருவிளையாடலின் ஒரு கற்பனைச் செயலே என்று எண்ணியே அடியேன் வாளாவிருந்துவிட்டேன்.

தாட்டாமரை-திருவடிகளாகிய தாமரை; சொற்பரை-சிறியோரை; இதம்-இனிய செய்தி; நற்சிவை-பார்வதி. (48)

### காகம்

49. *'மேகத்தை வென்ற குழலணங் கேபண்டு விண்பறந்த*
*காகத்தின் வைத்த கருணையி லோர்புன் கடுகிலொரு*
*பாகத்தை யென்கண் வைத்தாற்குறை யோபசும் பான்மைமிகும்*
*பூகத்தை வெல் கந்தரக் கருணா லயப்பூங்கிளியே.'*

மேகத்தினும் கருநிறக் கூந்தலையுடைய திருக்கருணாம்பிகை தேவியே! பசுமை மிகுந்த கமுகினை ஒத்த கழுத்தினையுடைய பசுங்கிளி போன்ற அன்னையே! முன்னொரு காலத்தில் ஆகாயத்திலே பறந்து சென்ற காகத்தின்மீது நீ வைத்த கருணையினாலே அக்காகமானது வாயில் கவ்விச்

சென்ற பிதிர்கருமப்பலியில் பெற்று வந்த உணவிலே ஒரு சிறு பகுதி சிவவேடம் தாங்கிய ஓர் அந்தகனது பாத்திரத்திலே விழுந்தது. அச்செயலின் புண்ணியத்தால் அக்காகமானது பெரும்பேற்றினை அடைந்தது. அம்பிகையே அக்காகத்தின்மீது கொண்ட கருணையில் ஒரு கடுகு அளவேனும் என்மீது காட்டுவாயேயானால் அதுவே நான் பெற்ற பெரும் பேறு ஆகும்.

குழலணங்கு-கரிய கூந்தலை உடைய பார்வதி தேவியே; கடுகு அளவு-சிறிய அளவு; பான்மை-தன்மை; பூகம்-கமுகு. (49)

## பெருவெளி

*50. 'கிளியா யிருக்குமெய் யன்பருட் கூடிற் கிளர்ந்தசுட*
*ரொளியா யிருக்கு முனிவர்க்கு யோகியர்க் கோங்குபெரு*
*வெளியா யிருக்கு மனமிறந் தோர்க்குமெய்ஞ் ஞானப்பெருந்*
*தெளியா யிருக்குங் கருணைப் பிராட்டி திருச்செயலே.'*

கிளிகேஸ்வரம் என்னும் சிவத்தலத்தில் நிறைந்திருக்கின்ற இறைவனுடைய மெய்யன்பர்களோடு கூடி அதன் காரணமாகச் சிறந்து விளங்கும் முனிவர்களுக்கும் யோக நிலையிலே வீற்றிருக்கின்ற பல யோகியர்களுக்கும் மிகப்பரந்த நடுவெளியாக விளங்குகின்ற எல்லாம் கடந்த ஞானிகளும் மெய்ஞ்ஞானத்தை ஊட்டுகின்ற உண்மை ஒளியாய் இருப்பவள் எம்பிராட்டியாகிய கருணை நாயகியே ஆவாள். அவளுடைய திருவருளாலே இவ்வுயர்ந்த செயல்கள் என்றும் நிலைபெற்று நிற்கின்றன.

கிளி-கிளிகேஸ்வரம் எனும் சிவத்தலம்; சுடர் -ஒளி; யோகியர்-நிஷ்டை செய்வோர்; மெய்ஞ்ஞானம்-உண்மை அறிவு. (50)

## மருந்து

*51. 'செயலொன்றும் நானறி யேன்அறி யாமையிற் சிக்கியிங்கு*
*மயலொன்றி நின்று வருந்துகின் றேனிம வான்பயின்ற*
*கயலொன் றியகட் கரும்பே கவலை கடக்கமருந்*
*தயலொன் றிலாம லடைந்தே னுனைக்கை யடையெனவே.'*

பர்வதராசனாகிய இமவான் பெற்று எடுத்த உமாதேவியே! கயலினை ஒத்த கண்களையுடைய் கரும்பு போன்றவளே! அடியேன் அறியாமையாகிய இருளிலே சிக்கி இவ்வுலக மாய்கையிலே மயங்கி உயர்ந்த செயல் ஒன்றும் செய்ய இயலாது வருந்துகின்றோம். இக்கவலையில் இருந்து நீங்கி கரையேற உன்னுடைய அருள் அல்லாது வேறு மருந்து ஒன்றையும் அறியேன். எனவே, என்னுடைய அறியாமையை போக்கி கவலையை மாற்றும் மருந்தாக உன்னையே அடைக்கலமாக வந்தடைந்தேன். அருள் புரிவாயாக.

மயல்-மாயை; இமவான்-பர்வதராசன்; கயல்-மீன். (51)

## வாவி

*52. 'அடையும் பிறவி யலைகடல் சூழலி லாழ்ந்தலுத்துச்*
*சடையுமென் னாருயிர் மேற்கடைக் கண்ணருள் சற்றுவைப்பாய்*
*மடையுஞ் சிவகங்கை வாவியுந் தண்டமிழ் வாணர்தினங்*
*குடையுந்தென் காசிக் கருணா லையமடக் கொற்றவையே.'*

சிவகங்கைத் தீர்த்தம் என்னும் பெரிய தீர்த்தத்தை உடையது தென்காசிப் பதியாகிய அவிநாசித் திருத்தலம். சிறந்த மடை நீர் பாயும் நீர்வளம் பெற்றது. செந்தமிழ்ப்புலவர்கள் நாள்தோறும் புகழ்ந்து பாடும் பெருமைக்குரியது. அத்தகைய திருத்தலத்திலே வீற்றிருக்கின்ற கொற்றவையே! பிறவியாகிய இப்பெருங்கடலிலே மூழ்கித் துன்பத்தில் ஆழ்ந்து அதனால் உள்ளம் அலுத்து வருத்தம் அடைந்து இருக்கின்றேன். இவ்வாறு வருந்தும் என்னுடைய உயிர்மீது உன்னுடைய கடைக்கண் பார்வையைச் செலுத்தி என்னை வாழ வைப்பாயாக.

மடை-நீர்மடை; சிவகங்கை வாவி-சிவகங்கைத் தீர்த்தம்; தண்டமிழ்வாணர்-செந்தமிழ்ப் புலவர்கள்; குடைதல்-நீராடுதல்; கொற்றவை-துர்க்கை. (52)

## மயிடாசுரன்

*53. 'கொற்றவை யேயென்றுங் கோமளை யேயென்றுங் குஞ்சரத்தைப்*
*பெற்றவ ளேயென்றும் பெண்ணணங் கேயென்றும் பேதையுயிர்க்*
*குற்றவ ளேயென்று மாமயி டாசுர னூழிவனச்*
*செற்றவ ளேயென்றும் வாழ்த்துமெந்நாளுமென் சித்தமுமே.'*

கருணாம்பிகையே! உன்னை உலகத்தை வெல்லும் கொற்றவையே என்று என் உள்ளமானது வாழ்த்துகின்றது; உலகத்தைக் காக்கும் அருள் உடைய உன்னை அழகின் தெய்வமே என்று போற்றுகின்றது; உலகத் துன்பத்தையெல்லாம் போக்கவல்ல யானைமுகத் தலைவனாகிய விநாயகனைப் பெற்று எடுத்த தாயே என்று துதிக்கிறது; மகளிர்களுக்கு எல்லாம் வழிகாட்டியாக விளங்கும் தெய்வமே என்று போற்றுகிறது; அறியாமை நிறைந்த அடியேனுடைய உயிருக்கு உற்ற துணையாக இருப்பவளே என்று வாழ்த்துகின்றது; மகிடாசுரன் என்னும் அரக்கனை வலி அழியச் செய்து அழித்தவளே என்று வாழ்த்துகிறது. இவையே என்னுடைய உள்ளத்தின் நிலையாகும்.

குஞ்சரத்தைப் பெற்றவள்-விநாயகப் பெருமானைப் பெற்றவள்; பெண்ணணங்கு-மகளிர்களுக்கு எல்லாம் வழிகாட்டியாக விளங்கும் தெய்வம்; மாமயிடாசுரன்-மகிடாசுரன் என்னும் அரக்கன்; செற்றவள்-அழித்தவள்.(53)

## முத்தர்

*54. 'சித்தரு மாதவச் செல்வரும் நான்மறை தேர்பரம*
*முத்தரும் போத முனிவருஞ் செங்கை முகிழ்த்துமுடி*
*நித்தலுந் தாளும் நிமலிநின் பாதத்தில் நேசம்வைக்கு*
*மத்தரு நீயுமல் லால்எனக் காருயிர்க் காதரவே.'*

தூய உள்ளத்தை உடையவளாகிய கருணாம்பிகையே! சித்துத் தொழிலிலே வல்லவர்களாகிய உன் அடியவர்களும் உயர்ந்த தவமாகிய செல்வத்தைப் பெற்ற தவசிகளும்; நான்மறைகளைக் கற்று உணர்ந்து தேர்ந்த முத்தி பெறும் பெருமை வாய்ந்த உயர்நதவர்களும்; ஞானத்தில் முதிர்ந்த முனிவர்களும்; தங்களுடைய அழகிய சிவந்த கைகளைத் தலையின் மேல் குவித்து வணங்கும் பக்தர்களும்; நாள்தோறும் உன்னுடைய திருவடியிலே அன்பு வைத்துத் துதித்து வரும் சான்றோர்களும்; அவர்களுக்கெல்லாம்

அத்தகைய திருத்தலத்திலே வீற்றிருக்கின்ற கொற்றவையே! பிறவியாகிய இப்பெருங்கடலிலே மூழ்கித் துன்பத்தில் ஆழ்ந்து அதனால் உள்ளம் அலுத்து வருத்தம் அடைந்து இருக்கின்றேன். இவ்வாறு வருந்தும் என்னுடைய உயிர்மீது உன்னுடைய கடைக்கண் பார்வையைச் செலுத்தி என்னை வாழ வைப்பாயாக.

மடை-நீர்மடை; சிவகங்கை வாவி-சிவகங்கைத் தீர்த்தம்; தண்டமிழ்வாணர்-செந்தமிழ்ப் புலவர்கள்; குடைதல்-நீராடுதல்; கொற்றவை-துர்க்கை. (52)

## மயிடாசுரன்

*53. 'கொற்றவை யேயென்றுங் கோமளை யேயென்றுங் குஞ்சரத்தைப்*
*பெற்றவ ளேயென்றும் பெண்ணணங் கேயென்றும் பேதையுயிர்க்*
*குற்றவ ளேயென்று மாமயி டாசுர னூழிவனச்*
*செற்றவ ளேயென்றும் வாழ்த்துமெந்நாளுமென் சித்தமுமே.'*

கருணாம்பிகையே! உன்னை உலகத்தை வெல்லும் கொற்றவையே என்று என் உள்ளமானது வாழ்த்துகின்றது; உலகத்தைக் காக்கும் அருள் உடைய உன்னை அழகின் தெய்வமே என்று போற்றுகின்றது; உலகத் துன்பத்தையெல்லாம் போக்கவல்ல யானைமுகத் தலைவனாகிய விநாயகனைப் பெற்று எடுத்த தாயே என்று துதிக்கிறது; மகளிர்களுக்கு எல்லாம் வழிகாட்டியாக விளங்கும் தெய்வமே என்று போற்றுகிறது; அறியாமை நிறைந்த அடியேனுடைய உயிருக்கு உற்ற துணையாக இருப்பவளே என்று வாழ்த்துகின்றது; மகிடாசுரன் என்னும் அரக்கனை வலி அழியச் செய்து அழித்தவளே என்று வாழ்த்துகிறது. இவையே என்னுடைய உள்ளத்தின் நிலையாகும்.

குஞ்சரத்தைப் பெற்றவள்-விநாயகப் பெருமானைப் பெற்றவள்; பெண்ணணங்கு-மகளிர்களுக்கு எல்லாம் வழிகாட்டியாக விளங்கும் தெய்வம்; மாமயிடாசுரன்-மகிடாசுரன் என்னும் அரக்கன்; செற்றவள்-அழித்தவள். (53)

## முத்தர்

*54. 'சித்தரு மாதவச் செல்வரும் நான்மறை தேர்பரம*
*முத்தரும் போத முனிவருஞ் செங்கை முகிழ்த்துமுடி*
*நித்தலுந் தாளும் நிமலிநின் பாதத்தில் நேசம்வைக்கு*
*மத்தரு நீயுமல் லால்எனக் காருயிர்க் காதரவே.'*

தூய உள்ளத்தை உடையவளாகிய கருணாம்பிகையே! சித்துத் தொழிலிலே வல்லவர்களாகிய உன் அடியவர்களும் உயர்ந்த தவமாகிய செல்வத்தைப் பெற்ற தவசிகளும்; நான்மறைகளைக் கற்று உணர்ந்து தேர்ந்த முத்தி பெறும் பெருமை வாய்ந்த உயர்நதவர்களும்; ஞானத்தில் முதிர்ந்த முனிவர்களும்; தங்களுடைய அழகிய சிவந்த கைகளைத் தலையின் மேல் குவித்து வணங்கும் பக்தர்களும்; நாள்தோறும் உன்னுடைய திருவடியிலே அன்பு வைத்துத் துதித்து வரும் சான்றோர்களும்; அவர்களுக்கெல்லாம்

தலைவியாகவும், என்னுடைய தாயாகவும் விளங்கும் நீயும் அல்லாது என்னுடைய உயிருக்கு ஆதரவு வேறு இல்லை.

சித்தர்-சித்துத் தொழிலில் வல்லவர்; மாதவர்- முனிவர்; முத்தர்-முதிர்ந்த முனிவர்கள்; முகிழ்த்து-குவித்து; செங்கை-சிவந்த கை; அத்தர்-தலைவர்.

(54)

## நெஞ்சமே!

*55. 'தரவா வரமுந் தவமுமென் றேதினந் தாழ்ந்துருகிக்*
*கரவாத வாறுள நீபெற்றி டாமத களிந்தவரைப்*
*புரவாமல் நாளையெல் லாங்களித் தாய்கொடும் புன்பிறப்பில்*
*வரவா வுனக்குக் குறிப்பிளம் பேதை மடநெஞ்சமே.'*

இளமையும் அறியாமையும் நிறைந்த மடநெஞ்சமே! நீ நாள்தோறும் கருணாம்பிகை தேவியை நினைந்து உள்ளம் உருகிப் பணிந்து தவம் இயற்றுவாயேயானால் நீ விரும்பியவாறு அவளிடத்திலிருந்து உயர்ந்த வரத்தினைப் பெறுவாய். தவறாது தவம் இயற்றி உள்ளம் களித்து அத்தேவியைப் போற்றிப் புகழ்ந்து அவளது அருளைப் பெற்று இருக்க வேண்டும். இப்பிறவியோ மிகவும் அற்பமும் கொடுமையும் வாய்ந்தது. குறைந்த வாழ்க்கையை உடையது என்பதை அறியாமல் நாளையெல்லாம் வீண்நாளாகவே கழித்து ஒழித்துவிட்டாய். இப்பிறவி அன்றி நீ பேறு பெறுவது வேறு பிறவி இல்லையயாகும்.

கரவாது-மறைக்காது; புரவாமல் -பாதுகாவாமல். (55)

## ஆண்மை

*56. 'நெஞ்சக் கரவும்பொல் லாண்மையும் பாவ நெறிக்கனுகும்*
*அஞ்சிக் [1]கொளாவடங் காண்மையும் புக்கொளி யம்மையுன்றாள்*
*தஞ்சித் திடர்த்தருக் காண்மையும் நீங்கத் தயவுவையா*
*துஞ்சித் [2]தமியிருந் தால்என்று நானினி யுய்வதுவே.★*

திருபுக்கொளியம்மையே! அடியேனுடைய தீய எண்ணமாகிய ஒளிவு உடைய உள்ளத்தையும் தீய நெறியிலே செல்லும் ஆண்மையும் பாவ வழியிலே தொடர்ந்து செல்லும் பண்பையும் அத்தீ நெறிகளுக்கு அஞ்சி அவற்றை மேற்கொள்ளாமல் அடங்கி வாழும் ஆண்மைத் திறனையும் நீக்கி என்னைக் காப்பாற்றி உய்வு அடையச் செய்ய வேண்டும். அவ்வாறு என்னை அடக்கி உய்ய செய்யாது உன் அருளைப் பெறும் வழியினை விட்டொழித்துத் துன்பமாகிய வீரச்செயல்கள் என்ற பெயரால் தீச்செயல்களையே புரிந்து ஒழுகுகின்ற என்மீது தயவு வையாமல் தனித்து இருந்தால் நான் உய்வைப் பெறுவது எப்போது.

நெஞ்சக்கரவு-வஞ்சம் நிறைந்த உள்ளம்; பொல்லாண்மை-தீய நெறியிலே செல்லும் ஆண்மை; கொளா-கொள்ளாமல்; தஞ்சித்து-நீக்கி; இடர்-துன்பம்; உய்வது-உய்வைப் பெறுவது.

1. கொழா 2. தமீயிருந்தால். (56)

★57, 58ஆம் பாடல் உள்ள ஏடு இல்லை.

## பூதம்

59. 'தோற்றுஞ் சுடரு மதியிய மானனுஞ் [1]சூழ்ந்தெரியுங்
காற்றும் புனல்கனல் வானிலன் யாவுங் கலந்தவரும்
போற்றும் பெருங்கரு ணாலையச் செல்வி புகழையென்றும்
சாற்றுங் கருத்துடை யார்படை யாத தவமில்லையே.'

கருணாலயச் செல்வியாகிய உன்னைப் போற்றாதார் யாருமிலர். ஆகாயத்திலே தோன்றி உலகிற்கு ஒளியைத் தருகின்ற கதிரவனும் நிலவுமாகிய ஒளிகள் உன்னையே புகழ்கின்றன. காற்றும் புனலும் கனலும் போற்றுகின்றன. வானும் நிலனும் புகழ்கின்றன. இவை யாவுமே சேர்ந்து புகழும்படியான பெருமைக்குரிய கருணாலயச் செல்வியின் திருப்புகழை என்றுமே பாடித் துதிக்கும் உள்ளம் உடையவர்கள் எல்லாப் பேறுகளையும் பெறுவர். உயர்ந்த தவத்தின் பெருமையைக் காட்டிலும் பெரும் பெருமை பெற்று உயர்வர்.

சுடர்-ஒளி; சூரியன்; மதி-சந்திரன்; கனல்-நெருப்பு,தீ.

1. சூள்ந்தெரியும் (59)

## இல்லார்

60. 'இல்லாமை யிற்புல்லர் பாற்சென்று நிற்றலு மேழமையும்
கல்லாமை யுங்கடுந் துன்பமு நோயுங் கவலைமுதல்
எல்லாந்தென் புக்கொளி யெம்பெரு மாட்டி யெதிருருகி
நில்லா தவரையன் றோசென்மந் தோறும் நெருக்கிடுமே.'

தென்புக்கொளி என்னும் திருத்தலத்திலே வீற்றிருக்கின்ற எம்பெருமாட்டியின் திருமுன் நின்று உள்ளம் உருகிப் புகழ்ந்து பாடுவதே மக்கள் பிறப்பின் பெரும் பேறாகும். அவ்வாறு தேவியின் எதிரிலே நின்று உள்ளம் உருகிப் பாடாதவர் இல்லாமை என்னும் வறுமைத் துன்பத்திலே மூழ்கி ஈயாத உலோபிகளாகிய அற்பர்களிடத்திலே சென்று நிற்க வேண்டிய நிலையினை அடைவர். மேலும் எல்லா வகையிலும் ஏழ்மை நிலையும் கல்வியின்மையும் ஆகிய கொடிய துன்பத்திலே மூழ்கிவிடுவார்கள். வாழ்க்கையில் பெரும் துன்பமும் பிணியும் ஓயாக் கவலையும் வந்து சேரும் நிலையை அடைவார்கள்.

இல்லாமை-வறுமை; புல்லர்-அற்பர்; ஏழமை-வறுமை; கல்லாமை-கல்வியின்மை; கடுந்துன்பம்-கொடிய துன்பம்; நோய்-பிணி; சென்மம்-பிறப்பு. (60)

## உலைமெழுகு

61. 'நெருக்கும் பொறியவித் தம்மையை நெஞ்சம் நினைத்திருந்தால்
உருக்குங் கருத்தை உலைமெழு காகி யுடல்புளகங்
குருக்கும் பரவசங் கூட்டிடு மோடிக் குலாவளத்தைச்
சுருக்கும் பெருக்கும் பரப்பிரம்ம ஞானச் சுகானந்தமே.'

மனிதப் பிறவியாகிய இப்பிறவியிலே உள்ளத்தையும் உடலையும் வாட்டி நெருக்கும் துன்பத்தைத் தோற்றுவிப்பனவாகிய ஐம்பொறிகளின்

செயல்களைக் குறைத்துக்கருணாம்பிகையை உள்ளத்திலே இருத்தி எக்காலமும் துதித்து வந்தால் உலையிலே இட்டு காய்ச்சப்பட்ட மெழுகினைப்போல தீயக்கருத்துகள் எல்லாம் உருகி அழியும். அதன் பயனாய் உடல் பருத்துப் பெருமிதம் கொள்ளும் தன்மை குறையும். அதே சமயம் உள்ளத்திலே என்றுமில்லாத பேரானந்த உணர்வு தோன்றிடும். மகிழ்ச்சிக்குரியனவாகிய உலக வளங்களை எல்லாம் குறைக்கும். பரப்பிரம்ம ஞானமாகிய பேரறிவினையும் சுகானந்தமாகிய பெரும் பேற்றினையும் அளிக்கும்.

பொறி - ஐம்பொறி; உருக்குதல் - உருகச்செய்தல்; உலைமெழுகு - உலையிலே இடப்பட்ட மெழுகு; புளகம் -மயிர் கூச்செறிதல்; குருக்கும் தோன்றும்; பரவசம் - மகிழ்ச்சி; சுருக்கும் - குறைக்கும்; பிரம்மஞானம் - பேரறிவு; சுகானந்தம்-பெரும்பேறு. (61)

## வாரணவாசி

*62. 'ஆனந்த வாரண வாசிப் பெருங்கரு ணாலையமே*
*நீநந்த மாமனத் தேபுகுந் தாளிதற் கீடிலையே*
*தானந் தவமும் பிறிதிலைச் சஞ்சலஞ் சார்பிறவிக்*
*கானந்த னாலும் பயமிலை யெந்தன் கருத்தினுக்கே.'*

பேரானந்தத்தைத் தருகின்ற தென்வாரணவாசியாகிய இத்திருத்தலத்தே எழுந்தருளி இருக்கின்ற கருணாலையச் செல்வியே! நீ அடியேனுடைய உள்ளத்திலே புகுந்து நிலைப்பெற்று இருப்பாயேயானால் மனிதப் பிறவியில் இந்த தன்மைக்கு ஈடு எதுவுமே இல்லையாகும். அப்பெருமையினால் உயர்ந்த தானமும் தவமும் வேறு செய்ய வேண்டியதில்லை. துன்பமே நிறைந்த இப்பிறவிக்குப் பயம் என்பது வேறு யாராலும் நிகழாது. என் கருத்து என்றும் அழியாததாய் நிலைத்து நிற்கும்.

வாரணவாசி-காசி நகரம்; சஞ்சலம்-துன்பம், மனக்கவலை. (62)

## பருத்திப்பொதி

*63. 'கருத்திற் கருணை மணிவிளக் கைமனக் கட்டறியிற்*
*பொருத்தித் திரோத விருணீக்கி யுள்ளம் புறம்பசையா*
*திருத்தித் தியானத் [1]திராப்பகல் இன்றி யிருந்தவற்கும்*
*பருத்திப் பொதிகன லிட்டது வாஞ்செய்த பாவங்களே.'*

நிலையான கருத்தை உடையவளும் கருணை உள்ளத்தை உடையவளும் உள்ளத்து இருளைப் போக்கும் மணிவிளக்காய் விளங்குபவளுமாகிய கருணாம்பிகையே உள்ளமாகிய கட்டுத்தறியிலே இறுக்கிக்கட்டிப் பொருத்தி மறை அறியாமை என்னும் இருளை விலக்கிப் புறப்பற்றுகளிலிருந்து உள்ளத்தைத் திருத்தி ஒரு நிலை நிறுத்தி இரவு பகல் என்ற வேறுபாடு இல்லாது ஞானத்திலே மூழ்கி இருப்பவர்களுக்கு அவர்கள் செய்த பாவம் அனைத்தும் பருத்திப் பொதியினைக் கனலிலே இட்டது போல உருத்தெரியாமல் அழியும்.

மணிவிளக்கு - இருளைப்போக்கும் மணிவிளக்கு; மனக் கட்டறி -உள்ளமாகிய கட்டுத்தறி; தியானம்-உள்ளத்தை ஒருநிலை நிறுத்தல். (63).

## உறுப்புகள்

64. 'பாவிக்கச் சிந்தனை தந்தாள் தனையென்றும் பாடத்தந்தாள்
நாவிற் கசிந்து நறுமலர் தூவித் தற்பதத்தைச்
சேவிக்கப் பூசிக்கச் செங்கைதந் தாள்கல்விச் செல்வந்தந்தாள்
ஆவிக் கினிய கருணைப் பிராட்டி யடினுக்கே.'

பேரின்பத்தைவத் தந்து அடியேனுடைய உயிருக்கு இனிமையை உண்டாக்குபவளாகிய கருணைப்பிராட்டியானவள் எனக்கு அவளைத் தலைவியாக ஏற்று வழிபாடு செய்யச் சிந்திக்கும் உள்ளத்தை அருளினாள். அவளுடைய பெருமைகளையெல்லாம் எனது நாவினால் புகழ்ந்து பாடும் ஆற்றலைக் கொடுத்தாள். அவளது திருவடிகளிலே மணமிக்க மலர்களைத் தூவி உள்ளம் உருகித் துதிக்கவும் அவளை அருச்சித்துப் பூசிக்கவும் அழகிய கைகளைக் கொடுத்தாள். இந்தச் செய்கைகளுக்கு எல்லாம் உறுதுணையாக எனக்கு உயர்ந்த கல்வியையும் சிறந்த செல்வத்தையும் தந்து ஆதரித்தாள்.

பாவிக்க-வழிபாடு செய்ய; கசிந்து-மனம் உருகி; தற்பதம்-தன்னுடைய திருவடிகள்; சேவிக்க-வணங்க; ஆவி-உயிர். (64)

## அறியேன்

65. 'அடியே னலநின் னெதிர்நின் றிருகண்க ளானந்தநீர்
வடியே னகஞ்சறு மாற்றரி யென்ன பரவாய்மைகடைப்
பிடியேன் கருணைப் பெருவெள்ள மேயங்கு பேதலிக்குங்
கொடியேன் றனையுமென் றோவம்மை நீயருள் கூட்டுவதே.'

பெருக்கெடுத்து ஓடும் வெள்ளத்தினை ஒத்த கருணை உள்ளம் படைத்த அம்மையே! அடியேன் உன்னுடைய எதிரிலே நின்று என்னுடைய இரு கண்களிலே ஆனந்தக் கண்ணீர் பெருகத் துதித்து அறியேன். சிங்கத்தினை ஒத்த தூய்மையற்ற வலிமை உடைய என்னுடைய மனமானது மாறி உயர்ந்த கடமைகளைக் கடைப்பிடித்து அறியேன். இந்த நிலையில் இந்நிலவுலகத்திலே பிறந்து மாறுபட்ட உள்ளத்தோடு அலைந்து திரியும் அடியேனை உன்னுடைய திருவடிகளிலே சேர்த்து எனக்கு அருள்புரிவது எந்நாளோ அறியேன்.

அரி-சிங்கம்; நீர்வடியேன்-கண்ணீர் பெருகத் துதித்து அறியேன்; பேதலிக்கும்-அலைந்து திரியும்; கடைப்பிடியேன்-கடைபிடித்து அறியாதவன்; அருள் கூட்டுவது-அருள் புரிவது. (65)

## தமிழ்ப் பாவை

66. 'கூட்ட மிட்டிய மலர்தொறுந் தேன்கொண்டு கூட்டுதல்போல்
பாட்டின் மெய்ப்பானுன்ன பொருள்களுங் கற்பனைப் [பாங்மையுமே
பூட்டி வைத்தாய் நற்றமிழ்ப் பாவையியவற்ற புல்லர்செவிக்
கூட்டி வைத்தாய் புக்கொளி யூர்க்கருணை யுமையவளே.

திருபுக்கொளி என்னும் இத்தலத்திலே அருள்மழை பொழிந்து வரும் உமையம்மையே! வண்டானது மலர்தோறும் சென்று தேனைத் திரட்டி வந்து

தன்னுடைய கூட்டிலே சேர்த்து வைப்பது போல நீ தமிழ்ப் பாடல்களின் உண்மைத் தன்மை அவற்றின் நுண்ணிய பொருள் அவற்றில் நிறைந்திருக்கும் கற்பனைத்திறன் ஆகியவற்றையெல்லாம் இணைத்து வைத்த உயர்ந்த தமிழ்ப் பாவை நீ ஆவாய். நீ சேர்த்து வைத்த அத்திறன்கள் அனைத்தையும் அற்பர்கள் செவியிலே நுழையுமாறு கூட்டுவித்தவளும் நீயே ஆவாய்.

கூட்டுதல்-சேர்த்தல்; மெய்ப்பான்-உண்மைத்தன்மை; நுண்பொருள் நுண்ணிய பொருள்; பூட்டி-இணைத்து; உமையவள்-பார்வதிதேவி. (66)

## அயன்

67. *'உமையாளை அன்பர்க் குயிரைநந் தாத வொளிவிளக்கை*
*இமையா சலமடப் பாவையை நான்கண் டிறைஞ்சவ*
*ளெமையா ளிற்கொண் டதினாற் பிறப்பூடாங் கெனைப்படைக்க*
*வமையா தினிமலர் மேல்வீற் றிருக்கு மயனுக்குமே.'*

எம்முடைய தலைவியாகிய உமையவள் அன்பர்களுக்கெல்லாம் உயிராக விளங்குபவள் என்றும் அணையாத ஒளிமிக்க விளக்கினை ஒத்து விளங்குபவள். இமய மன்னனாகிய மலையத்துவச பாண்டிய மன்னனின் மகளாகத் தோன்றியவள். இத்தகு பெருமை வாய்ந்த என் அன்னையை நான் நேரிலே கண்டு வணங்குதற்குரிய அருளைப் புரிந்து என்னை ஆட்கொண்டு அருளியவள் அவள். அதனால் உயிர்களைப் படைக்கும் தொழிலை மேற்கொண்டுள்ளவனும் தாமரை மலரிலே வீற்றிருப்பவனும் ஆகிய பிரம்மதேவன் இப்பிறவியின் இடையிலே வேறு பிறவியினை அளித்து உமாதேவியினை அடையுமாறு படைக்க நீ இயலாது.

நந்தாத-அணையாத; இமையாசல மடப்பாவை-மலையத்துவச பாண்டியனின் மகளாகிய பார்வதி தேவி; மலர்-தாமரை மலர்; அயன்-பிரம்மதேவன். (67)

## ஆடகம்

68. *'அயத்தை யிரதமிட் டாடக மாக்க வின்மையரு*
*ணயத்தை யொருதினை யத்தனை பாலித்து ஞானசிவ*
*மயத்தை யடைந்துயிர் வாழ்கச்செய் வாரண வாசிப்பிரான்*
*புயத்தை மருவு மயிலே கருணையம் பொன்கொடியே.'*

வாரணவாசி என்னும் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள எம்பெருமானின் புயங்களை மருவி மகிழும் மயில் போன்றவளே! கருணை உள்ளம் படைத்த பொற்கொடி போன்றவளே! அடியேன் இரும்பினை உருக்கிப் புடமிட்டு ஆடகச் செம்பொன்னாக மாற்ற வேண்டும் என்று விரும்பவில்லை. உன்னுடைய அருள் உள்ளமாகிய அன்பினை ஒரு சிறு தினை அளவு அருள்பாலித்து உயர்ந்த ஞானமாகிய சிவமார்க்கத்தை அடைந்து உயிர் வாழ அருள் புரிவாயாக.

அயம்-இரும்பு; ஆடகம்-பொன்; நயம்-இன்பம்; சிவமயத்தை-சிவமார்க்கத்தை; வாரணவாசிப்பிரான்-அவிநாசிலிங்கர்; புயம்-தோள்; மருவுதல்-அடைதல்; மயில்-மயில் போன்றவள்; பொற்கொடி-பொற்கொடி போன்றவள். (68)

## அடைக்கலம்

69. 'பொன்னே சடிலப் [1]புராந்தகன் பாகம் பொலிந்திலங்கு
மின்னே கருணை விளைவே புராதன வேதங்கட்கும்
முன்னே புவன பகிரண்[2]டகோடி முழுதும்பெற்ற
வன்னே யென்னுயி ருன்னிரு தாளுக் கடைக்கலமே.'

பொன் போன்றவளே! திரிபுரங்களை எரித்தவனும் உயர்ந்தவனுமாகிய சிவபெருமாளின் ஒரு பாகத்தைப் பெற்று விளங்கும் மின்னலை ஒத்தவளே! கருணையே வடிவானவளே! மிக பழமை வாய்ந்த நான்மறைகளின் தோற்றங்களுக்கு எல்லாம் முன்பே இந்த ஈரேழு உலகங்களையும் தோற்றுவித்த அன்னையே என்னுடைய உயிரை உன்னுடைய மலர்போன்ற இரண்டு திருவடிகளிலே அடைக்கலமாக ஒப்புவிக்கின்றேன்.

புராந்தகன்-சிவபெருமான், திரிபுரம் எரித்தவன்; பாகம்-இறைவனின் ஒரு பகுதி; மின்-மின்னலை ஒத்தவள்; புராதன-பழமையான; புவனம்-உலகம்; பகிரண்டம்-பேரண்டம்.

1. புறாதகன் 2. கொடி. (69)

## கோள்

70. 'அடையார் பகையு முடிமன்னர் சீற்றமு மாணவத்தை
யுடையா ரியற்றிடுங் கோள்களு நாள்களு மூழ்வினையும்
விடையார்தென் புக்கொளி யார்வலப் பால்வளர் மின்னைவென்ற
யிடையார் திருவருள் பெற்றிருப் போரைவந் தென்செய்யுமே.

விடை ஆகிய எருது ஊர்தியை உடையவரும் திருப்புக்கொளி என்னும் தென்காசித் திருத்தலத்திலே எழுந்தருளி இருப்பவருமாகிய எம்பெருமானின் வலப்பாகத்திலே வீற்றிருப்பவளே! மின்னலை வென்ற இடையை உடைய தேவியே! உன்னுடைய திருவருளைப் பெற்று வாழ்ந்திருப்பவர்கள் இந்நிலவுலகத்தில் எந்தவிதமான பகையையும் அடைய மாட்டார்கள். முடியுடை மன்னர்களின் சீற்றம் அவர்களை ஒன்றும் செய்யாது. ஆணவம் உடைய அற்பர்கள் அவர்களுக்குச் செய்திடும் தீங்குகளும் அவர்களுக்குத் துன்பம் தராது. துன்பம் தருவனவாகிய கோள்களும் நாள்களும் அவர்களுக்குத் துன்பம் தராது. ஊழ்வினை என்பதும் அவர்களை ஒன்றும் செய்யாது.

சீற்றம்-கோபம்; கோள்கள்-விண்மீன்கள்; ஊழ்வினை -பழவினை; தென்புக்கொளியார்-அவிநாசித் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள அவிநாசிலிங்கர்; மின்னிடையார்-மின்னலை வென்ற இடையை உடைய தேவி (70)

## கவி மாலை

71. 'செய்யவும் பொன்னருள் மாறா தெனக்கருள் செந்தமிழால்
அய்யமில் கேள்வி யருங்கவி மாலையை யாய்ந்தெடுத்துக்
கையணி செய்தும் பாவே யிருந்தமந் தாரங்கமழ்
துய்ய பசுங்கழைத் தோளினுந் தாளினுஞ் சூடவுமே.

அன்னையே! இனிய செந்தமிழிலே அரிய யாவினை இயற்றிக் குற்றமற்ற கேள்வி ஞானத்தோடு கூடிய அரிய பாக்களால் ஆன அம்மாலையைத் தேர்ந்தெடுத்து உனக்கு அணிகலனாக அணிந்து மகிழவும் மந்தார மலர்களால் அர்ச்சிக்கப்பட்டு அம்மலர் மணம் கமழும் தூய்மையான உன்னுடைய திருவடிகளிலும் திருத்தோள்களிலும் அணிந்து உன்னுடைய மாறாத அருளினை எனக்கு அளித்து அருள்புரிவாயாக.

அருங்கவிமாலை-அரிய பாக்களால் ஆன மாலை; ஆய்ந்தெடுத்து-தேர்ந்தெடுத்து; கையணி-அணிவித்து; மந்தாரம்-செம்பரத்தை; கழை-கமுகு. (71)

## சீரடி

*72. 'சூடகப் பங்கயச் செங்கைமின் னேதமிழ்த் தோற்றமில்லா*
*மூடரைச் சேர முயக்கிவைத் தாலு முருந்தநகை*
*யாடகப் பூங்கொடி யேயெந் தன்பத்த தியாதெனினுன்*
*பாடகச் சீரடிப் போதையெக் காலமும் பன்னுவதே.'*

அழகிய வளையல்களை அணிந்ததும் தாமரை மலரை ஒத்ததுமாகிய சிவந்த கைகளையுடைய மின்னலை ஒத்த தேவியே! பரந்த புன்னகையோடு கூடிய பொற்கொடி போன்ற அம்மையே! தமிழ் மணம் அறியாத அற்பர்களைச் சேர்ந்து வாழும்படியான சூழ்நிலையை உண்டாக்கி அச்சூழ்நிலையிலே என்னை மயங்கச் செய்து அழுத்தி வைத்தாலும் அடியேன் அவர்களிடமிருந்து விலகுவேன். அவ்வாறு விலகும் என்னுடைய நோக்கம் யாதெனில் திருப்பாடகம் என்னும் காலணிகளை அணிந்துள்ள அழகிய உன்னுடைய திருவடித் தாமரைகளை எக்காலமும் போற்றிப் புகழ்ந்து பாடுவதேயாகும்.

சூடகம்-கைவளை; பங்கயம்-தாமரை; மயக்குதல்-மயங்கச் செய்தல்; முருந்தநகை-புன்னகை; ஆடகம்-செம்பொன்; பத்தி-நோக்கம்; பாடகம்-திருப்பாடகம் என்னும் காலணி. (72)

## ஒட்டார்

*73. 'பன்னவொட் டாருட் பரியவொட் டாருள்ள பாவனையா*
*லுன்னவொட் டார்நின் றுருகவொட் டாரைவ ருன்னைத்தஞ்ச*
*மென்னவொட் டாரென்ன செய்வேன்செய் தொண்டர்க்*
*[கெதிர்கொடுபோ*
*யன்னமிட் டாளுமணங்கேபெருங்கருணாலயமே.'*

என்னுடைய உயிருக்கு உணவளித்து இதுகாறும் பாதுகாத்து வரும் அணங்காகிய கருணாம்பிகையே! உன்னைப் புகழ்ந்து பாட விடமாட்டார்கள். உள்ளத்திலே அன்பு கொண்டு ஒழுக விடமாட்டார்கள். அந்த அன்பின் அடிப்படையிலே உன்னை நிலைத்து ஒழுக விடமாட்டார்கள். அன்பு உள்ளத்தோடு உன் எதிரிலே நின்று உருகிப் பாடவும் விடமாட்டார்கள். உன்னுடைய திருவடிகளிலே அடைக்கலம் புகவும் விடமாட்டார்கள். இத்தகு செயல்களையுடைய அற்பர்கள் இடையிலே சிக்குண்டு அடியேன் என்ன

செய்வேன்? அடியேனை அவர்களிடத்தில் இருந்து விலக்கி உன்னுடைய திருத்தொண்டர்களின் எதிரிலே கொண்டுபோய் அவர்களோடு உறவாட செய்வது உன்னுடைய கடமையாகும்.

பன்னுதல்-சொல்லுதல், பாடுதல்; ஒட்டார்-விடமாட்டார்; பரிதல்-அன்பு கொள்ளுதல்; உன்னுதல்-நினைத்தல்; தஞ்சம்-அடைக்கலம். (73)

## சம்பந்தர்

*74. 'ஆலையி லேறுங் கரும்பெனச் சிற்றிடை யார்மயலின்*
*மாலையுங் காலையு மாய்மெலிந் தேன்றுன்ப மாற்றுகண்டாய்*
*பாலையு ஞானப் பொருளையுஞ் சம்பந்தர் பாலளித்த*
*வேலையுஞ் சேலையும் வென்ற விலோசன மெல்லியலே.'*

திருஞானசம்பந்தருக்கு ஞானப்பாலை அளித்ததோடு அன்றி ஞானப்பொருளையும் அளித்து அருளிய அம்மையே! கூர்மையால் வேலாயுதத்தையும் அழகுப் பிறழ்ச்சியினால் கெண்டை மீனையும் வென்று விளங்கும் அழகிய கண்களை உடைய தேவியே! ஆலையிலே இடப்பட்ட கரும்பினைப் போல அழகிய மெல்லிய இடையினை உடைய பெண்களின் மய்யலில் மயங்கி காலையும் மாலையும் திரிந்து நொந்து மெலிவு உற்றேன். இனியேனும் அத்துன்பத்தினின்று நீங்கிக் கரை சேர அருள்புரிவாயாக.

ஆலை-கரும்பாலை; பால்-உமையம்மையின் ஞானப்பால்; வேல்-வேலாயுதம்; சேல்-மீன். (74)

## வேண்டுவது

*75. 'மெல்லியநூபுரப்பாதத்தையேயுள்ளிவிம்மிவிம்மி*
*புல்லிய பாசம் பொடியாக்கி மெய்யன்பு பூண்டுதமிழ்*
*சொல்லியென் கட்புன லாறாய்ப் பெருக்கித் தோள்கருப்பு*
*வில்லியைவென்றமின்னேயின்னுஞ்சுவைவேண்டுவதே.'*

தோளிலே கரும்பு வில்லைத் தாங்கியவனாகிய மன்மதனை வென்றவளாகிய உமாதேவியே! மென்மை வாய்ந்ததும் கிண்கிணியாகிய அணியை அணிந்ததுமாகிய உன்னுடைய திருவடிகளையே உள்ளத்திலே நினைத்து உள்ளம் விம்மிப் பூரித்து நிற்கிறேன். என்னுடைய அற்பத்தனமாகிய உலக பாச பந்தங்களையெல்லாம் விட்டொழித்து உள்ளத்திலே ஆழ்ந்த அன்பு பூண்டு உன் புகழைத் தமிழால் கூறிக் கண்ணீர் பெருக்கி மகிழ்கிறேன். என்னுடைய இச்செயல்கள் எல்லாம் உன்னுடைய திருவடிகளையடையும் பேரின்பச் சுவையை விரும்பி வேண்டுவதாகும்.

நூபுரம்-கிண்கிணியாகிய காலணி; விம்மி -பூரித்து; புல்லிய -அற்பமான பாசம்-பற்று; மெய்யன்பு-உண்மையான அன்பு; கட்புனலாறாய் -கண்ணீர் ஆறாகப் பெருக; தோள்கருப்பு வில்லி-தோளிலே கரும்பு வில்லைத் தாங்கிய மன்மதன். (75)

## வாருதி

*76. 'வேண்டப் படும்பொரு ணீயறி யாதல்ல விண்ணவருங்*
*காண்டற் கரிய கருணைமின் னேயிந்தக் காயமிங்கு*

*மாண்டற் கிருப்பினுமா.....பிற வாருதியைத்*
*தாண்டற் கிருப்பினும் [1]நானறி யேன்மற்றோர் தஞ்சமுமே.'*

தேவியே! அடியேன் வேண்டும் அன்புப் பொருள் நீ அறியாததன்று. தேவர்கள் எல்லாம் விரும்பினாலும் காண்பதற்கரியவளாக விளங்கி அடியோருக்குக எளிமையாகக் காட்சி தரும் கருணை உடையவளே! இவ்வுடம்பானது பிறப்பு எடுத்த இந்நிலவுலகத்திலேயே அழிந்து போவதற்குரியதாக இருந்தாலும், பிறவியாகிய பெருந்துன்பக் கடலிலிருந்து விடுபட்டு இப்பிறவியைத் தாண்டற்கு இருப்பினும், இப்பிறவியில் அடைக்கலம் என்று புகுவதற்கு உன்னைத் தவிர வேறு ஒருவரை நான் அறியேன்.

விண்ணவர்-தேவர்கள்; காண்டற்கரிய-காண்பதற்கு அருமையான; காயம்-உடல்; மாண்டல்-அழிந்துபோதல்; பிறவாருதி-பிறவியாகிய கடல்; தஞ்சம்-அடைக்கலம்.

1.நானரியேன் (76)

## விஞ்சைக் குளிகை

77. *'தஞ்சித் துனதுபொற் றாளிணை யாந்தெய்வத் தாமரைக்கென்*
*நெஞ்சைக்கொடுவந்து பூட்டிப்புன் மாய்கையில்*
[நெஞ்சம்வைக்கு
*மஞ்சப் புலன்களைப் பாரா துன்பொருள் பார்த்திடவோ*
*விஞ்சைக் குளிகை தருவாய் கருணை விளக்கினையே.'*

கருணை விளக்கே! உன்னுடைய பொன் போன்ற திருவடிகளாகிய தெய்வத்தாமரை மலர்களிலே என்னுடைய உள்ளத்தைக் கொண்டுவந்து இணைத்து அடைக்கலம் என்று புகுந்தேன். ஆயினும் உலக மாயங்கள் என்று சொல்லப்படும் அற்பப் பொருள்களிலே ஆசைகொண்டு, அதிலே உள்ளத்தை வைத்தற்குத் துணையாக இருக்கின்ற அடியேனுடைய ஐம்புலன்களைச் சிறிதும் பொருட்படுத்தாது அவற்றை விட்டு நீங்கி உன் புகழாகிய பொருள் ஒன்றையே நோக்கமாகக் கொள்ளும் உயர்ந்த பண்பாகிய கல்விப் பண்பினை எனக்குத் தந்து அருள் புரிவாயாக.

தஞ்சம்-அடைக்கலம்; பொற்றாளிணை-பொன் போன்ற இரண்டாகிய திருவடிகள்; நெஞ்சம்-உள்ளம்; ஐம்புலன்கள்-மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளால் நுகரும் உணர்வுகள், அவை: சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. விஞ்சை-கல்வி; குளிகை-மாத்திரை, பண்பு.

(77)

## சுந்தரர்

78. *'[1]விளங்கு மறைச்சிறு பாலனைச் சுந்தரர் வேண்டமுன்னாட்*
*[2]குளங்குகொள் [3]கராவிடந் தந்தபொன் னேயன்பு கூர்ந்தவர்தம்*
*முளங்கொ ளுனதருட் பார்வைக்கு [4]மீறின தோவென்மனக்*
*களங்க மதுகரு ணாம்பிகை யீதென்கொல் காரணமோ.'*

திருப்புக்கொளி கருணாம்பிகையே முன்னொரு காலத்தில் குளத்திலே உள்ள முதலையானது உட்கொண்ட ஒரு சிறுவனைக் குறித்துச் சுந்தரமூர்த்தி சாமிகள் வேண்டிக் கொண்டதன் பேரில் விழுங்கிய முதலையானது அக்குழந்தையை வெளிவிடச் செய்த அம்பிகையே! உள்ளத்திலே நிறைந்த அன்பு உள்ளவர்களாகிய தொண்டர்களிடத்திலே நீ கொண்டுள்ள அருட்பார்வை மிகவும் உயர்ந்ததாகும். ஆனால் உள்ளத்திலே களங்கம் நிறைந்த அடியேன்மீது அப்பார்வையானது படவில்லை. காரணம் என் மனம் உன்னுடைய இயல்பான அருட்பார்வைக்கு மீறி விளங்குகின்றது. இதற்குக் காரணம் என்ன நீயே கூறுவாயாக.

சிறுபாலன்-சிறுவன்; கரா-முதலை; களங்கம்-குற்றம்.

1. முழங்கு 2. குழங்கொள் 3. கறா 4. மீரினதோ. (78)

## அறம்

*79. 'காரணத் தாலண்டமி யாவையும் காக்கக்கங் காநதிசூழ்*
*வாரண வாசியி லெண்ணான் கறமுன் வளர்த்தவன்ன*
*பூரணி நீயென்னைப் பெற்றவ ளாகியி மான்பிறப்பிற்*
*கோரணி நான்கொள்ள லாமோயி தென்னென்று கூறுவதே.'*

இந்த நிலவுலகம் முதலான அனைத்து உலகத்தையும் காத்தல் பொருட்டாய்க் கங்கை நதிக் கரையிலே உள்ள வாரணவாசி என்னும் திருத்தலத்திலே உயர்ந்ததாகிய முப்பத்திரண்டு அறன்களையும் செய்தவளாகிய அன்னபூரணியே! உயர்ந்ததாகிய இந்தப் பிறப்பில் பலவகைக் கோளாறுகளை அடைந்திருக்கிறேன். நீ என்னைப் பெற்ற தாயாக இருந்தும் நான் இவ்வகைத் துன்பத்தை அடையலாமோ? இதன் காரணத்தைக் கூறிக் கடைத்தேற்றுவாயாக.

எண்ணான்கறம்-முப்பத்திரண்டு அறங்கள்; அன்னபூரணி-துர்க்கை; இமான் பிறப்பு-இம்மனிதப் பிறப்பு. (79)

## மனம்

*80. 'கூறுஞ்சொல் லெத்தனை யும்படி றேமனங் கூர்ந்துதினந்*
*தோறு நினைப்பது வுங்கப டேயிந்தத் தூலச்செய்கை*
*மீறு மகத்திய மெய்யாகில் நான்முத்தி வீட்டையுமா*
*றேறு விதம்புக் கொளிப்பெரு மாண்புள வல்லவையே'*

திருப்புக்கொளி பெருமானின் துணைவியாக வீற்றிருக்கும் தேவியே! அடியேன் கூறுகின்றச் சொற்கள் அத்தனையும் பொய்யும் வஞ்சமும் நிறைந்ததாகவே உள்ளன. என்னுடைய உள்ளமானது நாள்தோறும் ஆழ்ந்து நினைக்கின்ற செயல்களும் கபடம் நிறைந்தனவாகவே உள்ளன. இவ்வாறு உள்ளத்தாலும் சொல்லாலும் செயலாலும் மனிதச் செய்கையிலிருந்து மீறி நடக்கின்ற செயல் எதனால் என்பது புரியவில்லை. இச்செயலே நிலையாகத் தொடர்ந்து நடைபெறுமானால் அடியேன் உன்னை அடைகின்ற பெரும் பேற்றினைப் பெறுவது என்பது நடவாத செயலாக உள்ளது.

படிறு-பொய்; கபடம்-வஞ்சகம்; முத்தி-பெரும்பேறு; புனை-அணிந்துள்ள; வல்லவை -பார்வதி. (80)

## மறலி

81. 'வல்லதிண் பாரி லிருப்பமென் றாலு மறலியொட்டான்
அல்லவென் றாங்கிருப் போமாகிற் செய்யு மயனுமொட்டான்
எல்லையி லுற்பவத் தூடே சுழல்வெ னெனால்முடிந்த
தல்லவம் மாதெட் சணகாசி யம்பதி யம்பிகையே.'

தக்கணகாசி என்று சிறப்பு பெற்றத் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள அம்பிகையே! எல்லாம் நிறைந்த இந்நிலவுலகத்திலேயே நிலைத்து இருப்போம் என்று நினைத்தால் மறலியாகிய எமன் விடமாட்டான். இந்நிலவுலகத்தில் இருக்க வேண்டும் என்ற எண்ணத்தைக் கைவிட்டு வேறு உலகிலே இருப்போம் என்று கருதினால் படைப்புத் தொழிலை மேற்கொண்டவனாகிய பிரம்மதேவன் அச்செயலுக்கு சம்மதிக்க மாட்டான். இனைத்து என்ற அளவு எதுவும் இல்லாத மிகப்பெரும் துன்பம் நிறைந்த இப்பிறவிக் கடலிலே மூழ்கிச் சுழன்று துன்பப்பட என்னால் இயலாது. எனவே உன் அருளை வேண்டுகிறேன்.

திண்பார்-நிலவுலகம்; மறலி-எமன்; அயன்-பிரம்மதேவன், படைப்புத் தொழில் செய்பவன்; தெட்சணகாசியம்பதி-தக்கணகாசி என்னும் திருத்தலம், அவிநாசி. (81)

## அம்பரம்

82. 'அம்பர மெங்கணும் போய்க்கரை[1]கண்டறி யாதுவங்கத்
தும்பரின் மீட்டும்வந் துற்றபுட் போலவு மோரைம்புல
வெம்பரி யோடுளன் றோர்பய னும்மின்றி மீளவும்வந்
தெம்பெரு மாட்டி யுனையடைந் தேன்சர ணென்றுன்னியே.'

என்னுடைய தாயாகிய பெருமாட்டியே! ஒரு பறவையானது ஆகாயம் முழுமையும் சுற்றித் திரிந்து ஆகாயத்தின் எல்லையைக் கண்டு அறிய முடியாது மரக்கலங்களின் மூலமாக வந்து இறங்குகின்ற வானவா களைப்போல மீண்டும் திரும்பி வந்து நிலத்தை அடைகிறது. அப்பறவையினைப்போல இந்த உடலைச் செலுத்துகின்ற ஐந்து புலன்களாகிய கொடிய குதிரைகளைக் கொண்டு விளங்குகின்றேன். அவற்றால் இதுவரை ஒரு பயனையும் அறியேன். எனவே, பறவையின் செயல்போல மீண்டும் வந்து உன்னையே அடைக்கலம் என்று அடைந்தேன்.

அம்பரம் - ஆகாயம்; கரை - எல்லை; வங்கம் - மரக்கலம்; உம்பர் - வானவர், மேல்; குரம் - உடல்; பரி - குதிரை; சரணம் - அடைக்கலம்.

1. கரைகண்டரியாது. (82)

## படைப்பு

83. 'உன்னைத் துதிக்கவு முன்புகழ் பாடவு முன்னடியார்
தன்னைப் பணியவுந் தான்விதிக்காமலித் தாரணியில்
பொன்னைப் புடவையை நச்சிப்புல் லோர்க்கிதம் பொய்
[சொல்லவோ
யென்னைப்படைத்தது நீயவி நாசிக்கிறையவளே.'

அவிநாசித் திருத்தலத்தின் இறைவியாக விளங்குபவளே! இந்த நிலவுலகத்தில் பொன்னையும், பொருளையும், ஆடையையும், அணிகலன்களையும் பெற பெரிதும் ஆசைப்பட்டு அவற்றிற்காக அற்பர்களின் உள்ளம் மகிழுமாறு அவர்களுக்கு ஏற்ற நிலையில் பொய் சொல்லி என்னுடைய வாழ்க்கையை நடத்தி வருகிறேன். இந்த வாழ்க்கையை மேற்கொள்ள நீ என்னைப் படைத்து இருக்கின்றாய். இது மிகவும் வருந்தத் தக்கது. இதை விடுத்து நாள்தோறும் உன்னை மறவாமல் துதிக்கவும் உன் புகழையே பாடவும் உன் அடியார்களாகிய தொண்டர்களைப் பணிந்து வாழவும் எனக்கு அருள்புரிவாயாக.

துதிக்க - வணங்க; அடியார் - தொண்டர்கள்; தாரணி - உலகம்; பொன் - பொன்னாலாகிய ஆபரணங்கள்; புடவை - ஆடை. (83)

## பரமன்

84. *'இறைப்பொழு தேனு மவிநாசி லிங்க ரிடத்தகலா*
*மறைப்பொரு ளான கருணா லயத்தை மனத்திலுன்னா*
*ரறப்பெருந் துன்ப மிடியாற் பசியால்நொந் தற்பரைப்போய்ப்*
*புறக்கடை தோறும் பலிக்குழல் வாரிந்தப் பூவிடத்தே.'*

தேவியே! அவிநாசிலிங்கர் என்று பெயர் பெற்ற இத்திருத்தலத்து இறைவனிடத்திலிருந்து ஒரு சிறு பொழுதேனும் பிரிந்து அறியாதவள் நீ. திருமறைகளின் மூலப்பொருளாக விளங்குபவளும் நீயே ஆவாய். கருணையின் இருப்பிடமாக விளங்குபவளும் நீயே ஆவாய். இத்தகு சிறப்பு பெற்ற உன்னை எக்காலமும் மனத்தினால் சிந்தித்துத் துதிக்காதவர்கள் இப்பூமியில் என்றும் நீங்க முடியாத பெருந்துன்பம் அடைந்து வறுமையுற்றுப் பசியால் நொந்து வருந்தி உலோபிகளாகிய அற்பர்கள் மனையின் கடை வாயில்கள் தோறும் சென்று நின்று பிச்சை ஏற்று அலைவார்கள்.

இறைப்பொழுது-சிறுபொழுது; பலி-பிச்சை. (84)

## குரங்கு

85. *'பூவியை நான்முக[1] னூழ்வினை நோக்கிப் புரிந்துவிட்ட*
*வாவியை நான்கமந் தாசையைப் பற்றிப் படர்ந்த கொம்பிற்*
*றாவிய புன்குரங் கானே னெனையம்மை தாங்கிடினும்*
*பாவியென் றேதள்ளி னாலுமுன் சித்தமென் பாக்கியமே.'*

அன்னையே நீ எழுந்தருளி இருக்கின்ற இத்திருத்தலத்தையும் பிரம்மதேவன் தன் ஊழ்வினையால் இத்தலத்தில் வந்து தவம் புரிந்தபோது தோற்றுவித்த தீர்த்தக் குளத்தையும் நீங்க இயலாதவனாய் என் உள்ளத்திலே தாங்கி நிற்கின்றேன். இந்த ஆசையினால் பற்றிப் படர்ந்த கொம்பில் தாவித் திரிகின்ற குரங்கினைப் போல இவ்விடத்தை விட்டு நீங்காது நான் அலைந்து திரிகின்றேன். அம்மையே! அடியேனை அருள்புரிந்து ஆதரித்தாலும் அல்லது பாவி என்று ஒதுக்கித் தள்ளினாலும் எல்லாம் உன் திருவருளே யாகும். எனக்கு அருள்புரிந்து தாங்கினால் அது நான் பெற்ற பேறு ஆகும்.

நான்முகன்-பிரம்மதேவன்; ஊழ்வினை-பழவினை; வாவி-குளம்.

1. நான்முகலூள்வினை.

(85)

### வாக்கு

86. 'பாக்கியஞ் செய்தன மேமன மேயருட் பாமதுரந்
தேக்கி யிருந்தவர் [1]செய்தமிழ்ப் பாடற் றிருச்செவிக்கு
ளாக்கிய வாக்கரு ளுங்கரு ணாம்பிகை யம்மைநல்ல
வாக்கிய மாக்கிநம் [2]புன்றமிழ் மாலை வனைந்திடவே.'

ஏ மனமே! நாம் மிகவும் பேறு பெற்றோம் ஏனெனில் பொருட்சிறப்பும் சொல்லழகும் ஓசை இனிமையும் பொருந்திய தேவியின் தொண்டர்கள் பாடி அருளிய தமிழ்ப் பாடல்களைத் தன் திருச்செவிகளால் கேட்டு அத்தொண்டர்களுக்கு வேண்டும் வரம் அருளும் கருணை உள்ளம் படைத்தவள் அம்பிகையே. அவள் நம்முடைய மிக எளிமையான தமிழ்ப் பாமாலையைக் கேட்டு அவற்றைச் சிறந்த பொருள் பொதிந்த வாக்கியமாக ஏற்றுக்கொண்டு விட்டாள். எனவே நாம் பெரும் பேறு பெற்றவர்கள் ஆவோம்.

பாமதுரம்-பாட்டின் இனிமை; வாக்கு -சொல்; புன்றமிழ்மாலை-தமிழ்ப் பாமாலை.

1. செய்தமிள் 2. புன்றமிள் (86)

### சிற்றடி

87. 'வளைந்திடு மேகலை யுங்குழைந் தோடு மணிச்சிலம்பும்
புனைந்திடு சிற்றடிப் பொற்றா மரையுமெப் போதுமுள்ள
நினைந்துடன் முற்றும் புளகமுற் றானந்த நீடிக்கண்ணீர்
நனைந்திட [1]நான்றொழச் செய்வாய்தென் புக்கொளி நாயகியே.'

தென் திருப்புக்கொளி நாயகியே! உன் இடையிலே மேகலை என்னும் ஆபரணம் வளைந்து நெருக்கி நிற்கிறது. திருச்செவிகளிலே தோடுகள் மிளிர்கின்றன. திருவடிகளிலே மாணிக்க மணி பொருந்திய சிலம்புகள் ஒலித்து நிற்கின்றன. இத்தகு சிறப்பு வாய்ந்த உன்னுடைய பொன்போன்ற திருவடித் தாமரைகளை என்னுடை உள்ளத்திலே எக்காலமும் நினைத்திடவும் என்னுடைய உடல் முழுவதும் புளகாங்கிதம் உற்றுப் போரனந்தக் கண்ணீர் வடித்து இவ்வுடலை நனைத்து உன்னைத் தொழுதிடவும் எனக்கு அருள்புரிவாயாக.

மேகலை-மகளிர் அணிகின்ற இடையணி; குழை-காதணி; மணிச்சிலம்பு-மாணிக்க மணி பொருந்திய சிலம்புகள்; பொற்றாமரை-பொன் போன்ற தாமரை மலர்.

1. நான்றொள. (87)

### வீடு

88. 'நாயைத் திரிந்து மடவார்சிற் றின்ப நசைபிடித்த
பேயைப் பிடித்து மயலொழித் தாண்ட பெருங்கருணைத்
தாயை யுயிர்க்குத் தனித்துணை யைத்தரிப் பாகமன
மேய்ப் பணிமின்கண் டீரமர் வீட்டின்ப மெய்துதற்கே.'

அம்மையே! மடப்பம் பொருந்தியவர்களாகிய மகளிர்மீது கொண்ட சிற்றின்ப ஆசையினால் நாயினைப்போல அலைந்து திரிந்து வருகிறவர்களுடைய ஆசை பேயைப் பிடித்து அவர்களைப் பிடித்திருக்கின்ற மையலை ஒழித்து ஆட்கொண்டு அருள்புரியும் பெருங்கருணை வாய்ந்தவள் நீ. எல்லாவுயிர்க்கும் தாயாக விளங்குபவளும் ஒப்பற்ற துணையாக நிற்பவளும் நீயே ஆவாய். இத்தகு சிறப்புப் பேற்றினை அடைவார்கள்.

மடவார்-மடப்பம் பொருந்திய மகளிர்; மயலொழித்து-மயக்கத்தை நீக்கி; வீட்டின்பம்-பேரின்பப் பேறு. (88)

## தீவினை

*89. 'எய்தற் கரியதோர் மானிட தேக மெடுத்துமின்ன*
*முய்தற் குறுதி யுளத்தில்லை யேன்பின்னு முற்பவித்தல்*
*செய்தற் கிடஞ்செய் தனல்லாமல் வேறிலன் றீவினையே*
*நெய்தற் கருங்கட் டிருவலி நாசித் திருவமலையே.'*

அவிநாசித் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள நெய்தல் மலர் போன்ற அழகிய கண்களையுடைய மாசற்றவளாகிய தேவியே! அடியேன் உயிர்கள் அடைதற்கு அரியதாகிய ஒப்பற்ற மானிடப் பிறவியினை எடுத்து இருக்கிறேன். அவ்வாறு இருந்தும் இவ்வுடலுக்கு உறுதி பயப்பதாகிய பேரின்பப் பேற்றினை அடையும் வழிகளை உள்ளத்தில் சிறிதும் நினைத்துப் பாரேன். மேலும் இவ்வுலகில் பல பிறவிகளை எடுத்து வருந்துதற்குரிய செயல்களைச் செய்து வருகிறேயன்றி நல்வினைகள் ஏதும் செய்து அறியேன். இச்செயல் என்னுடைய முன்வினைப் பயனையே சுட்டுவதாக அமைகிறது.

எய்தல்-அடைதல்; மானிட தேகம்-மனிதப்பிறவி; நெய்தல்-நெய்தல் மலர். (89)

## மெழுகு

*90. 'மலைப்பான் மறக்கு மனத்துரை யாமற வாவுறுதி*
*நிலைப்பார் மனத்தில் நிலைபெறு வாளவர் நெஞ்சகத்தை*
*வுலைப்பான் மெழுகி னுருக்கிடு வாள்கரு வுற்பதத்தைத்*
*தொலைப்பாள் பெருங்கரு ணாலய வானந்தச் சுந்தரியே.'*

பெருங்கருணையும் ஆனந்தம் தரும் அழகும் வாய்ந்தவளாகிய தேவியானவள் உள்ளத்திலே மாறுபாடும் மயக்கமும் கொண்டு அவளது அருளை மறப்பவர்களின் உள்ளத்தில் என்றும் நிலைத்து நிற்க மாட்டாள். ஆனால் அவளது அருளை மறவாது உறுதிபூண்ட உள்ளத்தோடு அவளையே துதித்து நிற்பவர்கள் உள்ளத்தில் என்றுமே நிலைபெற்று வீற்றிருப்பாள். அப்படிப்பட்ட அன்பர்களின் உள்ளத்திற் குடியிருந்து உலையில் இடப்பட்ட மெழுகினைப்போல அவர்கள் உள்ளத்தை உருக்கிவிடுவாள். மீண்டும் கருக்குழியிலே சார்ந்து பிறவி எடுக்கும் செயலை அடியோடு நீக்கிவிடுவாள். (90)

## பங்கேருகம்

*91. 'தரிக்குந் தியான மனவன் டுதாகந் தவிர்மெய்த்தேன்*
*விரிக்குநின் சேவடிப் பங்கேரு கத்துண்டு வீற்றிருப்பத்*

*தெரிக்கு முணர்வை யழித்தித் திரோப வந்தீர்த்தருள்வாய்*
*அரிக்கு மயனுக்கு மெட்டாம் வனப்பங்க மாந்தவளே.'*

திருமாலுக்கு பிரம்மதேவனுக்கும் எட்டாத தன்மையுடைய இயல்பையும் இறுதியையும் பெற்றவளாகிய அம்மையே! மலர்தோறும் அலைந்து திரியும் வண்டினைப்போல தியானத்தில் நிலைபெற்று நிற்காத உள்ளத்தின் உணர்வாகிய தாகத்தை ஒழித்து உன்னை அடையும் தியானத்தை மேற்கொள்ள அருள்புரிவாய். உனது திருவடிகளாகிய தாமரை மலர்களில் சூழ்ந்து இனிய தேனையுண்டு வண்டுகளைப்போல வீற்றிருக்கும் உள்ளத்து உணர்வுகளை அழித்து இந்த நிலையற்ற உடல் வாழ்க்கையை ஒழித்து மறுபிறவி எடுக்காதவாறு அருள்புரிவாயாக.

தியானம்-இடையறாத நினைவு; மெய்த்தேன்-இனிய தேன்; சேவடி-திருவடி; பங்கயம்-தாமரை; அரி-திருமால்; அயன்-பிரம்மதேவன். (91)

## புயம்

92. *'அமரணி தானவர் திண்புயஞ் செம்புனலாறுபடச்*
*சமரிடு வேற்கைக் கடம்பணி தாள்புயச்சண்முகப்பொற்*
*குமரனை யீன்ற கருணாலயவல்லி கோதிலன்பர்*
*தமருட னென்னைக் கூட்டிவைத் தாள்சஞ் சலமறவே.'*

பெரும் போரினையே தங்களது அணிகலன்களாக தரித்திருக்கும் அசுரர்களுடைய வலிமை பொருந்திய தோளகளானவை இரத்த வெள்ளமாகிய ஆற்றிலே விழுந்து மிதக்குமாறு போர் செய்பவனும் வேலாயுதத்தைக் கையிலே ஏந்தியவனும் கடப்ப மாலையை அணிந்தவனும் வலிமை பொருந்திய புயங்களையுடையவனும், ஆறுமுகங்களை உடையவனுமாகிய குமரப் பெருமானை ஈன்ற கருணாலயச் செல்வியாகிய உமையம்மையார் அடியேனைக் குற்றமற்ற அன்பர்களாகிய தொண்டர் குழுவில் என்னையும் ஒருவளாகச் சேர்த்து என்னுடைய துன்பங்களையெல்லாம் நீக்கினாள்.

அமர்-போர்; புயம்-தோள்; செம்புனலாறு-சிவந்த இரத்த வெள்ளமாகிய ஆறு; வேற்கை-வேலாயுதத்தை ஏந்திய கை; கடம்பணி-கடம்ப மாலை; தாள்புயம்-வலிமை பொருந்திய தோள்கள்; சண்முகம்-ஆறு முகங்களை உடைய முருகப்பெருமான்; ஈன்றவள்-பெற்றவள்கோதிலன்பர் -குற்றமற்ற தொண்டர். (92)

## சேவடி

93. *'சஞ்சலம் போக மிடிபோக நெஞ்சகந் தன்னிலுள்ள*
*வஞ்சகம் போக மறம்போக மெத்த மயல்செய்புலன்*
*னஞ்சகம் போகப் பணிமின்கண் டீர்கரு ணாலயப்பெண்*
*செஞ்சிலம் பாலிக்குஞ் சேவடி யைத்தினஞ் சென்றடுத்தே.'*

இவ்வுலக வாழ்க்கையிலே தோன்றுகின்ற துன்பங்கள் எல்லாம் நீங்கவும், வறுமையானது அகலவும், உள்ளத்திலே உள்ள பொய்யும் மாயையுமாகிய வஞ்சக எண்ணங்கள் நீங்கவும், தீமை முதலாகிய தீச்செயல்கள் நீங்கவும் உலக

மயக்கத்தை தருகின்ற ஐம்பொறிகளின் உணர்வுகளாகிய ஐம்புல நஞ்சானது அகலவும் தென்காசித் திருத்தலத்திலே வீற்றிருக்கின்ற செஞ்சிலம்புகள் ஒலிக்கின்ற திருவடிகளையுடைய கருணாலயச் செல்வியின் திருத்தலத்திற்கு நாள்தோறும் சென்று அவளது திருவடிகளைப் பணிவீர்களாக.

சஞ்சலம்-துன்பம்;வஞ்சகம்-பொய்; மயல்-மாயை; சிலம்பாலிக்கும்-சிலம்புகள் ஒலிக்கும்; சேவடி-சிவந்த திருவடி. (93)

## வினை

94. 'அடுக்குல கீன்ற கருணைக் கடைக்கண் ணருளைப்பெற்றால்
ஒடுக்கிட லாம்வினை யாற்றலை யாற்றா முயர்ந்திடலாம்
திடுக்கிடச் சிந்தை திகைத்திட வேசின்ன பின்னஞ்செய்து
முடுக்கிட லாமெம தூதரைத் தென்திசை முட்டவுமே.'

மேலும் கீழும் என்று அடுக்கப்பட்ட ஈரேழு பதினான்கு உலகையும் ஈன்று எடுத்தவளாகிய அம்மையின் கருணைக் கடைக்கண் செலுத்தும் திருவருளைப் பெறுவோமாயின் முன்வினைப் பயனால் ஏற்பட்ட தீச்செயல் களையெல்லாம் அடியோடு ஒடுக்கி விடலாம். அவ்வினை களிலிருந்து நீங்கி உயர்வு அடையலாம். நம்மை வந்து சாரும் எமத்தூதர்களை திடுக்கிடச் செய்து உள்ளம் திகைத்திடச் செய்து, சின்னாபின்னமாகத் தென்திசை நோக்கி ஓடச்செய்து முடுக்கிவிடலாம்.

அடுக்குலகு-பதினான்கு உலகங்கள்; வினை-முன்வினை;தூதர்-எமதூதர்; தென்திசை-தெற்குத்திசை. (94)

## வல்லி

95. 'முட்டலில் லாது மலர்தூ விச்செங்கை முகிழ்ப்பவளர்
சிட்டரின் மேன்மை சிறக்கவைப் பான்செஞ் செண்பகத்தின்
மட்டவிழ் புக்கொளி வல்லிதன் கோயில் வரங்கொள்பணிக்
கிட்டமில் லாரைக்கை விட்டிடு வாளிங் கிடர்ப்படவே.'

தேவியானவள் எழுந்ருளியுள்ள திருப்புக்கொளி திருத்தலத்தை அடைந்து தடையின்றி மலர்தூவி நாள்தோறும் செங்கை குவித்து வணங்குகின்ற அடியவர்களாகிய திருத்தொண்டர்களின் மேன்மையை யெல்லாம் உயரச் செய்வாள், செண்பக மலர்கள் நிறைந்த அத்திருத்தலத்தின் கோயிலை அடைந்து பணிந்து வரங் கொள்ளும் செயலைச் செய்ய விரும்பாவதர்களை இவ்வுலகிலேயே இருந்து துன்பப்படும்படியாகக் கைவிட்டுவிடுவாள்.

முட்டலில்லாது-தடையின்றி; செங்கை-சிவந்த கைகள்; முகிழ்ப்ப-குவித்து; சிட்டர்-தொண்டர்; செண்பகம்-செண்பக மலர்; (95)

## வெற்பு

96. 'இடரும் பிணியு மயக்கமு நல்கி யேழுவகையாய்த்
தொடரும்பவத்தில்விடாதையம் மாசெந்துகிர்வனம்போ

* *லடருஞ் சடிலத் தவிநாசி முக்கண்ண மலர்வெற்பின்*
*படருந் திருக்கரு ணாலயப் பச்சைப் பசுங்கொடியே'*

சிவந்த பவளச் சோலை போலச் சிவந்த சடையுடைய அவிநாசித் திருத்தலத்திலே எழுந்தருளியுள்ள முக்கண்ணனாகிய மலர் மலைமீது படர்ந்து விளங்கும் பசுங்கொடி போன்ற திருக்கருணாலயத் தேவியே! இவ்வாழ்க்கையில் ஏற்படும் பலவகைத் துன்பங்களும் நோய்களும் மனமயக்கங்களும் என்னை வந்து அடையுமாறு செய்து பலவகையான அவத்தைகளிலே மூழ்கச் செய்து அவற்றால் தொடரும் பாவத்தினாலே எனக்கு அழிவு ஏற்படுமாறு அடியேனை விட்டுவிட வேண்டாம்.

செந்துகிர்வனம்-சிவந்த பவளக்காடு; சடிலம்-சடை முக்கண்ண மலர்மலை -முக்கண்ணனாகிய மலர் மலை; பச்சைப் பசுங்கொடி- பசுமை நிறம் பொருந்தி கொடி போன்ற இளமை வாய்ந்த தேவி. (96)

## செந்தமிழ் வாணர்

97. *'உய்தவத் தோர்திரு நாவினும் [1]வேதத்தி னுச்சியினும்*
*மைதவி ரானந்த வைதிகச் [2]செந்தமிழ் வாணரன்பிற்*
*செய்தநற் பாவினுந் திண்புலன் காமச் செருகனைத்தும்*
*கொய்தவர் நெஞ்சினு மாலைய மாய்க்குடி கொண்டவளே.'*

அம்மையே! நீ சிறந்த தவத்தினை உடையோர் நாவிலே குடிகொண்டவள். வேதத்தின் உயர்ந்த பொருளாய் வீற்றிருப்பவள். குற்றமற்ற மகிழ்ச்சியை ஊட்டக்கூடிய செந்தமிழ் வாணர்கள் அன்பினாலே இயற்றி அருளிய பாக்களிலே வீற்றிருப்பவள். ஐம்பொறிகளின்வழி ஏற்படும் காமம் முதலாகிய புலன்களை விட்டொழித்தவர்களுடைய நெஞ்சிலே குடியிருப்பவள்.

உய்தவம்-சிறந்த தவம்; கொய்தவர்-விட்டொழித்தவர்.

1. வெதத்தின் 2. செந்தமிள். (97)

## நஞ்சு

98. *'கொண்டால் நஞ்சமு தாக்கிய கேள்வன் கொடுத்தகொன்றைத்*
*தண்டா ரணிசிவ சங்கரி யேயின்னந் தானுமென்னைத்*
*திண்டா ரணியிற் செனிக்கவிட் டாலுமுன் சேவடிக்குத்*
*தொண்டான் தொண்டிற்குத் தொண்டாய்ப் பணிசெய்யத்*
*[தோற்றிவையே.'*

அம்மையே! கடலிலே தோன்றிய நஞ்சினை அமுதமாக ஆக்கித் தேவர்களுக்கு அளித்த எம்பெருமானாகிய உமது கணவர் அளித்த கொன்றை மாலையை அணிந்த சிவசங்கரியே! வலிமை பொருந்திய இந்நிலவுலகத்தில் அடியேனை மீண்டும் மீண்டும் பிறக்கச் செய்தாலும் உன்னுடைய திருவடிகளிலே செய்யும் தொண்டிற்கு உகந்தவனாய் திருத்தொண்டனாயத் தொண்டு ஆற்றும் பணி செய்து உய்ய எனக்கு அருள்புரிவாயாக.

கேள்வன்-தலைவன்; இறைவன்; கொன்றை-கொன்றை மாலை; சிவசங்கரி-உமாதேவி; செனிக்க-பிறக்க. (98)

## கைம்மாறு

99. *'வல்லிக் கவண்களை யாற்கர மாதி விடையர்செய்யும்*
*மல்லிற் பெரிதிரு மார்புறு மூர்க்கன் மனவயிரக்*
*கல்லைக் குலைத்துக் [1]கனியாக்கிக் கொண்ட கருண்ணமலை*
*வல்லிக்கு நாயடி யேன்செய்ய வேறோர்கைம் மாறிலையே.'*

தொண்டை நாட்டிலே விளங்கிய மூர்க்கநாயனார் என்னும் சிவத்தொண்டர் தனது மனவலிமையினாலே தம்முடைய பொருளை யெல்லாம் இழந்த நிலையில் சூதாட்டம் முதலான தீச்செயல்களால் பொருள் ஈட்டி அப்பொருளைக் கொண்டு செய்த பூசைகளையெல்லாம் வல்லிக்கவண் ஏந்தியவரும், விடைப்பாகருமாகிய எம்பெருமானின் திருவிளை யாடல்களைப்போல மனம் உவந்து இனிமையாக ஏற்றுக் கொண்டவளாகிய கருணை நாயகியே! வல்லிக்கொடி போன்றவளாகிய உனக்கு நாயினும் கடையேனாகிய நான் செய்யத் தகும் கைம்மாறு வேறு எதுவுமே இல்லையாகும்.

1. கறியாக்கி. (99)

## கருணைப் பெருந்திரு

100. *'மாறாத மாய வுலகப்பொய் [1]வாழ்க்கையை வாந்திசெய்த*
*சோறாகக் கண்டு சரணாம் புயஞ்சிரஞ் சூடிக்கண்ணீ*
*ராறாய்மெய் யன்புகொண் டென்னா ருயிருன் னடிநிழற்கீழ்ப்*
*வேறாக வைத்தரு ளம்மா கருணைப் பெருந்திருவே.'*

கருணாம்பிகையாகிய செல்வநாயகியே! இவ்வுலக வாழ்க்கையானது மிகவும் மாயம் நிறைந்தது!. அம்மாயம் மாறாத் தன்மையுடையது. அதனால் அது உண்மையிலிருந்து மாறிய பொய் வாழ்க்கையாகவே அமைகிறது. எனவே அதனைத் தூய உணவாகக் கருதாமல் உண்டு வாந்தி எடுத்த தூய்மையற்ற உணவாகவே கருதுகிறேன். எனவே தேவியாகிய உன்னுடைய திருவடித் தாமரைகளை என்னுடைய தலைமீது ஏற்று உள்ளார்ந்த அன்பு கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்து என்னுடைய உயிரை உனது திருவடியின் நிழலிலே மரத்தின் அடிவேராகக் கருதி வைக்கின்றேன். அவ்வுயிரை ஏற்று எனக்கு அருள்புரிவாயாக.

1. வாள்க்கை. (100)

**கருணையம்மன் அந்தாதி முற்றும்**

# தனிப்பாடல்கள்

## தென்காசி

1. *'கொடிபடுந் தானைப் பிரமாதி யிரந்திரர் கோமகுட
மடிபடத் தாறா மவள்சன் னியதான மடைந்துவினை
பொடிபட நின்று [1]புகழார்தென் காசியைப் போய்மதியார்
செடிபடும் வாழ்வுகந் தார்சென்மந் தானென்ன சென்மங்களோ.'*

தங்கள் தங்களுக்குரிய அடையாளக் கொடிகளை ஏந்திய சேனைகளையுடையவர்களாகிய பிரம்மன் முதலாகிய தேவர்கள் விழுந்து வணங்குதாலே அவர்களுடைய மணி மகுடமானது தேவியின் திருவடிகளிலே பட்டு அத்திருவடிகள் காயம் உடையவை ஆகின்றன. அவளுடைய இயல்புத் தன்மையினையடைந்து வணங்கியவர்களுடைய தீவினைகள் எல்லாம் பொடிபட்டு அழிகின்றன. அப்படிப்பட்ட புகழ் வாய்ந்த தென்காசித் திருநகரை அடைந்து அத்தேவியை வணங்காதவர்களாய்த் துன்பம் நிறைந்த இவ்வுலக வாழ்க்கையை மட்டுமே விரும்பி வாழுகின்ற மக்கள் சிறந்த மக்களாகக் கருதப்படமாட்டார்கள்.

1. புகளார்.

## மங்கலவல்லி

2. *'சென்மம் பலவதிற் றிகழப் பலவந்தத் தேகத்துக்குக்
கன்மம் பலவுமுன் னிசெய்த கற்பனை காண்பவர்யார்
மன்மந் தரங்கடை நஞ்சினுக் கெஞ்சின மாலயனுன்
பொன்மங் கலவல்லி யாலின்று யர்ந்தனன் பொன்வல்லியே.'*

இந்நிலவுலகில் எடுக்கப்படுகின்ற ஜென்மங்கள் பலவாகும். அவற்றுள் சிறந்து விளங்குகின்ற உடலாகக் கருதப்படுவது இம்மானிட உடலாகும். அவ்வுடலின் செயல்களாகப் பலவற்றையும் நினைத்து நினைத்து கற்பனை செய்தவர்கள் அதன் உண்மையைக் கண்டு அறியார். திருமாலும் அயனுமாகிய தேவர்கள் அவ்வுண்மைகளைக் கண்டறியாது எஞ்சிநின்றனர். அவர்கள் இருவருமே வல்லிக்கொடி போன்றவளாகிய உனது கருணையினால் உயர்ந்து விளங்குகிறார்கள்.

## துணைநூல் பட்டியல்

1. அபிதான சிந்தாமணி, ஆ. சிங்காரவேலு முதலியார், ஏசியன் எடுகேஷனல் சர்வீஸஸ், புதுதில்லி - 110 016, 1981.

2. அல்லியரசாணி மாலை, புகழேந்திப்புலவர், பதிப்பித்தவர்: இரத்தின நாயகர் அண்ட் ஸன்ஸ், சென்னை-1, 1980.

3. அளிநாசிலிங்கேசுவரர் திருக்குட நன்னீராட்டு விழா மலர், திருப்பணிக்குழு, அவிநாசி, 1980.

4. இலக்கணத்தொகை - யாப்பு - பாட்டியல், டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113, 1983.

5. கந்தபுராணச் சருக்கம், ஸ்ரீசம்பந்த சரணாலய சுவாமிகள், தருமையாதீனம், ஞானசம்பந்தம் அச்சகம், தருமபுரம், 1964.

6. கந்தர் அனுபூதி விளக்கம், கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் லிமிடெட், சென்னை-18, 1978.

7. கம்பராமாயணம் (பாலகாண்டம்). டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், திருவான்மியூர், சென்னை-90,1967.

8. சிலப்பதிகாரம், இளங்கோவடிகள், திருநெல்வேலி தென்னிந்திர சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை-1, 1968.

9. சிவஞானபோதம் மூலமும் உரையும், பதிப்பாசிரியர்: ஔவை சு. துரைசாமிப்பிள்ளையவர்கள், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாரால் வெளியிடப்பெற்றது-1968

10. சீவகசிந்தாமணி, திருத்தக்கதேவர், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1.

11. சுந்தமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த தேவாரம், திரு. கி.வா. ஜகந்நாதன், கலைமகள் ஆசிரியர், சென்னை, 1982.

12. தண்டி அலங்காரம், சுப்பிரமணிய தேசிகர் உரை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1971.

13. தமிழ் இலக்கிய வகையும் வடிவும், டாக்டர் ச.வே.சுப்பிரமணியன் தமிழ்ப் பதிப்பகம், சென்னை-96, 1984.

14. தமிழ்மொழி அகராதி, நா. கதிரைவேற்பிள்ளை, ஏசியன் எடுகேஷனல் சர்வீஸஸ், புதுதில்லி,-110 016, 1981.

15. திராவிட மொழி இலக்கியங்கள், டாக்டர் ச.வே.சுப்பிரணியன். உலகத் தமிழராய்ச்சி நிறுவனம் , சென்னை-113, 1983.

16. திரு. அவதார ஆதியான திருவருள் விளக்க தோத்திரம், வீடேஸ்வரம் சிவசண்முக மெஞ்ஞான தேசிகர், சுவடி எண்.19, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

17. திருப்புகழ், அருணகிரிநாத அடிகள், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை-1, 1964.

18. திருப்புகழ் விரிவுரை (மூன்றாம் படை வீடு), அருணகிரிநாதர், உரையாசிரியர்: திருமுருக கிருபானந்த வாரியார், வானகி பதிப்பகம், சென்னை-17. முதற்பதிப்பு: 1865, ஏப்ரல்,

இரண்டாம் பதிப்பு:1967 மார்ச், மூன்றாம் பதிப்பு: 1979, அக்டோபர்.

18. திருவாசகம், மாணிக்கவாசகர், உரையாசிரியர்; இரத்தின சபாபதி பிள்ளை, முருகன் அச்சகம், சென்னை-14, 1973.

19. திருவிளையாடற்புராணம் (மதுரைக்காண்டம்0, ஆசிரியர்: பரஞ்சோதி, பதிப்பாசிரியர்: வண்கவி வள்ளல் இராய. சொ., மதுரை, 1973.

20. தேவிகாலோத்திரம், சுவடி எண்.2, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113.

21. பாட்டியலும் இலக்கிய வகைகளும் ந.வீ.செயராமன், இலக்கியப் பதிப்பகம், சென்னை-18, 1981.

22. பிரபந்தத்திரட்டு, டாக்டர் அன்னி தாமசு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113, 1980.

23. பிரபந்த மரபியல், மு. அருணாசலம், பத்தாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு, திருச்சிற்றம்பலம், 1971.

24. பெரியபுராண வசனம் (அல்லது) திருத்தொண்டர் வரலாறு, புலவர். அரசு, கழக வெளியீடு, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக லிமிடெட் சென்னை-1, மதுரை-1, திருநெல்வேலி-6, 1968. முதற்பதிப்பு: 1949 பிப்ரவரி.

25. மேற்கோள் விளக்க கதை அகர வரிசை, 1,2., சு.அ. இராமசாமிப்புலவர், திருவெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி-6, 1963.

26. யாப்பருங்கலக்காரிகை, வேங்கடசாமி நாட்டார் அவர்கள், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-108, 1940.

# சொல்லடைவு